களிம்பு நீங்கிய பொன்னுக்கும் ஏனைப் பொன்னுக்கும் வேற்றுமையின்மையால், பொன்னே களிம்பொடுகூடிச் செம்பாயிருந்தது; களிம்பு நீங்கியபின் பொன்னுயிருந்தது; அதுபோல, சிவம் ஒன்றே மலத்தொடு கூடிச் சீவனுயிருந்தது; மலம் நீங்கிய பின் சிவமாயிருந்தது என்னலாகாதோவெனின், ஆகாது. என்னை? கூறுதும். களிம்பு நீங்கிய பொன்னையன்றி இயல்பாகவே களிம்பு சம்பந்தப்படாத பொன்னும் உண்டு. அதற்குப் பொன்னென்றும், களிம்பு சம்பந்தமுடையதற்குச் செம்பென்றும் பெயர். இவ்விரண்டும் உலோகம் என்னும் சாதியால் ஒற்றுமையுடையன. ஆயினும், களிம்பு சம்பந்த உண்மையும் இன்மையும் பற்றி வேறுபாடும் அநாதியேயுள்ளன. களிம்பு நீங்கிய பின் சாதியொற்றுமையால் பிரித்தறிய வாராது விளங்கும். இவ்வாறே மலசம்பந்தமில்லாத சிவமும் மல சம்பந்தமுடைய உயிரும் அநாதியேயுள்ளன. இவ்விரண்டும் சித்தென்னுஞ் சாதிப் பொதுமையால் ஒற்றுமையும், மலத்தடையின்மையும் உண்மையும் உடைமையால் வேற்றுமையும் உடையன. உயிருக்கு யாதானுமொன்றைச் சார்ந்து அதன்வண்ணமாய் நிற்பது இயல்பாதலின் மலத்தைச்சார்ந்து அதன் மயமாய் நின்றவுயிர், அதனினின்றும் நீங்கிச் சிவத்தைச்சார்ந்தபொழுது சிவமாய் நிற்கும். நிற்பினும், பொருட்டன்மையால் சிவமாயிருக்கும் உயிரின் வேருகச் சிவமுண்டு. பொருட்டன்மையால் வேறாயினும் சிவம் வேறு சிவமாய் நிற்கும் உயிர் வேறெனப் பிரித்தறியவாராவாம். அங்ஙனமாயின், இருபொருளுண்மை கொள்வானேனெனில், எல்லாப் பொருள்களையும் ஒருசேர அறியும் தன்மை சிவத்துக்கும், அவ்வாறன்றிச் சிவமொன்றனையேயறியும் தன்மை சிவமாய் நிற்கும் உயிருக்கும் உண்மை பற்றி இருபொருளுண்மை கொள்ளப்படுமென்க.

சிவத்தைச்சார்ந்து சிவமாய் நின்ற உயிருக்குச் சிவம் போல எல்லாப் பொருளையும் அறியமுடியாமைக்குக் காரணம் என்னையெனின், சார்ந்ததன்வண்ணமாம் தன்மையே காரணமென்க. சாரப்பட்ட பொருள் எல்லாம் அறியவும், சார்ந்த பொருள் அங்ஙனமறியாதிருப்பவும், சார்ந்ததன்வண்ணமாம் தன்மை எவ்வாறு சித்திக்கும் எனின், சாரப்பட்ட பொருளின் தன்மையையடை

தலே சார்ந்ததன்வண்ணமாம் தன்மையாமன்றி, சாரப்பட்ட பொருளின் தன்மையால் நிகழும் செயல்களையும் அறிதல் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையாகாமையால் சித்திக்குமென்க. எனவே, சாரப்பட்ட பொருளின்றன்மையினையும் அத்தன்மையால் நிகழும் செயலினையும் அறியுமாயின், அவ்வறிவு சார்ந்ததன்வண்ணமாய் நின்று அறியும் அறிவு ஆகாதென்று அறிந்துகொள்க. அவ்வாறாயின், சிவத்தின்றன்மையாகிய எண் குணங்களையும் சிவத்தைச் சார்ந்த வுயிர் பொருந்தி நிற்கவேண்டுமே? நிற்பின் அத்தன்மையினாலாகிய செயல்கள் உயிரினிடத்து நிகழாமை என்னையெனின், சிவத்தையறிந்து சிவமாய் நின்று சிவானந்தத்தை யநுபவிப்பதற்குப் பிறிதொன்றனையறிதல் தடையாகுமாதலின், எல்லாப்பொருள்களையும் அறியும் செயல்கள் நிகழாவென்க. அங்ஙனமாயினும் ‘சிவனிடத்துள்ள இயல்பாகவே பாச நீக்கம் முற்றுமுணர்தல் இயற்கையுணர்வு பேரருள் முதலியன உயிரினிடத்து எவ்வாறு விளங்குமெனின், எண்குணங்களும் சிவபெருமானிடத்தில் இயல்பாயுள்ளன. உயிருக்குச் சிவத்தைச் சார்ந்ததால் விளங்குவன. உண்மையாதல் வேறு, விளங்குதல் வேறு; இயல்பாயுள்ளது உண்மையாதல். சார்ந்ததால் நிகழ்வது விளங்குதல். ஆதலால் சிவன் அநாதிமுத்தன். சீவன் ஆதிமுத்தன். இயல்பாயுள்ள குணத்தால் தொழில் நிகழும். சார்ந்ததால் விளங்கும் குணத்தால் தொழில் நிகழாது. எதுபோலுமெனின், மலரினிடத்து இயல்பாயுள்ள தன்மையினால் மணம் நிகழும். மலரைச்சார்ந்த பளிங்கில் மலரின் தன்மை விளங்கினும் அப்பளிங்கினிடத்து மணம் நிகழாதவாறுபோலுமென்க. அங்ஙனமாயின், எண் குணங்களால் உயிருக்குப் பயனென்னையெனின், சிவத்தைப்போல பிறப்பிறப்புக்களுக்குட்படாமையே பயன் என்க.

உயிருக்கு யாதானுமொன்றைச் சார்ந்து அதன் வண்ணமாய் நிற்பதே தன்மையாயின், அதற்குச் சிறப்புத்தன்மை யில்லையென்பது பெறப்படும். படவே, சிறப்புத்தன்மை யில்லாத பொருள் உண்டென்றல் எவ்வாறு சித்திக்குமெனின்? கண்ணுக்கு இருளோடுகூடி இருளாயும் ஒளியோடு கூடி யொளியாயும் நின்று காணுந் தன்மையுளதாயினும்போல், உயிருக்குச் சார்ந்ததன்வண்

ணமாய் நின்று அறியும் தன்மையுளதாதலின், அந்த அறியும் தன்மையாகிய சிறப்புத்தன்மைகொண்டு உயிருண்மை சித்திக்கும் என்க.

மலத்தைச் சார்ந்துநின்ற வுயிர் அதனில் நின்று மீண்டவாறு போல, சிவத்தைச்சார்ந்த வுயிரும் அதனினின்று மீளாமைக்கு ஏதுவென்னையெனின், மலசத்திக்குக் கேடுண்டு; சிவசத்திக்குக் கேடின்று; மலசத்தியின் கேட்டினால் மலத்தினின்று நீங்கிய உயிர் சிவத்தைச்சாரும். சிவசத்திக்குக் கேடின்மையால், சிவத்தைச் சார்ந்த உயிர் மலத்தின் மீளாதென்க. எதுபோலுமெனின், ஏரிக் கரைக்குக் கேடுண்டு; கடற்கரைக்குக் கேடின்று; ஏரியின் கரை யுடைந்தவிடத்து அதனினின்று நீங்கிய நீர் கடலைச்சாரும்; கடற் கரைக்குக் கேடின்மையால் அதனைச்சார்ந்த நீர் ஏரிக்குமீளுதல் இல்லாதவாறுபோலுமென்க. கடலுக்குக் கரையுண்டாயின் "ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ" எனத் தாயுமானசுவாமிகள் அருளிச்செய்ததென்னையெனின், ஏரிக்குப்போல நிலத்தின்வேறாய் உயர்த்துக் கட்டப்படாமைபற்றியேயன்றிப் பிறிதில்லையென்க. கடற்குக் கரையில்லையாயின், கடற்கரையின் பெயர் "பாராவாரம்" எனவருதல் கூடாமை காண்க,

இனி, பசுவுக்குத்தானே மலத்தை நீக்குதல் கூடுமோ? கூடுமாயின் அநாதியே நீக்கியிருக்கலாமே? அவ்வாறின்மையின் மலம் எவ்வாறு நீங்கும் என்னும் ஆசங்கையை நீக்குதற்கெழுந்தது வருஞ் செய்யுள். (2)

பசுவுக்குக் குரு மலத்தை நீக்குவர் எனக் கூறுகின்றது.

பாலினு ணெய்மறைந்து நின்றாற் போலப்
பசுமலத்தான் மறைந்துசிவத் துவம்விளங்கா திருக்கும்
ஆலவிடத் தான்மோகித் தவனைமந் திரத்தா
லௌடதத்தாற் றீர்க்கும்விட காரிபோற் குருவுஞ்
சாலவுலோ கங்களைவன் னியனறவைத் தூதித்
தமனியமாக் குமாபோன்மந் திரக்கிரி யையினாற்
சீலமிகுந் தீக்கைவன்னி யான்மலத்தை நீக்கிச்
சிவத்துவஞ்செய் வார்வாயு பூதரா யிருந்தே.

(இ-ள்.) பாலினுள் நெய் மறைந்துநின்றாற்போல—பாலினிடத்து நெய் (விரவியிருந்தும் வெளிப்பட்டுத் தோன்றாது) மறைந்து நிற்குமாறுபோல,—பசு சிவத்துவம் மலத்தால் மறைந்து விளங்காதிருக்கும்—பசுவினிடத்து (விரவியிருக்கும்) சிவத்தின் றன்மை மலத்தால் மறைந்து வெளிப்பட்டு விளங்காதிருக்கும்,—ஆலவிடத்தால் மோகித்தவனை—நஞ்சு கலத்தலால் மயங்கிக்கிடப்பவனுக்கு,—மந்திரத்தால் ஔடதத்தால் தீர்க்கும் விடகாரிபோல்—மந்திரத்தாலும் மருந்தாலும் (அம்மயக்கத்தைத்) தீர்க்கும் விடவைத்தியன் போலவும்,—உலோகங்களை வன்னியின்வைத்து அற சாலவூதி தமனியம் ஆக்குமாபோல்—செம்பு முதலிய உலோகங்களை அக்கினியில் வைத்து (களிம்பு) அற மிகவூதிச் சுத்தமான பொன்னாக்குமாறுபோலவும்,—குருவும் வாயுபூதராயிருந்தே— (சிவமே தானாக விளங்கு) ஞானகுருவும் (நிட்டையினால் மலத்தால் மறைக்கப்பட்டிருக்கும்) உயிர்க்கு உயிராய் நின்று,—சீலமிகுந்தீக்கை—அறிவு விளங்கச்செய்யும் ஞானதீக்கையாலும்,—வன்னியால் மந்திரக்கிரியையினால்—(புறத்தே) ஓமத்தில் மந்திரத்தோடு செய்யும் கிரியாதீக்கையாலும்,—மலத்தை நீக்கிச் சிவத்துவம் செய்வார்—மலத்தடையை நீக்கிச் சிவத்தின்றன்மை (உயிருக்கு விளங்கும் படி) செய்வர். (எ. று.)

(பொ-ரை) பாலினிடத்து நெய்விரவியிருந்தும் வெளிப்பட்டுத் தோன்றாது மறைந்து நிற்குமாறுபோல, பசுவினிடத்து விரவியிருக்கும் சிவத்தின்றன்மை மலத்தால் மறைந்து வெளிப்பட்டு விளங்காதிருக்கும். நஞ்சு கலத்தலால் மயங்கிக்கிடப்பவனுக்கு, மந்திரத்தாலும் மருந்தாலும் அம்மயக்கத்தைத் தீர்க்கும் விடவைத்தியன்போலவும், செம்பு முதலிய உலோகங்களை அக்கினியில் வைத்து களிம்பு அற மிகவூதிச் சுத்தமான பொன்னாக்குமாறுபோலவும், சிவமே தானாக விளங்கும் ஞானகுருவும், நிட்டையினால், மலத்தால் மறைக்கப்பட்டிருக்கும் உயிர்க்குயிராய் நின்று செய்யும் ஞானதீக்கையாலும் புறத்தே ஓமத்தில் மந்திரத்தோடு செய்யும் கிரியாதீக்கையாலும் அம்மலத்தை நீக்கிச் சிவத்தின் றன்மை உயிருக்கு விளங்கும்படிசெய்வர் (எ-று)

(க-ரை) விடவைத்தியன் விடத்தை நீக்குவதுபோலவும்,

தொழிலாளி செம்பினிடத்துள்ள களிம்பை நீக்குவதுபோலவும், ஞானகுரு, பசுவினிடத்துள்ள மலத்தை நீக்குவர் என்பதாம்.

உள்-இடம். அது பசுவென்பதனோடுஞ் சென்றியையும். ஆண்டு இன் சாரியை தொக்கு நின்றது.

பசு மலத்தால் மறைந்து சிவத்துவம் விளங்காதிருக்கும் என்றது அநுவாதம்.

அவனையென்றது வேற்றுமை மயக்கம்.

ஈண்டுக் குருவென்றது ஏற்புழிக்கோடலால் ஞானகுருவின் மேல் நின்றது.

தீக்கையென்பது, சமயம் விசேஷம் நிருவாணம் என மூவகைப்படுமாதலின், அவற்றுள், நிருவாணதீக்கை என்பது உணர்த்துதற்கு சிலமிகுந் தீக்கையென்றார். நிருவாணதீக்கை யெனினும் ஞானதீக்கையெனினும் ஒக்கும்.

வாயு-உயிர். பூதம் என்பதும் அது. "பூதம் யாவையினுள்ளலர்போதென" வென்பதனாலுமறிக. (பெரியபுராணம்.)

வாயு பூதம் என்றவிடத்து நான்காம்வேற்றுமையுருபு தொக்குநின்றது. இது வடமொழிச்சந்தி.

ஏகாரம் அசை.

சிவத்துவம் விளங்காது மறைந்து இருத்தற்கு எடுத்துக்காட்டப்பட்ட பால்நெய் உவமையில்வைத்து விளங்குமுறைமை கூறாது, வேறுவமை கூறியதென்னையெனின், சிவத்துவம் விளங்காமைக்கு மட்டுமேயன்றி மயங்குதற்கும் அது உவமையாகாமையாலென்க. அங்ஙனமாயின், அவ்வுவமையைக் கூறுவானேனெனின், ஏனைய இரண்டும் மலமறைப்பிற்கு உவமைகள் ஆகுமன்றிப், பிரிப்பின்றி நிற்கும் சிவத்துவம் விளங்காமைக்கு உவமையாகாமையாலென்க. "பாலிற்படுநெய்போல்" என்ற தேவாரத்திற்கும் இதுவே கருத்தாம். "மறையநின்றுளன்" என்பதனாலும் அது வலியுறுத்தப்படும். எனவே, சிவத்துவம் விளங்காமைக்கு பால் நெய்யும், மலம் மறைத்தமைக்கு நஞ்சும் உலோகங்களும், மலத்தை நீக்குவோருக்கு விடவைத்தியனும் தொழிலாளியும், நீக்குமுறைமைக்கு மந்திரம் மருந்து தொழில்களும் உவமைகளாகக் கூறப்பட்டமைகாண்க.

மலமறைப்பு நீக்குதற்கு இரண்டு உவமை கூறுவானேனெனில், அகத்திற் பொருந்திச்செய்யும் செயலானும், புறத்திற் பொருந்திச் செய்யும் செயலானும் நீக்கப்படும் முறைமைக்கேற்ப இரண்டு உவமை கூறியவாறுமென்க. எனவே, நஞ்சு உவமை அகத்துப் பொருந்தி நீக்கப்படுதற்கும், உலோக உவமை புறத்துப்பொருந்தி நீக்கப்படுதற்கும் ஆயினமையறிக.

மந்திரம் இரண்டனுள், முன்னையது, விடம்நீக்குதற்குரியதும், பின்னையது, மலம் நீக்குதற்கு உரியதூஉமாகி, முறையே சாமானிய குருவாலும் ஞானகுருவாலும் உபதேசிக்கப்படுவனவாம். (3)

பாசத்தை வகுத்தும் விரித்தும் கூறுகின்றது.

பாசமா ணவமாயை கன்மமென மூன்றும்
பசுக்குணம்போ லிருக்குமவை யென்போல வென்னில்
ஆசுறுமா ணவஞ்செம்பிற் களிம்புபோற் சகச
மாயிருக்கு மாயைபூ தாதிகலை யீறாய்ப்
பேசுமுப்பா னொன்றுமோ கந்துகமா யிருக்கும்
பிறங்குசுபா சுபவடிவாய்ச சுகதுக்கந் தானாய்
மாசுருமுன் கழியப்பின் னும்பிரவா கத்தின்
வருஞ்சாங்கு சற்கிகமாங் கன்மமலந் தானே.

(இ-ள்) பாசம் ஆணவம் மாயை கன்மம் என மூன்றும்- பாசமாவது ஆணவம் மாயை கன்மம் என மூன்றுவகைப்படும்,— அவை பசுக்குணம்போல் இருக்கும்—அம்மூன்றும் (உயிர்போலக் குணிப்பொருளாயினும்) உயிரின் குணம்போல இருக்கும்,— என் போல வென்னின்—எதுபோலவென்னில்,—ஆசுறும் ஆணவம் செம்பிற்களிம்புபோல் சகசமாயிருக்கும்—(உயிரினிடத்துக) குற்றமாகப் பொருந்திய ஆணவமலமானது செம்பினிடத்துக் களிம்பு போல அநாதியே கூடியிருக்கும்,—பேசும் மாயை பூதாதிகலை யீறாய் முப்பான் ஒன்றொடும் ஆகந்துகமாயிருக்கும்—சொல்லாநின்ற மாயாமலமானது (தன்காரியமாகிய) பிருதிவியாதி பூதமுதல் கலையீறான முப்பத்தொரு தத்துவங்களோடும் இடையே வந்து கூடியதாயிருக்கும்,—கன்மமலம் பிறங்குசுப அசுபவடிவாய் சுக துக்கமாய் மாசுருமுன்கழிய பின்னும் பிரவாகத்தின் வரும் சாங்கு

சர்க்கிகமாம்—கன்மமலமானது விளங்குகின்ற நன்மை தீமை வடிவாயும், சுக துக்க வடிவாயும், அவற்றையனுபவித்தற்குரிய சத்ததாதுக்களாலாகிய வடிவம் முன்வந்தது கழியப் பின்னும், முன்வந்த நீரிது பின் வந்த நீரிது எனப் பிரித்தறியவாராத பிரவாகம்போல் வருகின்ற மூலகன்மத்தொடர்புடையதாயுமிருக்கும் (எ-று)

(பொ-ரை) பாசமாவது ஆணவம் மாயை கன்மம் என மூன்றுவகைப்படும். அம்மூன்றும் உயிர்போலக் குணிப்பொருளாயினும் உயிரின் குணம்போலவிருக்கும். எதுபோலவெனின், உயிரினிடத்துக் குற்றமாகப் பொருந்திய ஆணவமலமானது செம்பினிடத்துக் களிம்புபோல் அநாதியே கூடியிருக்கும். சொல்லாநின்ற மாயாமலமானது அதன் காரியமாகிய பூதமுதற் கலையீறான முப்பத்தொரு தத்துவங்களோடும் இடையே வந்து கூடியதாயிருக்கும். கன்மமலமானது விளங்குகின்ற நன்மை தீமை வடிவாயும், சுக துக்க வடிவாயும், அவற்றையனுபவித்தற் குரிய சப்ததாதுக்களாலாகிய வடிவம், முன்வந்தது கழியப்பின்னும், முன்வந்த நீரிது பின் வந்த நீரிது வெனப் பிரித்தறியவாராத பிரவாகம் போலும் வருகின்ற மூலகன்மத் தொடர்புடையதாயுமிருக்கும் (எ-று.)

(க-ரை) பாசம் ஆணவம் மாயை கன்மம் என மூவகைப்படும். அவற்றுள், ஆணவம் அநாதியே இயல்பாகக்கூடியும், மாயை இடையே கூடியும், கன்மம் தொடர்புடையதாய்க் கூடியும் கட்டுப்படுத்துமென்பதாம்.

ஓடு-உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. அது மாயை, அதன் காரியத்தைவிட்டு நீங்காமையை உணர்த்திற்று.

இன்—உவமவுருபு.

சாங்சர்க்கிகம் என்னும் வடமொழி சாங்குசர்க்கிகம் எனத் திரிந்தது. சம்சர்க்கத்தால் உண்டாவது சாங்சர்க்கிகம். சம்சர்க்கம்—தொடர்பு. கூந்தலுக்கு மலரின்றொடர்பால் உண்டாகிய மணம் சாங்சர்க்கிகம். ஆன்மாவிற்கு மூலகன்மத்தின்றொடர்பால் உண்டாகியது கன்மமலமாதலின் அது சாங்சர்க்கிகம் எனப்பட்டது. மலமென்பதுமேலுஞ் சென்றியையும்.

தான் இரண்டும் ஏயும் அசை.

ஒரு பொருளின் குணம் அப்பொருள் கெட்டாலன்றிக் கெடாது. குற்றம் அப்பொருளிருக்கும்பொழுதே கெடும். குணமாவது இயல்பாகவே பொருளோடு கலந்திருப்பது. குற்றமாவது பொருளோடு கூடியிருப்பது, ஆயினும், குணம்போல இயல்பாகவே கூடியிருக்கும் குற்றமும் உண்டு. பாசம் அவ்வாறாகலின் அது கொண்டு குணமென்ன லாகாதென்ப துணர்த்துதற்கு, குணம்போலிருக்குமென்றார். குற்றமும் ஒரு பொருளின் குணமாகுமன்றிப் பொருளாகாது. செம்பு பொருள். அதன்குணம் பிரகாசம். குற்றம் மறைப்பு. இக்குற்றத்தைச்செய்யும் பொருள் களிம்பு. இது போல, உயிர் பொருள். அதன் குணம் அறிவு இச்சை செயல்கள். குற்றம் மறைப்பு. இம்மறைப்பைச்செய்வது ஆணவமலம். இவ்வாணவம் செம்பிற் களிம்புபோல உயிருடன் இயல்பாகவே கூடியிருப்பினும் குணமன்று; குற்றமே என்பதுணர்த்துதற்கு, ஆசுறும் ஆணவம் என்றார். குற்றம் செய்வதனைக் குற்றமென்றது உபசாரம்.

ஆணவம் மாயை கன்மம் மூன்றும் உயிரைப் பந்தப்படுத்துதற்கண் ஒப்புமை உடையவாயினும், பந்தப்படுத்துமுறைமையில் வேற்றுமையுடையன. எவ்வாறெனில், ஆணவம் அநாதியே கூடிப் பந்தப்படுத்துதலும், மாயை இடையே கூடிப் பந்தப்படுத்துதலும், கன்மம் இடையே தொடர்ந்து பந்தப்படுத்துதலும் வேற்றுமையாமென்க. இவ்வேற்றுமையுணர்த்துதற்கு ஆணவம் சகசமாயிருக்குமெனவும், மாயை ஆகந்துகமாயிருக்குமெனவும், கன்மம் சாங்குசர்க்கிகமாமெனவும் கூறினர். இவ்வேற்றுமைக்கேற்ப ஆணவம் பிரதிபந்தமெனவும், மாயை சம்பந்தமெனவும், கன்மம் அனுபந்தமெனவும் வழங்கப்படும்.

பிரதிபந்தம்—இயல்பாக அறிவுமுற்றும் தடுப்பது.

சம்பந்தம்—இடையேகூடி அறிவை ஏகதேசப்படுத்துவது.

அனுபந்தம்—இடையே தொடர்ந்து விருப்பு வெறுப்பை உண்டுபண்ணிச் சுகதுக்கம் தருவது. அநு—தொடர்ச்சி.

இம் மும்மலங்களும் "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயையிரண்—டாகவிவையாறு நாதியில்" என்ந் திருவருட் பயனினும்,

"வல்லிமல கன்ம மன்றுளவாம்" எனச் சிவஞானபோதத்தினும் கூறியவாற்றால் அநாதியென்பது பெறப்படவும், இங்கே சகசமென்றும் ஆகந்துகமென்றும் பிரித்த கருத்தென்னையெனில், மும்மலங்களும் அநாதியேயாயினும், மாயை கன்மங்கள் இறைவனிடத்தில் உடைமைப்பொருளாயிருந்து ஆணவமல நிவர்த்தியின்பொருட்டு இறைவனால் உயிருக்குக் கூட்டப்படுதல்பற்றி ஆகந்துகமெனப்பட்டனவென்க.

மாயை, இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாதலின் அது அவனுடைமைப்பொருளாதல் கூடும். கன்மம் உடைமைப்பொருளாதல் எவ்வாறெனின், அதுவருஞ் செய்யுளிற் காட்டுதும்.

கன்மம் செய்யப்பட்ட முறைமையில் பலந்தருதலில்லை. பக்குவமாமுறைமையில் பலந்தரும். எதுபோலவெனின், நெல்வித்திட்டு ஒருமாதத்திற்குப்பின் கீரைவித்திடினும், கீரை முன்னரும் நெல் பின்னரும் பலந்தருமாறுபோலென்க. ஆதலின், கன்மபலனை அனுபவித்தற்குரிய சரீரங்களுள் முன்செய்த கன்மபலனை அனுபவித்தற்கு வந்தது இது, பின்செய்த கன்மபலனை அனுபவித்தற்கு வந்தது இதுவெனப், பிரித்தறியவராது கன்மங்களின் வன்மை மென்மைகளுக்கேற்பப் பக்குவமாம் முறைப்படி சரீரம் வருமென்பது தோன்ற, மாசுரு பிரவாகத்தின் வரும் என்றார்.

தத்துவங்கள் தோற்றுமுறைபற்றிக் காலமுதலாகவும், பிரவிருத்திக்கு முறைபற்றிக் கலைமுதலாகவும் எண்ணப்படுமாதலின், இங்கே பிரவிருத்தி முறைபற்றி "பூதாதிகலையீறாய் முப்பான் ஒன்று" என்றார்.

கன்மத்தாற் சரீரம் வருமாயின் சரீரத்தோற்றத்திற்கு இறைவன் வேண்டாமோ வென்னு மாசங்கையை நீக்குதற்கெழுந்தது வருஞ் செய்யுள். (4)

**கன்மத்துக்கேற்ற சரீரத்தை இறைவன் றருவனெனக் கூறுகின்றது.**

கருமத்தாற் சடமுண்டாஞ் சடத்தினானே
கர்மமுண்டாம் பூர்வத்தார்ச் சித்த வந்தக்
கருமத்தின் பயனிப்போ தேடேக்குந் தேக
காரணமாங் கருமமசத் தாத லானே

கருமத்துக் காயசடங் கூட்டு மீசன்
கருதுமவற் றினுக்குவியஞ் சகனாய் நின்று
கருமத்தின் பாகமின்றேற் பிரளயமா முண்டேற்
கருதருசம் சாரமாங் கருதுங் காலே.

(இ-ள்.) கருமத்தால் சடமுண்டாம்–கன்மத்தினாலே சரீரம் உண்டாகும்,—சடத்தினானே கன்மமுண்டாம்–சரீரத்தினாலே கன்மமுண்டாம்,—பூர்வத்து ஆர்ச்சித்த அந்தக்கருமத்தின் பயன் இப்போது எடுக்குந் தேககாரணமாம்–முன்னரீட்டப்பட்ட அந்தக் கருமத்தின் பயன் இப்பொழுது எடுத்திருக்கும் தேகத்திற்குக் காரணமாம்,—கருமம் அசத்தாதலானே கருதும் அவற்றினுக்கு ஈசன் வியஞ்சகனாய் நின்று கருமத்திற்கு ஆயசடங்கூட்டும்–கன்மமானது செய்த செய்தபொழுதே கெட்டொழிதலால், அநுமானத்தால் உண்டென்றுணரப்படும் அந்தக் கன்மம் சடமாதலானும், அதனைச் செய்தவுயிர் சிற்றறிவுடையதாதலானும், அவ்விரண்டற்கும் ஈசுவரன் துணையாக நின்று கன்மத்துக்கேற்ற சரீரத்தை உயிருக்குக் கூட்டுவன்,—கருதுங்கால் கருமத்தின் பாகமின்றேல் பிரளயமாம்–ஆராயுமிடத்து கன்மத்தினுடைய பக்குவமில்லாதிருப்பின் பிரளயம் உண்டாம்,—உண்டேல் கருதருசம்சாரமாம்–பக்குவம் உண்டுமாயின் அளவிடுதற்கரிய சரீரம் உண்டாம். (எ-று.)

(பொ-ரை.) கன்மத்தால் சரீரமும் சரீரத்தால் கன்மமும் உண்டாம். முன்னரீட்டப்பட்ட அந்தக்கன்மத்தின் பயன் இப்பொழுது எடுத்திருக்கும் சரீரத்திற்குக் காரணமாம், கன்மமானது செய்த செய்தபொழுதே கெட்டொழிதலால், அநுமானத்தால் உண்டென்றுணரப்படும் அக்கன்மம் சடமாதலானும், அதனைச்செய்தவுயிர் சிற்றறிவுடையதாதலானும், அவ்விரண்டற்கும் ஈசுவரன் துணையாக நின்று கன்மத்துக்கேற்ற சரீரத்தை உயிருக்குக் கூட்டுவன். ஆராயுமிடத்து கன்மத்தினுடைய பக்குவமில்லாதிருப்பின் பிரளயம் உண்டாம். பக்குவம் உண்டுமாயின் அளவிடுதற்கரிய சரீரமுண்டாம். (எ-று.)

(க-ரை) கன்மத்துக்கேற்ற சரீரத்தை இறைவன் றருவன். கன்மம் பக்குவமில்லாதபொழுது பிரளயமும் பக்குவமான

பொழுது சரீரமும் உண்டாமென்பதாம்.

கருமத்தாற் சடமுண்டாமென்பது அநுவாதம்.

ஏ—அசை.

கன்மமின்றிச் சரீரம் வராது; சரீரமின்றிக் கன்மம் நிகழாது; ஆகலின், கருமத்தாற் சடமுண்டாம் சடத்தினானே கன்மமுண்டாமென்றார். ஆயின், கருமம் முந்தியதோ சடம் முந்தியதோ என்னும் ஐயம் நிகழுமன்றே? வித்தும் மரமும்போல் முற்பிற்பாடுகூற முடியாதெனின், அநவஸ்தை என்னும் குற்றமாம். அக்குற்றம் வாராது பரிகரிக்கவேண்டி, பின்னிகழ்ச்சி முன்னிகழ்ச்சி இரண்டற்கும் பொதுவாக பூர்வத்தார்ச்சித்த அந்தக்கருமத்தின் பயன் இப்போதெடுக்கும் தேககாரணமாம் என்றார். எனவே, இப்பொழுது எடுத்திருக்கும் தேகத்திற்கு, முன்னர் தேகத்தோடு கூடிச் செய்த கன்மம் காரணமென்றாகி அவ்வாறே மேலுஞ்சென்று மூல கன்மம் என்பதொன்று அநாதி நித்தமாயுண்டென்பது பெறப்படும். படவே, அந்த மூலகன்மத்தாற் சரீரம் தோன்றப் பின்னர்ச் சரீரத்தாற் கன்மமும் கன்மத்தாற் சரீரமும் தொடரும் என்று அறிந்துகொள்க. இக்கருத்தேபற்றி "கன்மமும் மூலங்காட்டி" என்றார் அருணந்திசிவாசாரியரும். (சிவஞானசித்தியார் சூ—2, செ—39.) இன்னும் இதுபற்றிய சங்கையுத்தரங்களெல்லாம் அச்செய்யுளுரையினும் சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம் 120. 553, 581-ம் பக்கங்களினும் கூறினுமாதலின் அவ்விடங்களிற் காண்க.

ஈண்டுஞ்சிறிது காட்டுதும். மூலகன்மமாவது உயிருக்கு ஆணவமலத்தோடு தனித்து நிற்கும் கேவலநிலையில் மலத்தின் சேட்டைக்காற்றாமையால் உண்டாகும் விருப்பு வெறுப்புக்கள். மலத்தின் சேட்டைக்காற்றாமையால் உண்டாவது வெறுப்பொன்றுமேயாக, விருப்பு வெறுப்பென்றதென்னையெனின், சுகாநுபவத்தின் விருப்பம் இருந்தாலன்றி, துக்காநுபவத்தை வெறுத்தல் கூடாமையின் அருத்தாபத்தியால் விருப்பமும் உண்டென்பது பெற்றாமென்க. வினைப்பயன்களை அனுபவிக்குங்காலத்து நிகழும் விருப்பு வெறுப்புக்கும் கேவலத்தில் நிகழும் விருப்பு வெறுப்புக்கும் வேற்றுமை

என்னையோவெனின், குழந்தைப்பருவத்தில் பசிக்காற்றாது பாலை விரும்புவதும் அப்பருவம் நீங்கியபின் பசிக்காற்றாது உணவை விரும்புவதும் போல என்க. குழந்தைப்பருவத்தில் வெறுக்கப் படும் பசியைத் தவிர்க்கவும் விரும்பப்படும் உணவைக் கூட்டவும் தன்னாலாகாமையின், அவற்றையறிந்த மாதாவானவள் தவிர்த்த லுங் கூட்டலுஞ் செய்வள். செய்யவே, தவிர்த்தல் கூட்டுதல் இரண் டும் மாதாவின் உடைமைப்பொருளாயின. இவ்வாறே மலத்தின் சேட்டைக்காற்றாமையால் வருந்தும் உயிர்க்கு அவ்வருத்தம் நீங்கி இன்புறுதற்கான செயலைக்கூட்டுதல் இறைவன் கடமையாதலின், அச்செயல் இறைவனுக்கு உடைமைப்பொருளாயினமை காண்க. அது தவிரத்தக்கதுஞ் செய்யத்தக்கதுமென இருவகைப்படும். இவ்விரண்டையும் வரையறுத்தறிதல் இறைவனையன்றிச் சிற்றறி வுடைய உயிருக்கு ஆகாமையின் அதனாலும் அவ்விரண்டும் அவ னுடைமைப்பொருளாதல் காண்க. எனவே, மூலகன்மம் காரண மாக மாயாகாரியமாகிய சரீரத்தையும் அதுகொண்டு செய்யப் படும் இதமகிதமென்னும் இருவினைகளையும் இறைவன்றர, பின் னர் உடலும் வினையும் ஒன்றுக்கொன்று காரணகாரியமாய்த் தொ டர்ச்சியாய் வருமென்றறிந்துகொள்க. கன்மம் இறைவன் உடை மைப்பொருளாயின் பயன் உடையானைச் சாராது செய்தவனைச் சார்தல், யான் செய்தேன் என்னும் முனைப்புப்பற்றி என்க. எனவே, எச்செயலும் இறைவன் செயலெனக்கருதிச் செய்யின் அதுவே யிருவினையொப்பாய் அதனால் மலசத்தி தேய்ந்து திரு வருள் விளங்கித் தோன்றுமென்க.

கன்மத்திற்காகவந்த சரீரம் நசிக்குங்காலத்து வேறு கன்மம் பக்குவப்பட்டிருப்பின் அக்கன்மத்திற்கேற்ற சரீரத்தையும் உல கத்தையும் உயிர் பொருந்தும். இவ்வாறு இடையீடின்றி நிகழி னும் நிகழும். கன்மம் பக்குவப்படாதிருப்பினும் இருக்கும். ஒரு கன்மமும் பக்குவப்படாத காலத்து பக்குவப்படும்வரை தநு கரணாதிகளை ஒடுக்கிவைத்து பக்குவப்பட்ட காலத்து அவற்றை இறைவன் கூட்டுவன். ஆதலின், கருமத்தின்பாக மின்றேல் பிரளயமாம் உண்டேல் கருதருசம்சாரமாம் என்றார். (5)

உயிர், உடம்போடு கூடிப்பிறந்திறந் துழலுமுறைமை கூறுகின்றது.

இந்தவுட ஞசோற்பத் திகளோடு கூடி
யினியவா காரமயத் திருக்குமவ்வா காரம்
வந்தபரி ணமத்தா லிரதமுண்டாம் விடய
மருவுசங்க தோடத்தாற் குணசங்கச் சார்பான்
அந்தவுயிர் சருவபரி பூரணனு னலும்
அகர்த்தாவு மாப்பந்த முறுவனென்போ லென்னில்
தந்தைமகன் பிழைகண்டோ ரிடைப்பிணிக்கு மாபோல்
சங்கரனு லான்மாவும் பந்திக்கப் படுவன்.

(இ-ள்) இந்த உடல் நாசோற்பத்திகளோடுகூடி—கன்மத்தினலே உண்டாகுமென்று மேற்செய்யுளிற் பெறப்பட்ட உடலானது நாசத்தையும் உற்பத்தியையும் உடையதாய்,–இனிய ஆகாரமயத்து இருக்கும்—இனிமையான அன்னமயமாயிருக்கும்,—அவ்வாகாரம் வந்த பரிணமத்தால் இரதம் உண்டாம்—அன்னமெனப்படும் அந்த ஆகாரத்தால் உண்டாகும் பரிணமத்தால் வீரியம் உண்டாம்,—விடயமருவு சங்க தோடத்தால்—அவ்வீரியத்திற்குத் தக்கவாறு பொருந்தும் விடயக்கூட்டத்தின் குற்றத்தாலும்,—குணசங்கச் சார்பால்—அவ்வீரியத்திற்குத் தக்க குணத்துடன் கூடும் சார்பினுலும்,—அந்த உயிர் சருவ பரிபூரணன் ஆனுலும்—மேலே கூறப்பட்ட உயிர் எங்கும் பரிபூரணனாய் விளங்கும் சிவத்தின் றன்மையைப்பெற்றுச் சிவமாய் நிற்றற்கு உரிமையுடையதாயினும்,—அகர்த்தாவும் ஆ பந்தம் உறுவன்—மாயாகருவிகளால் கட்டப்பட்டு கருத்தாவைச்சார்ந்து கருத்தாவாய் விளங்கும் தன்மையை யிழந்து பிறந்திறந்துழலும்,—என்போல் என்னில்—எதுபோலவென்னில்,—தந்தை மகன் பிழைகண்டு ஓரிடைப்பிணிக்குமாபோல்—தந்தையானவன் மகனிடத்துப் பிழைகண்டால் அவனை ஓரிடத்தில் கட்டிவைக்குமாறுபோல,—சங்கரனுல் ஆன்மாவும் பந்திக்கப்படுவன்—சங்கரனுல் ஆன்மாவும் பந்திக்கப்படும். (எ-று)

(பொ-ரை) கன்மத்தினலே உண்டாகுமென்று மேற் செய்யுளிற் பெறப்பட்ட உடலானது நாசத்தையும் உற்பத்தியையும் உடையதாய் இனிமையான அன்னமயமாயிருக்கும். அன்னமெனப்படும் அந்த ஆகாரத்தா லுண்டாம் பரிணமத்தால் வீரியம் உண்

டாம். அவ்வீரியத்திற்குத் தக்கவாறு பொருந்தும் விடயக்கூட்டத்தின் குற்றத்தாலும், அவ்வீரியத்திற்குத் தக்க குணத்துடன் கூடும் சார்பினாலும், மேலே கூறப்பட்ட உயிர், எங்கும் பரிபூரணனாய் விளங்கும் சிவத்தின் றன்மையைப்பெற்றுச் சிவமாய் நிற்றற்கு உரிமையுடையதாயினும், மாயாகருவிகளாற் கட்டப்பட்டு, கருத்தாவைச்சார்ந்து கருத்தாவாய் விளங்கும் தன்மையை யிழந்து பிறந்திறந்துழலும். எதுபோலவென்னில், தந்தையானவன் மகனிடத்துப் பிழைகண்டால் அவனை ஓரிடத்துக் கட்டிவைக்குமாறு போல, சங்கரனால் ஆன்மாவும் பந்திக்கப்படும். (எ-று)

(க-ரை) சிவமாந்தன்மையைப்பெற்றுச் சிவமாய் நிற்றற்குரிய உயிர், விடயக்கூட்டத்தின் குற்றத்தாலும் குணத்தின் சார்பாலும் பிறந்திறந்துழலுமென்பதாம்.

தூலவுடல் அன்னமயமாதலின், இந்தவுடல் இனியவாகாரமயத்திருக்குமென்றார். தூலபஞ்சபூதத்தின் பரிணாமமெனப்படும் தூலவுடலை அன்னமயம் என்ற கருத்தென்னையெனின், தூலவுடலின் உறுப்புக்களாகிய தோல் நரம்பு என்பு முதலியன பூதபரிணாமம்; அவை கருவுட்கிடக்கும்பொழுது மாதாவாலுண்ணப்படும் உணவின் சாரத்தால் வளரும். வெளியே வந்தபொழுது தன்னால் உண்ணப்படும் உணவின் சாரத்தால் வளரும்; வளர்தற்கும் நிலைத்தற்கும் காரணமாதல்பற்றி அன்னமயமெனப்பட்டதென்க. அன்றியும், மாதாவின் கருப்பத்துள் உருவமைதற்குக் காரணமாயிருந்தது தந்தையின் வீரியம்; அதுவும் தந்தை உட்கொண்ட உணவின் சாரமேயாதலினானும் உடல் அன்னமயமாதல் காண்க.

உயிர் கருப்பத்துளிருக்குங்காலத்து அவ்விடத்துப்படும் துன்பத்துக்காற்றாது வருந்தி இத்தகைய பிறப்புத்துன்பம் இனியுண்டாகாதவண்ணம் கிருபைசெய்யவேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கும். பூமியிற் பிறந்த பின்னர் விடயப்பழக்கத்தின் தோஷத்தாலும், அத்தோஷத்தாலுண்டாம் குணத்தாலும், அவ்வெண்ணத்தை மறந்து பிறந்திறந்துழலும்.

உயிர்.சருவபரிபூரணனானாலும் அகர்த்தாவுமா பந்தமுறுவன் என்றதுபற்றி, உயிர் முன்னர்ச் சுத்தமாயிருந்து பின்னர்ப் பந்த

முற்றதென்னலாகாதோவெனின், ஆகாது. என்னை, முனனர்ச் சுத்தமாயிருந்ததொன்று பின்னர் அசுத்தமடைதற்குக் காரணம் வேண்டப்படும். காரணமுண்டெனினும் இனிச் சுத்தமடைந்தபின்னரும் அவ்வாறே யசுத்தமடையும் என்ருகிச் சுத்தமடைதற்காகச் செய்யும் செயல்கள் வீண்செயலாய் முடியும். ஆதலின் அது பொருந்தாதென்க. மற்றென்னையோ அவ்வாறு கூறியதன் கருத்தெனின், சருவபரிபூரணனுந்தன்மையைப் பெற்று அதுவாய் இருக்கும் தன்மையுடையனுயினும் என்பதே கருத்தாமென்க. அதற்கதுவே கருத்தென்பது அந்தவுயிர் என்றதனுல் வலியுறுத்தப்படும். என்னை, பசுவாவது ஆன்மா என்று மேல் எடுத்துக்கொண்ட செய்யுளில் "அசையாத சிவத்துவம் சேதன வான்மாவிடத்திலனாதியே மலத்தடையாம்" என்று கூறி, அதனையே அந்தவுயிர் எனச் சுட்டினுராதலினென்க. இக்கருத்தும் உணராது, நூலாசிரியர் முன்னொடுபின் முரணுறக் கூறுரென்பதும் உணராது, தந்தமக்கு வேண்டியவாறே கூறுவனவெல்லாம் பொருளாகாவென்க.

உயிரும் சிவமும் சித்தென்னும் சாதிப்பொதுமையால் ஒரு தன்மையனவாயினும், உயிர் அறிவிக்க அறியும் சித்து. சிவம் தானேயறியும் சித்து. ஆதலின் சிவத்தைத் தந்தை என்றும் உயிரை மகன் என்றும் உவமையால் விளக்கினுர். அன்றியும் சிவத்தின்றன்மையாகிய எண் குணங்களும் தன்பால் விளங்கிச் சிவானந்தத்தையநுபவித்தற்கு உரிமையுடையது உயிராதலானும் தந்தை மகனெனக்கூறினுரென்றலுமொன்று. தந்தையின் கடன் மகனை நல்வழிப்படுத்துதலேயாம். படுத்துங்கால் நன்னெறி தவறின் அதற்குத் தகவொறுத்தலும் தந்தையின் கடனும். அங்ஙனமொறுத்தலும் நல்வழிப்படுத்துதற்பொருட்டேயாதலின் அது அறமாவதன்றி மறமாகாதென்க. ஆதலால், அநாதியேமலத்துட்கிடந்து வருந்துமுயிர்க்கு இரங்கித் தநுகரணுதிகளை யிறைவன் கூட்டுவித்து அவற்றுல் மலத்தை நீக்கிக்கொள்ளும் முறைமையையறிதற்கு வேதாகமங்களையும் தந்தருளியிருக்க, அவ்வேதாகமவழியொழுகாது யான் எனதென்னுஞ் செருக்குற்று, தன்னையும் தலைவனையும் உணராத பிழையை நீக்கி உய்வித்தற்பொருட்டு, பிறப்பிறப்புக்களில் உயிரை இறைவன் கூட்டுவன் ஆதலின் "தந்தை

மகன் பிழைகண்டோரிடைப்பிணிக்குமாபோல் சங்கரனால் ஆன்மா வும் பந்திக்கப்படுவன்'' என்றார். இக்கருத்தேபற்றி,

''தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ் சொலாற்றின்
வந்திடா விடினுறுக்கி வளாரினா லடித்துத்தீய
பந்தமுமிடுவரெல்லாம் பார்த்திடிற் பரிவேயாகு
மிந்தநீர் முறைமையன்றோ வீசனார் முனிவுமென்றும்.''

என்றருளிச்செய்தனர் அருணந்திசிவாசாரியரும். (சிவஞான சித்தியார் 2-ம் சூ-ம். செ-16.)

தந்தை மகன் போலெனக் கூறினமையால் தந்தையும் மக னும் போல, சிவமுமுயிரும் வேறு வேறென்று கொள்ளற்க. பொருட்டன்மைபற்றி வேறெனவும், அங்ஙனமாயினும் வேறு வேறாகப் பிளவுபடப் பிரித்தறிவாராவெனவும், அவ்வாறு பிரித் தறிய வாராத பொருள்களைப் பிரித்தறியவரும் தந்தை மகன் போல உவமித்தது அவனுக்குரியனவெல்லாம் பெறுதற்குரியன் இவன் என்பதுபற்றியே யாமெனவும் உணர்ந்துகொள்க. (6)

ஆன்மா எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குமாற்றை அறுவகைப் படுத்துத் தொகுத்துக் கூறுகின்றது.

ஆன்மாவு முபாதிபே தங்களினாற் பூத
வான்மாவந் தரான்மா தத்துவான் மாசீ
வான்மா மந்திரான்மா பரமான்மா வெனவே
யாறுதிற மாம்பரமான் மாவுக் கப்பால்
ஆன்மாவே றிலைபூத பரிணமத் தாற்பூ
தான்மாவாஞ் சடமுயிரா னதிட்டிப்ப தாகி
ஆன்மாவா னதியைம்பூ தபீசதன்மாத் திரைகள்
மலிகரணத் திரயக்கூட் டேவுசட மாமே.

(இ-ள்.) ஆன்மாவும் உபாதிபேதங்களினால் பூதான்மா அந்த ரான்மா தத்துவான்மா சீவான்மா மந்திரான்மா பரமான்மா என ஆறு திறமாம்– (சார்ந்ததன் வண்ணமாம் தன்மையுடைய) ஆன் மாவும் தன்னாற் சாரப்படும் பொருட்பேதம்பற்றி பூதான்மா அந் தரான்மா தத்துவான்மா சீவான்மா மந்திரான்மா பரமான்மா என

ஆறு வகைப்படும்,— பரமான்மாவுக்கு அப்பால் ஆன்மா வேறு இலை— பரமான்மாத் தன்மையை அடைவதன்மேல் ஆன்மாவுக்கு அடையப்படுவதாய் நிற்பது வேறொன்றுமில்லை,— பூத பரிணமத்தால் சடம் உயிரால் அதிட்டிப்பதாகியான்மா பூதான்மாவாம்— பூதத்தின் பரிணமமாகிய தூல உடம்பு உயிரால் அதிட்டிக்கப்படுவதாகி (அங்ஙனம் அதிட்டித்து நிற்குங்கால்) ஆன்மா பூதான்மாவெனப்படும்;— வாணுதி ஐம்பூதபீசதன் மாத்திரைகள் மலிகரணத்திரயக்கூட்டுறவு சடமாம்—ஆகாய முதலிய ஐந்து தூல பூதங்களும் அவற்றிற்குக் காரணமாகிய சப்த முதலிய ஐந்து தன் மாத்திரைகளும் விடயங்களிற் செல்லுகின்ற சாத்துவிதம் இராசதம் தாமதமாக விருத்திப்படும் அந்தக் கரணமுமாகிய இவற்றின் கூட்டம் தூலவுடம்பாம். (எ-று.)

(பொ-ரை) சார்ந்ததன் வண்ணமாம் தன்மையையுடைய ஆன்மாவும், தன்னுற் சாரப்படும் பொருட்பேதங்களிளுற் பூதான்மா அந்தரான்மா தத்துவான்மா சீவான்மா மந்திரான்மா பரமான்மா வென ஆறு வகைப்படும். பரமான்மாத் தன்மையை அடைவதன் மேல் ஆன்மாவுக்கு அடையப்படுவதாய் நிற்பது வேறொன்றுமில்லை. பூதத்தின் பரிணமமாகிய தூலவுடம்பு உயிரால் அதிட்டிக்கப்படுவதாகி யங்ஙனம் அதிட்டித்து நிற்குங்கால் ஆன்மா பூதான்மாவெனப்படும். ஆகாய முதலிய ஐந்து தூல பூதங்களும் அவற்றிற்குக் காரணமாகிய சப்த முதலிய ஐந்து தன்மாத்திரைகளும் விடயங்களிற் செல்லுகின்ற, சாத்துவிதம் இராசதம் தாமதமாக விருத்திப்படும் அந்தக்கரணமுமாகிய இவற்றின் கூட்டம் தூலவுடம்பாம். (எ-று.)

(கரு-ரை.) ஆன்மா, சாரப்படும் பொருட் பேதங்களால் பூதான்மா அந்தரான்மா தத்துவான்மா சீவான்மா மந்திரான்மா பரமான்மாவென ஆறு திறப்படும் என்பதாம்.

ஏகாரம் இரண்டும் அசை.

சடம் என்பது இவ்விடத்துத் தூலவுடம்பு மாத்திரையே குறித்து நின்றது.

பூத முதலிய ஆறனுள், ஏனையவற்றிற்கு அதிட்டிக்கப்படுந் தன்மையிருத்தலின், அவற்றுடன் ஆன்மா கூடவும், கூடுங்கால் அவ்வப் பெயரைப் பெறவும் கூடும். பூதங்கள் அங்ஙனமாதலின் மையின் அவற்றைக் கூடுதலும், கூடுங்கால் அப்பெயரைப் பெறுதலும் எவ்வாறு கூடுமென்ற ஆசங்கையை நீக்குதற்கு, பூதத்தின் பரிணாமமாகிய தூலவுடம்பை யதிட்டித்து அதுவாய் நிற்றலால் பூதான்மாவெனப்படுமென்றும், அத்தூலவுடம்பை அதிட்டித்த லும் மனத்தோடு அவ்வுடம்பு கூடியவிடத்தன்றி இல்லையென்றும் கூறினார். இவ்வளவேயன்றி, பூதான்மாவாய் நிற்கும் முறை இவ் விடத்துக் கூறவில்லையென்றுணர்ந்துகொள்க. அது முன்னர்க் கூறப்படும். மலிகரணத்திரயமென்பது விடயங்களிற்சென்று அது வதுவாய்ப் பரிணமிக்கும் முக்குணங்களையென்றறிக. (7)

பதிப்பொருளின் இலக்கணங் கூறுகின்றது.

பதியெனவே சொலற்குரிய பரமன்மந்தி ரான்மா
பஞ்சமந் திரதேகி மந்திரங்கட் கெல்லாம்
அதிபதியைந் தொழில்புரிவோன் பதவருண திகளா
னருச்சனைபண் ணப்படுவோன் சடபுவனங் களினுக்
குதவியா தாரங்கா மியங்களெல்லாங் கொடுப்போன்
யோகபீ டத்திருப்போன் ஞானகன்ம மோப்பான்
அதிதூல சூக்குமமிச் சிரனுமா யிருப்பா
னருண்மனோன் மனிமுதல்வ னவன்சதா சிவனே.

(இ-ள்) பதியெனவே சொலற்குரிய பரமன்—பதியென்று சொல்லுதற்குரிய மேலானவன்,—மந்திரான்மா—மந்திரங்களைச் சரீரமாகவுடையவன்,—பஞ்சமந்திரதேகி—அம்மந்திரங்களுள்ளும் சிறந்து விளங்கும் ஈசானம் தற்புருடம் அகோரம் வாமம் சத்தி யோசாதம் என்னுமைந்து மந்திரங்களைத் திருமேனியாகக்கொண் டுள்ளவன்,—மந்திரங்கட்கெல்லாம் அதிபதி—எல்லா மந்திரங்க ளுக்கும் அதிட்டான கருத்தாவாயிருப்பவன்,—ஐந்தொழில் புரி வோன்—சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென் னும் ஐந்து கிருத்தியங்களையும் ஆன்மாக்களின் பொருட்டு என் றும் மேற்கொள்பவன்,—பதவருணதிகளால் அருச்சனை பண்ணப் படுவோன்—பதம் வன்னம் மந்திரம் புவனம் தத்துவம் கலை என்

னும் ஆறத்துவாக்களாலும் அருச்சனை பண்ணப்படுபவன்,—சட புவனங்களினுக்கு உதவி ஆதாரம்—ஆறத்துவாக்களும் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சமெனப்படுமாதலால் அவ்விருவகையான ஆறு புவனங்களுக்கும் உதவியாயும் ஆதாரமாயும் நிற்பவன்,—காமியங்களெல்லாங் கொடுப்போன்—உயிர்கட்கு வேண்டுவனவெல்லாம் வரையாது கொடுத்தருளும் வள்ளல்,—யோகபீடத்து இருப்போன்—ஆன்மாக்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயு நிற்கின்ற சத்தியெனப்படும் யோகாசனத்தில் இருப்பவன்,—ஞான கன்மம் ஒப்பான்—ஞானசத்தி கிரியாசத்தி இரண்டையும் சமமாகப் பொருந்தி நிற்பவன்,—அதிதூலசூக்கும மிச்சிரனுமாயிருப்பன்—மேலான உருவும் அருவுங்கலந்த அருவுருவமாயிருப்பவன்,—அருள்மனோன்மனிமுதல்வன்—அருளாகிய மனோன்மனியென்னும் சத்திக்கு நாயகன்,—அவன் சதாசிவன்—இவ்வாறு விளங்கும் அவன் சதாசிவன் எனப்படுவன். (எ-று)

(பொ-ரை) பதியென்று சொல்லுதற்குரிய மேலானவன் மந்திரங்களைச் சரீரமாகவுடையவன்; அம்மந்திரங்களுள்ளும் சிறந்து விளங்கும் ஈசான முதலிய ஐந்து மந்திரங்களைத் திருமேனியாகக் கொண்டுள்ளவன்; எல்லா மந்திரங்கட்கும் அதிட்டான கருத்தாவாயிருப்பவன்: சிருட்டி முதலிய ஐந்து கிருத்தியங்களையும் ஆன்மாக்களின்பொருட்டு என்றும் மேற்கொள்பவன்: பதம் முதலிய ஆறத்துவாக்களாலும் அருச்சனை பண்ணப்படுபவன்; ஆறத்துவாக்களும் சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சமெனப்படுமாதலால் அவ்விருவகையான ஆறு புவனங்களுக்கும் உதவியாயும் ஆதாரமாயும் நிற்பவன்; உயிர்கட்கு வேண்டுவனவெல்லாம் வரையாது கொடுத்தருளும் வள்ளல்; ஆன்மாக்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கின்ற சத்தியெனப்படும் யோக பீடத்தில் இருப்பவன்; ஞானசத்தி கிரியாசத்தி இரண்டையும் சமமாகப் பொருந்தி நிற்பவன்; மேலான உருவும் அருவுங் கலந்த அருவுருவமாயிருப்பவன்; அருளாகிய மனோன்மனி என்னுஞ் சத்திக்கு நாயகன்; இவ்வாறு விளங்குமவன் சதாசிவனெனப்படுவன். (எ-று.)

(க-ரை) பதி, அருவுருவத் திருமேனியையுடைய சதாசிவன் என்பதாம்.

ஏகாரம் இரண்டும் அசை.

பதி என்று சொல்லுதற்குரிய தடத்தம், சிவம் என்று சொல்லுதற்குரிய சொருபத்தின் வேறன்றென்பது தோன்ற பதியெனவே சொலற்குரிய பரமன் என்றார். எனவே, நிலையின் பேதமேயன்றிப் பொருட்பேதமன்றென்க.

மந்திரங்களினால் வழிபடுவோருக்கு அம்மந்திரங்களினிடமாக விளங்கித்தோன்றுவனாதலின் மந்திரான்மா என்றார். மந்திரங்களைச் செபிப்பதுடன் பூசை செய்ய விரும்புவோர்க்கு அப்பூசையினிமித்தம் வேண்டப்படுந் திருமேனி ஐந்து மந்திரங்களால் அமைத்துக்கொள்ளப்படுமாகலின் பஞ்சமந்திரதேகி என்றார். அவ்வைந்து மந்திரங்களுள், ஈசானம் சிரசாகவும், தத்புருடம் முகமாகவும், அகோரம் இருதயமாகவும், வாமதேவம் நாபியாகவும், சத்தியோசாதம் முழந்தாளாகவும் அமைத்துப் பூசிப்பது முறைமை. அவ்வைந்தங்கங்களுள், ஈசானமநுக்கிரகத்தையும், தத்புருடம் திரோதானத்தையும், அகோரம் சங்காரத்தையும், வாமதேவம் திதியையும், சத்தியோசாதம் சிருட்டியையும் செய்யுமாகலின் பஞ்சகிருத்திய கர்த்தாவுக்கு இவ்வைந்து மந்திரங்களும் திருமேனியாயின.

பிரமன், விட்டுணு முதலிய தேவர்களை அவரவர்க்குரிய மந்திரங்களால் வழிபடின் அவ்வம்மூர்த்திகள் அவ்வம் மந்திரங்களிடமாக வெளிப்பட்டுத் தோன்றி அருள் செய்யுமென்று கூறும் நூல்களோடு, எல்லா மந்திரங்களையும் சரீரமாகவுடையவன் என்னும் பொருள்படும்படி மந்திரான்மா என்றது முரணுமோ என்னும் ஐயமறுத்தற்கு மந்திரங்கட்கெல்லாம் அதிபதி என்றார். எனவே, எந்த எந்த மந்திரங்களினால் எந்த எந்தத் தெய்வங்களை வழிபடினும் அவ்வத்தெய்வங்களுக்கு அதிபதியாய் நின்று அம்மந்திரங்களில் விளங்கித்தோன்றுவன் என்பதாம். அதிபதி—அதிட்டிக்குந் தலைவன்.

சிருட்டி முதலிய ஐந்து கிருத்தியங்களைச் செய்யும் நிலைபதியெனப்படுமென்பது தோன்ற ஐந்தொழில் புரிவோன் என்றார். இந்நிலையில் ஆறத்துவாக்களையுந் திருமேனியாகக்கொண்டு விள

ங்குவன். எவ்வாறெனின், சாந்திய தீதகலை திருமுடி; சாந்திகலை திருமுகம்; வித்தியாகலை மார்பு; பிரதிட்டாகலை குய்யம்; நிவிர்த்தி கலை முழந்தாளும் பாதமும்; இவ்வாறு பஞ்சகலைகள் அங்கமாகவும் மந்திரம் இரத்தமாகவும், பதம் நரம்பாகவும், வன்னம் தோலாக வும், தத்துவம் தசையாகவும், புவனம் உரோமமாகவும், திரு மேனி கொண்டருளுவன். ஆதலின் பதவருணதிகளால் அருச் சனை பண்ணப்படுவோன் என்றார். எனவே, அத்துவாக்கள் ஒவ் வொன்றின் நாமங்களானும் அருச்சனை பண்ணப்படுவர் என்க.

அத்துவாக்கள் திருமேனி என்பதனை "அவபவங்கலைகளாகு மாகிய புவனரோமம், சுவையுறுதுவக்குவன்னஞ் சோரிமந்திர மதாகுஞ், தவமுறுபதநரம்பு தத்துவந் தாதுவாகுஞ், சிவமுயர் சதாசிவர்க்குச் சிறந்தவாறுறுப்புந்தானே." என்னும் அபியுத்தர் திருவாக்கானும் அறிக. அங்ஙனமாயின், கந்தர் கலிவெண்பாவில் "மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத், தொந்தமுறும் வன்னமே தொக்காகப், பந்தனையா, லொத்தபுவனத்துருவேயு ரோமமாத், தத்துவங்களேசத்ததாதுவா, வைத்த கலையே யவயவ மாக், காட்டுமத்துவாவி னிலையே வடிவமாய் நின்றோய்" என்றத னால் பதம் சிரமாக அமைக்கப்பட்டிருக்கின்றதே; மேற்குறித்த செய்யுளில் பதம் நரம்பாகவமைக்கப்பட்டிருக்கின்றது; இவ்வாறு கூறுதல் முரணாகாதோவெனின்; ஆகாது. என்னை: சிரசில் நரம்பு களுக்குப் பிரதானமான சுழுமுனை நாடி இருக்கின்றபடியால் அந் தப்பிரதானம்பற்றி கலிவெண்பாவில் முடி என்றார். மேற்கூறிய செய்யுளில் அந்தப் பிரதான நரமபும் சிரசில் ஓர் உறுப்பாதலின் அதனை நரம்பென்று பிரித்துக்கூறி, சிரத்தானம் அவயவத்து ளொன்றாதலின் அதனைக் கலையுளடக்கினர். ஆதலின் முரணி ன்மை அறிக.

ஆறத்துவாக்களுள் புவனம் ஒன்றாயினும், அவ்வாறனையும் சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சமெனக் கூறு முறைமைபற்றிச் சடபுவனமென்றார். சட என்பது ஆறு என்னும் பொருள்பட வந்த வடமொழித்திரிபு.

அத்துவாக்கள் சடமாதலால் சித்து ரூபனாகிய முதல்வனுக்கு அவை திருமேனியாமென்ற தெவ்வாறு பொருந்துமென்பார்க்கு

எல்லாப்பொருளோடும் கலந்து அதுவாய் நிற்கும் நிலைபற்றி அத்துவாக்கள் திருமேனி எனப்படுமென்பது தோன்ற பஞ்ச மந்திர தேகி என்றும், ஆயினும் பொருட்டன்மையாலவற்றின் வேறாய் நிற்பனென்பது தோன்ற ஆதாரமென்றும், வேறாய் நிற்பினும் அவை தொழிற்படுதற்கு உடனின்று செலுத்துவனென்பது தோன்ற உதவி என்றுங் கூறினார். இக்கருத்தேபற்றி,

"அத்துவா மூர்த்தியாக வறைகுவ தென்னை யென்னின்
நித்தனுய் நிறைந்தவற்றி னீங்கிடானிலைமையானுஞ்
சித்துட னசித்திற்கெல்லாஞ் சேட்டிதனுகலானும்
வைத்ததாமத்துவாவும் வடிவென மறைகளெல்லாம்"

என அருணந்திசிவாசாரியரும் அருளிச்செய்வாராயினர்.

(சிவஞான சித்தியார், 1-ம் சூ-ம். செ. (56)

உலகபோகங்களைத் தருவதும் அநுக்கிரகமேயென்பது தோன்றக் காமியங்களெல்லாங் கொடுப்போன் என்றார். எனவே, பெத்த நிலையில் போகங்களையும் முத்தி நிலையில் பாச நீக்கம் சிவப்பேறு இரண்டனையும் தருதல் அநுக்கிரகமெனப்படுமென்பதுணர்ந்துகொள்க.

ஆன்மாக்களுடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் பெத்தநிலையில் முதல்வன் சத்தியெனப்பெயர் பெறுவன். அங்ஙனம் நின்றும் ஆன்மாக்களுக்கு விளங்கித்தோன்றாமையின், இது திரோதான சத்தி எனப்படும். இத்திரோதானசத்திவடிவாய் நின்று பஞ்ச கிருத்தியம் செய்தலின், யோகபீடத்திருப்போனென்றார். முத்தி நிலையினும், ஆன்மாக்களுடன் இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன். அங்ஙனம் நிற்குங்கால் பராசத்தி சொரூபமாக விளங்கித் தோன்றுவன்.

ஞானசத்தியையும் கிரியா சத்தியையும் சமமாகப் பொருந்தி வியாபிக்குங்கால் நிஷ்கள சகளத் திருமேனியுண்டாமாதலின், ஞான கன்மம் ஒப்பான் என்றார். இக்கருத்தேபற்றி "ஒக்கிலீனமில் சதாசிவனென்றார்" அருணந்தி சிவாசாரியரும். (சிவஞான சித்தியார் 1-ம் சூ-ம், செ. 65) ஆண்டு இரண்டும் என்னும் எழு

வாய் வருவித்துரைக்க. அருவுருவம் என்றதனால் மாயா காரியங்களுள் வாயுபூதம் அருவுருவாதல்போலக் கொள்ளலாகாதென்ப துணர்த்துதற்கும், இது சத்தியின் காரியமென்பதுணர்த்துதற்கும், அதி தூல சூக்கும மிச்சிரனுமாயிருப்பானென்றார். எனவே, தூலப்பொருள்களோடு கலந்து அதுவாய் நிற்றலால் உருவும், பொருட்டன்மைபற்றி வேறாய் நிற்றலால் அருவுமாதல் அருவுருவம் என்றவாறும். (8)

சிவப்பொருளினிலக்கணம் கூறுகின்றது.

பரமசிவன் சதாசிவனேன் பதிக்கு மேலோன்
 பகர்நிரஞ்ச னன்னிரா மயனிரா தாரன்
தருவருண ரூபமிலான் சருவக்ஞன் சாந்தன்
 சருவபரி பூரணன்சர் வான்மாவா யிருப்பான்
அருள்சர்வதோ முகனசிந்தி யன்னறிவுக் கேட்டா
 னதிசூக்கு மன்னிரா லம்பயனேன்று முள்ளான்
ஒருவன்சத் தியினன்வியா பகனப்பிர மேய
 னுவமையிலான் றிலதயிலத் துட்புறம்போத் துறைவோன்.

(இ-ள்) பரமசிவன்—சிவமென்று சொல்லுதற்குரிய பரமசிவன்,-சதாசிவனென்பதிக்குமேலோன்—சதாசிவனென்று சொல்லப்படும் பதிக்கு மேலானவன்,—பகர் நிரஞ்சனன்—சொல்லாநின்ற மலமில்லாதவன்,—நிராமயன்—பிறப்பிறப்பென்னும் நோயில்லாதவன்,—நிராதாரன்—தனக்கோர் ஆதாரமில்லாதவன்,—தருவருண ரூபமிலான்—மாயை தருகின்ற நாமமும் வடிவமும் இல்லாதவன்,—சர்வக்ஞன்—எல்லாமறிபவன்,—சாந்தன்—விருப்பு வெறுப்பு என்னும் விகாரமில்லாதவன்,—சருவபரிபூரணன்—எங்கும் நிறைந்திருப்பவன்,—சர்வான்மாவாயிருப்பான்—எல்லா ஆன்மாக்களும் தானாயிருப்பவன்,—சர்வதோ அருள்முகன்—எல்லாவுயிர்களிடத்தும் கிருபா நோக்கமுடையவன்,—அசிந்தியன்—சிந்தனைக்கு அதீதமானவன்,—அறிவிற்கெட்டான்—உயிரறிவிற்கெட்டாதவன்,—அதிசூக்குமன்—மேலான சித்துரூபன்,—நிராலம்பன்—பற்றுக்கோடில்லாதவன்,—என்றுமுள்ளான்—எக்காலத்தும் ஒரு தன்மையாயுள்ளவன்,—ஒருவன்—ஒப்பற்றவன், —சத்தியினன்—அள

விலாற்றலுடையவன்,—வியாபகன்—(பசுபாசங்கள் தன்னிடத்து வியாப்பியமாயிருக்கத்தானவற்றுடன்) கலந்து நிற்பவன்,—அப்பிரமேயன்—பிரமாணங்களாலறியப்படாதவன்,—உவமையிலான்—உவமைகளில் வைத்து அறியப்படாதவன்,—திலதயிலத்து ஒத்து உட்புறம்பு உறைவோன்—எள்ளும் நெய்யும்போல சரம் அசரமாகிய எல்லாப்பொருள்களின் உள்ளும்புறம்பும் விளங்குபவன்(எ-று)

(பொ-ரை.) சிவமென்று சொல்லுதற்குரிய பரமசிவன், சதாசிவனென்று சொல்லப்படும் பதிக்கு மேலானவன்; சொல்லாநின்ற மலமில்லாதவன்; பிறப்பிறப்பென்னும் நோயில்லாதவன்; தனக்கோர் ஆதாரமில்லாதவன்; மாயை தருகின்ற நாமமும் வடிவமும் இல்லாதவன்; எல்லாமறிபவன்; விருப்பு வெறுப்பு என்னும் விகாரமில்லாதவன்; எங்கும் நிறைந்து நிற்பவன்; எல்லா ஆன்மாக்களும் தானுயிருப்பவன்; எல்லாவுயிர்களிடத்தும் கிருபா நோக்கமுடையவன்; சிந்தனைக்கு அதீதமானவன்; உயிரறிவிற்கெட்டாதவன்; மேலான சித்துருபன்; பற்றுக்கோடில்லாதவன்; எக்காலத்தும் ஒருதன்மையாயுள்ளவன்; ஒப்பற்றவன்; அளவிலாற்றலுடையவன்; பசுபாசங்கள் தன்னிடத்து வியாப்பியமாயிருக்க தான் அவற்றுடன் கலந்து நிற்பவன்; பிரமாணங்களாலறியப்படாதவன்; உவமைகளில் வைத்து அறியப்படாதவன்; எள்ளும் நெய்யும்போல சரம் அசரமாகிய எல்லாப்பொருள்களின் உள்ளும் புறம்பும் விளங்குபவன். (எ-று.)

(க-ரை.) சிவமென்று சொல்லுதற்குரிய பரமசிவன், சித்துருபனாய், சரம் அசரமாகிய எல்லாப்பொருள்களின் உள்ளும் புறம்பும் கலந்து அவற்றின் மேலாய் விளங்குபவன் என்பதாம்.

பரமசிவனென்பது சதாசிவனுக்குரிய பெயரென மயங்காதிருத்தற்கு, சதாசிவனென்பதிக்கு மேலோன் என்றும், மலமும், அஃதேதுவாக உண்டாம் பிறப்பிறப்பாகிய நோயும் இல்லாதவனென்பதுணர்த்துதற்கு நிரஞ்சனன் நிராமயன் என்றும், மலமும் பிறப்பிறப்பும் உடைய பசுக்களுக்கு, தான் ஆதாரமாதல்போலத் தனக்கோர் ஆதாரமின்றி நிற்பன் என்பதுணர்த்தற்கு நிராதாரன் என்றும், அங்ஙனம் நிற்குமவனுக்கு மாயையின் காரியத்திற்குப்

போல நாமமும் உருவமுமில்லை என்பதுணர்த்துதற்கு தருவருண ரூபமிலானென்றும், இவ்வாறு நிற்குமவன் ஒன்றையுமறிவதில்லை; அறியின் விகாரமடைவன் என்றல் கூடாதென்பதுணர்த்துதற்கு சர்வஞ்ஞன் என்றும், அங்ஙனமறிவதனால் விருப்புவெறுப்பு அடையான் என்பதுணர்த்துதற்குச் சாந்தனென்றும், சாந்தன் என்றதனால் ஒடுங்கியிருப்பானோவென்னும் ஐயமறுத்தற்குச் சர்வபரிபூரணனென்றும், அவ்வாறு நிற்கும் நிலையில் கலப்பால் ஆன்மாக்களுடன் ஒன்றாய் நிற்பனென்பதுணர்த்துதற்கு சர்வான்மாவாயிருப்பானென்றும், பொருட்டன்மையால் வேறாய் நிற்பனென்பதுணர்த்துதற்கு அருள் சர்வதோமுகன் என்றும், இங்ஙனம் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் நிற்கினும் கருவிகளால் அறியப்படானென்பதுணர்த்துதற்கு அசிந்தியன் என்றும், ஆயின் உயிரினறிவால் அறியப்படுவனோ? படின் உயிரினறிவாலறியப்படுவன வெல்லாஞ் சடமாகுமேயென்னுமையமறுத்தற்கு அறிவிற்கெட்டானென்றும், ஆயினும் அவனுக்குச் சொரூபமுண்டோ வில்லையோ? இல்லையெனின், சூனியமாம்; உண்டெனில் யாதோவென்னும் ஐயமறுத்துச் சித்துருபனென்பதுணர்த்துதற்கு அதிசூக்குமன் என்றும், சித்துருவாகிய உயிர் யாதானுமொன்றைப்பற்றி நிற்பதன்றித் தனித்து நில்லாதவாறுபோல இவனும் யாதானுமொன்றைப்பற்றி நிற்பானோவென்னும் ஐயமறுத்தற்கு நிராலம்பனென்றும், இவ்வியல்பு இயற்கையென்பதுணர்த்துதற்கு என்றுமுள்ளான் என்றும், இத்தன்மையுடைய சிவனைச்சார்ந்த வுயிரும் சிவமெனவேபடுமாதலின் சிவம்பலவாமோவென்னுமையமறுத்தற்கு ஒருவன் என்றும், இத்தன்மைகளும் தனது சத்தியின் மாட்டுளதாகிய இயல்பென்பதுணர்த்துதற்கு சத்தியினன் என்றும், உயிரின்சத்தி மலத்தின்சத்தி மாயையின்சத்தி என்பன வாதியாக பல பொருட்கும் சத்தியுண்மை கொள்ளப்படுதலின் சத்தியினன் என்றதனால் சிறப்பென்னையோவென்பார்க்கு, பசுபாசங்கள் சத்தியையுடையனவாயினும் அச்சத்திகள் வியாப்பியமாகுமன்றி இதுபோல வியாபகமாகாதென்பதுணர்த்துதற்கு வியாபகனென்றும், இத்தன்மையுடையானை அறிய விரும்புவோர் அவனருளைச் சார்ந்து நின்று அறியவேண்டுமென்பதுணர்த்துதற்கு அப்பிரமேய

னென்றும், பிரமாணமென்றது ஈண்டு அநுமானப் பிரமாணத்தையே குறித்து அது உவமைகூறி முடிக்கப்படுமாதலின் பிரமாணங்களாலறியப்படாத இவனுக்கு உவமை கிடையாதென்பதுணர்த்துதற்கு உவமையிலான் என்றும், ஆயினும் உவமையில் வைத்து உணர்த்தவில்லையானல் கேட்போர்க்கு மனமெழுச்சி உண்டாகாதாகலின் அது உண்டாதற்பொருட்டு இல்தயிலத்துட்புறம் பொத்துறைவோன் என்றுங் கூறினர்.

வருணம்—அக்கரம். அது அதனல் உண்டாம் சொல்லைக் குறித்து நாமம் என்னும் பொருளில் நின்றது. நாமம் என்பது ஈண்டு மக்கள் தேவர் முதலிய பெயர்களைக்குறித்தது. (9)

## சுவான்ம சாக்ஷாத்காரப் பிரகரணம்.

அஃதாவது ஆன்மாவினுடைய உண்மைத்தன்மை விளங்கித் தோன்றுதலைக் கூறும் பகுதி.

சிவப்பொருள் அத்தன்மைத்தாயினும் அதனையடைதற்குபாயம் கூறுகின்றது.

முத்தியுபா யம்பகர்கேம் பரமரக சியம்யா
முன்னொருவர்க் குபதேசஞ் செய்ததன்று குருவால்
வைத்தபா ரம்பரியத் தறிவதுபல் சமய
வாதிகளா னறிவதன் றக்கிரா கியமாய்
அத்துவய மாயதிசூக் குமமாநிட் களமா
வறிகின்றன் வத்துவையா தொருவனவன் சிவனும்
ஒத்தபெருஞ் சமுசாரப் பிறப்பிறப்பை யொழிக்கு
முயர்ஞான மிதுசருவ தோமுகமா யிருக்கும்.

(இ-ள்) முத்தி உபாயம் பகர்கேம்–(சிவப்பொருள் அத்தன்மைத்தாயினும்) அதனை அடைதற்கு வுபாயஞ்சொல்லுகின்றேம்,–பரமரகசியம்–இவ்வுபாயம் மிகமேலான ரகசியமாம்,—யாம் முன் ஒருவர்க்கு உபதேசம் செய்ததன்று–யாம் (இந்தவுபாயத்தை) இதற்குமுன் ஒருவர்க்கும் உபதேசஞ்செய்ததில்லை,—குருவால் பாரம்பரியத்துவைத்தறிவது–குருபாரம்பரையில் வைத்தறியத்தக்கது,—பல்சமய வாதிகளா னறிவதன்று–பல வேறுவகைப்பட்ட சமய

வாதிகளால் அறியத்தக்கதன்று. (அவ்வுபாயம் யாதெனின்),—வத்துவை யாதொருவன்—சிவப்பொருளை எவனொருவன்,—அக்கிராகியமாய்—(பாசஞானபசுஞானங்களால்) கிரகிக்கப்படாததாகவும்,—அத்துவயமாய்—உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பதாகவும்,—அதிசூக்குமம் ஆ—மேலான சூக்குமசித்தாகவும்,—நிட்களம் ஆ—ஏகதேசமான வடிவமில்லாததாகவும்,—அறிகின்றானவன் சிவனும்—அறிகின்றானே அவன் சிவனாவன்,—ஒத்தபெருஞ் சம்சாரப்பிறப்பிறப்பை ஒழிக்கும் உயர்ஞானமிது—தனக்குத்தானே சமானமாயுள்ள, பெரிய சம்சாரமென்னும் பிறப்பிறப்புகளைப் போக்குகின்ற சிவஞானமாகிய இது,—சர்வதோமுகமாயிருக்கும்—எங்குமாயிருக்கும். (எ-று.)

(பொ-ரை) சிவப்பொருள் அத்தன்மைத் தாயினும் அதனை அடைதற்கு உபாயஞ்சொல்லுகின்றேம். இவ்வுபாயம் மேலான ரகசியமாம். இந்தவுபாயத்தை யாம் இதற்குமுன் ஒருவர்க்கும் உபதேசஞ்செய்ததில்லை. குருபரம்பரையில் வைத்து அறியத்தக்கது. பலவேறுவகைப்பட்ட சமயவாதிகளா லறியத்தக்கதன்று. அவ்வுபாயம் யாதெனின், சிவப்பொருளை எவனொருவன் பாசஞான பசுஞானங்களால் கிரகிக்கப்படாதாகவும், உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பதாகவும், மேலான சூக்குமசித்தாகவும், ஏகதேசமான வடிவமில்லாததாகவும் அறிகின்றானோ அவன் சிவனாவன். தனக்குத்தானே சமானமாயுள்ள, பெரிய சம்சாரமென்னும் பிறப்பிறப்புக்களைப் போக்குகின்ற சிவஞானமாகிய இது எங்குமாயிருக்கும். (எ-று.)

(க-ரை) சிவப்பொருளை அறிதற்கு உபாயம் சிவஞானம். அச்சிவஞான மெங்குமா யிருக்கு மென்பதாம்.

ஒருவர்க்கு என்றவிடத்து எஞ்சாப்பொருளைத்தரும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

குருவாலென்ற விடத்து ஆல் அசை.

அதி சூக்குமமா நிட்களமா, என்ற ஈரிடத்தும் ஈறு குறைந்தது.

கலை முதலிய தத்துவங்களும் உயிரோடு கூடுதலால் சித்தெனப்படுமென்பது தோன்ற சிற்சங்கசித்தென்று மிருகேந்திரத்திற் கூறியவாறு அவையுஞ்சித்தெனப்படும். படவே, கலைமுதலியன தூலசித்தெனவும், ஆன்மா சூக்குமசித்தெனவும், சிவம் அதிசூக்கும சித்தெனவும் கொள்ளவேண்டுமென்பது தோன்ற அதி சூக்குமமென்றார்.

நிட்களம் என்றது ஈண்டு ஏகதேசம் அன்றென்பதுதோன்ற நின்றது. அது, தடத்தநிலை கூறுமிடத்து அருவத்திருமேனி என்னும் பொருளில் நின்றது.

சிவஞானமெனினும் சிவனருளெனினுமொக்கும்; ஆதலின் சர்வதோமுகமாயிருக்கும் என்றார். சிவனை அறிதற்கு உபாயம் சிவனருளென்பதனை "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என மணிவாசகப்பெருமானும் "அவனருளே கண்ணாகக் காணினல்லால்" எனத் திருநாவுக்கரசுசுவாமிகளும் அருளியவாற்றானுமறிக. (10)

சிவஞானத்தால் அபேதமாய் நின்று சிவனை உபாசிக்குமுறைமை கூறுகின்றது.

சறுவகத மாய்ச்சருவ வியாபகமாய் விளங்குஞ்
சருவதத் துவமயமாய்ச் சருவதோ முகமாய்ச்
சருவதத் துவாதீத மாச்சருவான் மாவாய்த்
தகுபொருளுக் கெலாமேலாய் வாக்குமனங் களினன்
அறிவரிதாய் நாமமின்றாய்க் குணங்குறியோ னின்று
யசிந்தியமா யிருந்தசிவ மோநாமேன் றறிந்து
நிறுவிநிரு விகற்பமனத் துபாசிக்கக் கடவன்
நிகழ்த்துமிந்த வுண்மையா மெய்ஞ்ஞானந் தானே.

(இ-ள்.) சறுவகதமாய்—எல்லாவுயிர்களுள்ளும் அந்தரியாமியாய்,—சருவவியாபகமாய்—எல்லாவுயிர்களின் புறம்பும் நிறைவாய்,—சருவதத் துவமயமாய்—எல்லாத் தத்துவங்களுமாய்,—சருவதோமுகமாய்—எல்லாத் தத்துவங்களையும் செலுத்துவதாய்,—சருவதத்துவாதீதமா—எல்லாத்தத்துவங்களுக்கு மப்பாலாய்,— சருவான்மாவாய்—எல்லா ஆன்மாக்களுமாய்,—தகுபொருளுக்கெலாம்மேலாய்—மேலான பொருள்களுக்கெல்லாம் மேலாய்,—வாக்குமனங்களினல்

அறிவரிதாய்—பாசஞான பசுஞானங்களினல் அறிதற்கரிதாய்,—நாமமின்றாய்—பெயரில்லாததாய்,—குணங்குறி யொன்றின்றாய்—குணமொன்றுமின்றாய் குறியொன்றுமின்றாய்,—அசிந்தியமாய்—சிந்தனைக்கெட்டாததாய்,— இருந்த சிவமே நாமென்றறிந்து—உள்ள சிவமே நாமமென்றறிந்து,—நிருவிகற்பமனத்து நிறுவி உபாசிக்கக்கடவன்—விகற்பத்தோடு கூடாத மனத்தின்கண் (அவ்வறிவு) நிலைபெறச்செய்து உபாசிக்கக்கடவன்,—நிகழ்த்தும் இந்த மெய்ஞ்ஞானம் தானே உண்மையாவிளங்கும்—(சிவாகமங்களின் ஞானபாதம்) கூறும் இந்த மெய்ஞ்ஞானமே உண்மையாக விளங்கும். (எ—று)

(பொ-ரை) எல்லாவுயிர்களுள்ளும் அந்தரியாமியாய், எல்லாவுயிர்களின் புறம்பும் நிறைவாய், எல்லாத்தத்துவங்களுமாய், எல்லாத்தத்துவங்களையுஞ் செலுத்துவதாய், எல்லாத்தத்துவங்களுக்குமப்பாலாய், எல்லா ஆன்மாக்களுமாய், மேலான பொருள்களுக்கெல்லாம மேலாய், பாசஞான பசுஞானங்களினல் அறிதற்கரிதாய் பெயரில்லாததாய், குணமொன்றுமின்றாய், குறியொன்றுமின்றாய் சிந்தனைக்கெட்டாததாயுள்ள சிவமே நாமென்றறிந்து, விகற்பத்தோடு கூடாதமனத்தின்கண் அவ்வறிவு நிலைபெறச்செய்து உபாசிக்கக்கடவன். சிவாகமங்களின் ஞானபாதம் கூறும் இந்த மெய்ஞ்ஞானமே உண்மையாக விளங்கும். (எ-று.)

(க-ரை) பாசஞான பசுஞானங்களா லறிதற்கரிய சிவமே நாம் என்றறிந்து நிருவிகற்பமாயுபாசிக்கவேண்டுமென்பதாம்.

சருவதத்துவாதீதமா என்றவிடத்தும், உண்மையா என்றவிடத்தும் ஈறு குறைந்தது.

பாசம் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஞானம் பாசஞானம். பசுத்துவமாகிய தற்போதத்தால் நிகழும் ஞானம் பசுஞானம்.

வாக்கென்பது நாதத்தைக்குறித்து உபலக்கணத்தால் பிருதிவி முதலிய ஏனைய தத்துவங்களையுங் குறிக்கும். குறிக்கவே, தத்துவங்களின் வாயிலாக நிகழும் ஞானம் பாசஞானமாகலின் வாக்கென்பது பாசஞானத்தையும, மனம் உயிருக்கு அணுக்கத்

துணையாய் உயிரெனும்படி நிற்றலால் மனமென்பது பசுஞானத்தையுங் குறித்தன.

குணமென்றது மாயையின் காரியமாகிய சாத்துவித இராசத தாமத குணங்களை. குணமின்றி என்றதனால் இம்மாயா குணமில்லாதவன் என்பது பொருளேயன்றிச் சிற்குணமில்லாதவன் என்பது பொருளன்று. குணமில்லாத பொருள் கிடையாது. உண்டெனில் சூனியமெனப்பட்டு வழுவாம்.

மனத்துக்கறிவரியன் என்றபின்னரும் அசிந்தியன் என்ற கருத்தென்னையெனின், உயிரின் சந்நிதியில் மன முதலியன சிவகரணமாய் நின்று சிவனையறியுமென்பாரை மறுத்தற்பொருட்டு என்க.

சிவமே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றம்.

தான் என்பது கட்டுரைக்கண்வந்த அசை.

ஆன்மாவுக்குத் தற்போதத்தாலும் பாசத்தாலும் உண்டாகும் பசு ஞான பாசஞானங்கள்போலாது சிவனருள்வாயிலாக உண்டாகும் சிவஞானம், என்றும் நிலைபேறுடைமையின் உண்மையாக விளங்குமென்றார். (11)

இதுவுமது.

நித்தியமாய்ச் சாந்தமா யுளதாய்நிட் களமாய்
நிறைந்தசுயம் பிரகாச மாய்விகற்ப மின்றாய்
எத்துமவி பாவியமா யசந்தேக மாகி
யின்னதன்மை யிதுவென்ன நியமிக்க வரிதாய்
அத்துவித மாய்விடயா தீதவகோ சரமா
யலிங்கமா யட்சயமா யானந்த மயமாச்
சத்தியமிவ் வாறிருந்த பரசிவமு நானே
சற்றுமிதற் கையமிலை யென்றறியக் கடவன்.

(இ-ள்) நித்தியமாய்—நித்தியமாயும்,—சாந்தமாய்—கருணையே சொரூபமாயும்,— உளதாய்—உள்பொருளாயும்,—நிட்களமாய்—ஏகதேசமான வடிவமில்லாததாயும்,—நிறைந்தசுயம்பிரகாசமாய்—எங்கும் நிறைந்த சொயம்பிரகாசமாயும்,—விகற்பமின்றாய்—வேற்றுமையில்லாததாயும்,—எத்தும் அவிபாவியமாய்—எதனாலும் பாவிக்கப்படாததாயும்,— அசந்தேகமாகி இது இன்னதன்மையென்ன நியமிக்கவரிதாய்—சந்தேகமில்லாமல் இதுவென்றும் இன்னதன்மை

யினையுடைய தென்றும் நிச்சயித்தற்கரிதாயும்,—அத்துவிதமாய்—கலப்பினல் பொருள்கள் பலவுமாயும்,—விடய அதீத அகோசாமாய்—பொருள்களின் மேம்பட்டு காணப்படாததாயும்,—அலிங்கமாய்—குறியில்லாததாயும்,— அக்ஷயமாய்—நாசமில்லாததாயும்,—ஆனந்த மயமாய்—இன்பமயமாயும் (விளங்குகின்ற),—இவ்வாறு இருந்த பரம சிவமு நானே—இத்தன்மையதாயுள்ள பாசிவமு நானே,—சற்று மிதற்கையமிலை—சிறிதுமிதற்கு ஐயமின்று,—சத்தியமென்றறியக் கடவன்—உண்மையாமென்றறிதலைச்செய்வானாக. (எ-று)

(பொ-ரை.) நித்தியமாயும், கருணையே சொரூபமாயும்; உள்பொருளாயும், ஏகதேசமான வடிவமில்லாததாயும், எங்கும் நிறைந்த சொயம்பிரகாசமாயும், வேற்றுமையில்லாததாயும், எதனுலும் பாவிக்கப்படாததாயும், சந்தேகமில்லாமல் இதுவென்றும் இன்ன தன்மையினையுடையதென்றும் நிச்சயித்தற்கரிதாயும், கலப்பினற் பொருள்கள் பலவுமாயும, பொருள்களின் மேம்பட்டுக் காணப்படாததாயும், குறியில்லாததாயும், நாசமில்லாததாயும், இன்பமயமாயும் விளங்குகின்ற இத்தன்மையதாயுள்ள பாமசிவமு நானே. சிறிதுமிதற்கையமில்லை. உண்மையாமென்றறிதலைச் செய்வானாக. (எ-று.)

(க-ரை.) பரமசிவன் நானே என்று சந்தேகமற உண்மையாக வறிந்து உபாசிக்கக்கடவனென்பதாம்.

எத்துமென்றவிடத்து அன்சாரியையும் ஆனுருபும் தொக்கு நின்றன.

லிங்கம்—குறி.

பரசிவமுமென்றவிடத்து உம்மை எதிரது தழீஇயிற்று. எதிர், வருகின்ற செய்யுளிற் கூறப்படுவன.

உற்பத்தியில்லை என்பதுணர்த்துதற்கு நித்தியமாய் என்றும், அதன் சொரூபம் இத்தன்மையதென்பதுணர்த்துதற்குச் சாந்தமா யென்றும், அது கண்ணுக்குப் புலப்படாமையினல் இல்லையென்றல் கூடாதென்பதுணர்த்துதற்கு உளதாய் என்றும், உள்பொருளாகிய உயிர் ஏகதேசமான வடிவத்தைப் பொருந்துவதுபோலப் பொருந்தாதென்பதுணர்த்துதற்கு நிட்களமாய் என்றும், எவ்வுயி

ரிடத்தும் பிரகாசமென்பதும், அஃதியற்கையென்பதும் உணர்த்துதற்கு நிறைந்த சொயம்பிரகாசமாயென்றும், நிறைவினால் நிறைவுக்குட்பட்ட உயிர்களின் வேற்றுமையினையுறுதென்பதுணர்த்துதற்கு விகற்பமின்றாயென்றும், நிறைந்த சொயம்பிரகாசமாயினும் நிறைவுக்குட்பட்ட உயிர்களின் பாவனைக்கு உட்படானென்பதுணர்த்துதற்கு எத்துமவிபாவியமாய் என்றும், ஆன்மாவிற்கவனருளாலறியப்படினும் அறியப்படுந்தோறும் அறியப்படுந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றுமென்பதுணர்த்துதற்கு அசந்தேகயாகி நியமிக்க அரிதாய் என்றும், நிறைவு உயிர்ப்பொருள்களின் மட்டுமன்று சடப் பொருள்களினுமுண்டென்பதுணர்த்துதற்கு அத்துவிதமாய் என்றும், அப்பொருள்களாய் நிற்பினும் அவற்றுளொன்றல்லனென்பதுணர்த்துதற்கு விடயாதீத அகோசரமாயென்றும், ஆதலின், விடயக்குறியொன்றினாலும் குறிக்கப்படான் என்பதுணர்த்துதற்கு அலிங்கமாய் என்றும், விடயமாயிருத்தலால் விடயமழியுங்கால் இவனுமழிவனோவென்னும் ஐயமறுத்தற்கு அட்சயமாயென்றும், விடயமாய் விளங்குங்காலத்தும் விடயாதீத அகோசரமான பேரின்ப வடிவினனென்பதுணர்த்துதற்கு ஆனந்தமயமாயென்றுங் கூறினார்.

அறியப்படுந்தோறும் அறியப்படுந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றுவனென்பதனை "புணர்ந்தாற் புணருந்தோறும் பெரும் போகம் பின்னும் புதிதாய்—மணந்தாழ்புரிகுழலாளல்குல்போல வளர்கின்றதே" என பரபோகத்தின்மேல் வைத்துத் திருக்கோவையாரினும், விடயாதீத அகோசரமானவிடத்து இன்ப மயமாய் விளங்குவனென்பதனை "ஈறிலாப் பதங்களியாவையுங் கடந்த இன்பமே" யெனத் திருவாசகத்தினும் மணிவாசகப்பெருமானருளிய திருவாக்குக்களானறிக. (12)

இதுவுமது.

சகலமந் திரமயமாஞ் சிவமு நானே
சகலமந் திரங்களுக்கு மேல தாகிச்
சகலகிருத் தியங்களுக்கு மப்பா லாகிச்
சகலகா ரணமாய சிவமு நானே

சகலமாய்க் காண்பதுங்கா ணுது மாய
தாபரசங் கமங்கண்முழு வதுமே நானே
சகலமாய் வியாபிக்கப் பட்டதுநா னேன்னிற்
சகலபுவ னங்களுக்கும் யானே நாதன்.

(இ-ள்.) சகல மந்திரமயமாஞ் சிவமுநானே—எல்லா மந்திரப் பொருளும் தானேயாய் விளங்கும் சிவமும் நானே,—சகல மந்திரங்களுக்கு மேலதாகி—எல்லா மந்திரங்களுக்குமப்பாலாகியும்,—சகல கிருத்தியங்களுக்குமப்பாலாகி—சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களுக்குமப்பாலாகியும்,—சகல காரணமாய சிவமும் நானே—ஒவ்வொரு கிருத்தியங்களுக்கும் கருத்தாவாய் விளங்கும் அவ்வவ் மூர்த்திகளுக்கு மூலகாரணமாகியும் விளங்குகின்ற சிவமும் நானே,—சகலமாய்க் காண்பதும் காணுதுமாய தாபர சங்கமங்கள் முழுவதுமே நானே—பல பொருள்களாய்க் காணப்படும் தாபரங்களும் கண்ணினுற் காணப்படாதனவாய உயிர்களும் நானே,—சகலமாய் வியாபிக்கப்பட்டது நான் என்னில்—தாபரமாயும் சங்கமமாயும் வியாபிக்கப்பட்ட பொருள்களனைத்தும் நானென்றதனுல்,—சகல புவனங்களுக்கும் யானே நாதன்—எல்லாப் புவனங்களுக்கும் யானே தலைவன். (எ-று.)

(பொ-ரை) எல்லா மந்திரப்பொருள்களும் தானேயாய் விளங்கும் சிவமும் நானே; சகல மந்திரங்கட்கும் அப்பாலாகியும் சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களுக்கும் அப்பாலாகியும், ஒவ்வொரு கிருத்தியங்களுக்கும் கருத்தாவாய் விளங்கும் அவ்வவ் மூர்த்திகளுக்கு மூலகாரணமாகியும் விளங்குகின்ற சிவமுநானே; பல பொருள்களாய்க் காணப்படும் தாபரங்களும், கண்ணினுற் காணப்படாதனவாய உயிர்களுமாகிய யாவையும் நானே; தாபரமாயும் சங்கமமாயும் வியாபிக்கப்பட்ட பொருள்களனைத்தும் நானென்றதனுல் எல்லாப்புவனங்களுக்கும் யானே தலைவன். (எ-று)

(க-ரை.) எல்லாப்பொருள்களும் அப்பொருள்களுக்குத் தலைவனும் யானே என உபாசிக்கக்கடவனென்பதாம்.

முழுவதுமே என்றதிலுள்ள ஏகாரம் அசை. யானே என்றதில் ஏகாரம் தேற்றம்.

ஒவ்வொரு மந்திரப்பொருள்களும் ஆகு பெயரினால் சிவனையேயுணர்த்துதலின் சகல மந்திரமயமாஞ் சிவமென்றும், அம் மந்திரங்கள் நேரே சிவபெருமானையுணர்த்தாமையின் சகல மந்திரங்களுக்கும் மேலதாகியென்றும், அது பஞ்சகிருத்தியஞ் செய்யும் தடத்த நிலையினும் மேம்பட்டதென்பதுணர்த்துதற்கு சகல கிருத்தியங்களுக்குமப்பாலாகியென்றும், அப்பாலாயினும் கிருத்திய கருத்தாக்களெல்லாம் தனது சிற்சத்தி செலுத்தத் தொழிற்செய்வாராதலின் தானே மூலகாரணனென்பதுணர்த்துதற்கு சகல காரணம் என்றும், இத்தகைய சிவம் நானென்று பாவிப்பவனுக்கு பாவிக்குமாறுணர்த்துமுறையில் அச்சிவம் எல்லாமாய் நிற்கும் நிலையினைப் பாவிக்கவேண்டுமென்பதுணர்த்துதற்கு சகலமாய்க்காண்பதும் காணுதுமாய தாபரசங்கமங்கள் முழுவதும் நானே யென்றும், அல்லதுமாய் நிற்கும் நிலையினைப் பாவிக்கவேண்டுமென்பதுணர்த்துதற்கு சகல புவனங்களுக்கும் யானே நாதன் என்றுங் கூறினர்.

சகலமாய் வியாபிக்கப்பட்டதென்றது அநுவாதம். அது தொகுதியொருமை.

தன்னால் வியாபிக்கப்பட்ட பொருள்களோடு கலந்து நிற்றலினாலேயே அல்லதுமாய் நிற்கும் தலைமைத்தன்மை சித்திக்குமென்பதுணர்த்துதற்கு அதனை யேதுவாகக் கூறினர். எனவே, தலைமைத்தன்மையுடைய பொருள், ஏனைப் பொருள்களோடு கலப்பாலதுவதுவாயும் பொருட்டன்மையால் அவற்றின் வேறாகியும் நிற்குமென்பதாம். இவ்விரண்டும் பெறப்படவே, ஒருவாற்றால் ஒன்றாகியும் ஒருவாற்றால் வேறாகியும் நின்று செலுத்துதலாகிய உடனாதல் தானே பெறப்படும். செலுத்தும் தன்மையில் வேறு ஆதலும், உடன் செல்லும் தன்மையில் ஒன்றாதலும் ஆகிய இரண்டும் உடனாதலிற் பெறப்படுமாறு காண்க.

எல்லாப் பொருள்களோடும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் பொருளே தலைமைத்தன்மையுடைய பொருளாகுமென்பதனை "உலகெலாமாகி வேறாயுடனுமாயொளியாயோங்கி—அலகிலாவுயிர்கள் கன்மத்தாணையினமர்ந்து செல்லத்—தலைவனாய்"

என்னும் அருணந்தி சிவாசாரியர் திருவாக்கானுமறிக. (சிவஞான சித்தியார்—2-சூ-ம். செ-1.) (13)

துவிதபாவனையாலுண்டாகும் குற்றம் இதுவென வுணர்த்துகின்றது.

மன்னுமனே காகார மாம்புவன சமுக
　　மண்ணந்தஞ் சிவமுதலென் னிடத்திருப்ப வாகும்
என்னிடத்தி னின்றுலகெ லாம்பிரவிர்த் திக்கு
　　மெவைகாணப் படுவகேட் கப்படுவ வெல்லாம்
இன்னுமகம் புறமுமெனுல் வியாபிக்கப் பட்ட
　　வெனுதுசீ வனுனென்றுஞ் சிவன்வேறே யென்றும்
அன்னியமா மோகத்தாற் பாவிப்பா னியாவன்
　　அவனெருகா லங்களினுஞ் சிவத்துவத்தை யடையான்.

(இ-ள்) மன்னுமனேகாகாரமாம் புவன சமுகம் சிவமுதல் மண்ணந்தப் என்னிடத்திருப்பவாகும்—காரண ரூபமாயொடுங்கியும் காரிய ரூபமாய் விரிந்தும் என்றுமுள்ளதாகிய பலவிதங்களாகும் உலகங்களின் கூட்டமாய்க் காணப்படுகின்ற சிவதத்துவமுதல் பிருதிவிதத்துவமீருக அனைத்து மென்னிடத்திருப்பனவாம்,—என்னிடத்து நின்று உலகெலாம் பிரவிர்த்திக்கும்—என்னையாதாரவாகக்கொண்டு நின்று உயிர்ப்பொருள் உயிரில் பொருளாகிய எல்லாந் தொழிற்படும்,—எவை காணப்படுவ கேட்கப்படுவ எல்லாம்—எவை காணப்படுவனவோ கேட்கப்படுவனவோ அவை யாவும்,–இன்னும் அகம் புறமும் எனுல் வியாபிக்கப்பட்ட வெனுது—இன்னும் அப்பொருள்களின் உள்ளும் புறம்பும் என்னுல் வியாபிக்கப்பட்டனவென்று பாவியாமல்,—சீவன் நான் என்றும் சிவன் வேறே என்றும்–பாவனை செய்கின்ற நான் சீவனென்றும் என்னுற் பாவிக்கப்படும் சிவன் என்னிலும் வேறேயென்றும்,—அன்னியமாமோகத்தால் பாவிப்பான் யாவன்—துவித வுணர்வென்னுமறியாமையினுல் பாவிப்பவனெவனே,—அவனெருகாலங்களினும் சிவத்துவத்தையடையான்—அவன் அந்தத் துவித பாவனையுள்ளவளவும் தன்னேடு பிரிப்பின்றி நிற்கும் சிவத்தின் றன்மையையறிந்து சிவமாய் விளங்கும் பாக்கியத்தைப் பெறமாட்டான். (எ-று)

(பொ-ரை) காரணரூபமாய் ஒடுங்கியும் காரியரூபமாய் விரிந்தும் என்றுமுள்ளதாகிய பலவிதங்களாகும் உலகங்களின் கூட்டமாய்க் காணப்படுகின்ற சிவ தத்துவமுதல் பிருதிவி தத்துவமீறாக அனைத்துமென்னிடத்திருப்பனவாம். என்னையாதரவாகக்கொண்டு நின்று உயிர்ப்பொருள் உயிரில் பொருளாகிய எல்லாந் தொழிற்படும். எவை காணப்படுவனவோ எவை கேட்கப்படுவனவோ அவை யாவும், இன்னும் அப்பொருள்களின் உள்ளும் புறமும், என்னால் வியாபிக்கப்பட்டனவென்று பாவியாமல், பாவனை செய்கின்ற நான் சீவன் என்றும், என்னாற் பாவிக்கப்படுஞ் சிவம் என்னிலும் வேறென்றும், துவிதவுணர்வென்னும் அறியாமையினால் பாவிப்பவன் எவனோ அவன் அந்தத் துவித பாவனையுள்ளவளவும் தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் சிவத்தின்றன்மையையறிந்து சிவமாய் விளங்கும் பாக்கியத்தைப் பெறமாட்டான். (எ-று)

(க-ரை) நான் சீவனென்றும் சிவம் என்னிலும் வேறென்றும் பாவிப்பவன் சிவமாந் தன்மைப் பெருவாழ்வையடையானென்பதாம்.

துவித பாவனையாற்படும் இழுக்குணர்த்தவேண்டி மன்னுமனேகாகாரம் என்பது முதல் வியாபிக்கப்பட்டவென்பதுவரை அநுவாதமா யெடுத்துக்கொண்டார்.

வேறே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம்.

சிவமாய் நின்று சிவனையுபாசிக்கவேண்டுமென்பது தோன்ற சீவன் நான் என்றும் சிவன் வேறேயென்றும் அந்நிய மாமோகத்தால் பாவிப்பான் என எதிர்மறை முகத்தாற் கூறினார்; வலியுறுத்தற்பொருட்டு.

உபாசிப்பதென்றதனால் உபாசிக்கப்படும் பொருளின் வேறாய் உபாசிக்கும் பொருள் உண்டென்பது பெறப்படும். அங்ஙனமாகவும் சிவமாய் நின்று சிவனையுபாசித்தலெவ்வாறு கூடும்? கூடுமாயினும்,சிவமாய் நின்றதன்மேல் உபாசிப்பது எதன் பொருட்டு எனின், கூறுதும்; கண்ணொளியானது விளக்கொளியோடு கலந்து நின்றுகொண்டே விளக்கொளியை இது விளக்கொளியென்று காணுமாறுபோல உயிரினறிவும் சிவனருளோடு கலந்து

நின்று சிவனையுபாசித்தல் கூடுமென்க. கண்ணொளி விளக்கொளியோடு கலந்துநிற்குங்காலத்து இது கண்ணொளி இது விளக்கொளி எனப் பிரித்தறிய வாராவிடினும், காணுந் தன்மைபற்றிக் கண்ணொளியும் காட்டுந் தன்மைபற்றி விளக்கொளியும் உண்டென்பது கொள்ளப்படுமாறுபோல, உயிரறிவு சிவனருளோடு கலந்து நிற்குங்காலத்து இது வுயிரறிவு இது சிவனறிவெனப் பிரித்தறிய வாராவிடினும், பற்றி நின்று உபாசிக்கும் தன்மைபற்றி உயிரினறிவும பற்றுதலைச் செய்வித்து பற்றுக்கோடாய் நிற்றல்பற்றிச் சிவனருளும் உண்டென்பது கொள்ளப்படும். கண்ணொளி விளக்கொளியோடு கலந்து நின்று விளக்கொளியை இது விளக்கொளியெனக்காணுமளவும், வேறாய் நிற்றல்பற்றிப் பிற பொருள்களையும் காணுந் தன்மை கண்ணுக்குளதாமாறுபோல, உயிரினறிவு சிவனருளோடு கலந்து நின்று சிவனையுபாசிக்குமளவும் வேறாய் நிற்றல்பற்றி உலகப் பொருள்களையுமறியும் தன்மை உயிருக்குண்டென்பது பெறப்படும். கண்ணொளி விளக்கொளியிலழுந்துங் காலத்து விளக்கொளியெனக் கண்ணொளியென வேறு பிரித்தறிய வாராது விளக்கொளியாகவே விளங்குமாறுபோல, உயிரினறிவு சிவனருளிலழுந்துங்காலத்துச் சிவமெனத்தாமென வேறு பிரித்தறிய வாராது சிவமாகவே விளங்குமென்பது பெறப்படும். கண்ணொளி விளக்கொளியிலழுந்துதற்கு பிறபொருள்களைக்காணா விளக்கொளியாய் அவ்விளக்கொளியினைக் காணுதலையே செய்ய வேண்டுவதுபோல, உயிரினறிவு சிவனருளிலழுந்துதற்கு உலகப் பொருள்களையறியாது சிவனருளால் அவ்வருளையே நாடுதலாகிய உபாசனை செய்யவேண்டுமென்பது கண்டுகொள்க.

கண்ணொளி விளக்கொளியின் வேறாய் நிற்குமளவும் பிற பொருள்களைப் பற்றுமாறுபோல, உயிரினறிவு சிவனருளின் வேறாய் நிற்குமளவும் உடலைப்பற்றி நின்று பிறந்திறந்துழலுமாதலின், அந்நியமாமோகத்தால் பாவிப்பான் யாவன் அவன் ஒரு காலங்களினும் சிவத்துவத்தை யடையானென்றனர்.

உயிரும் சிவமும் எக்காலத்தும் பிரிப்பின்றி நிற்பவும், அவ்வாறின்றி வேறு வேறாய் நிற்கும் கண்ணும் விளக்கும், அவற்றிற்கு வமையாதல் எவ்வாறு கூடுமெனின், காணுந்தன்மை காட்

டுந்தன்மைபற்றி அவை ஒருபுடையுவமையாதல் கூடுமென்க. இக்கருத்துபற்றியே "கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்தொன்றன்றே" என்றார் உமாபதி சிவாசாரியரும். (சிவப்பிரகாசம்–செ-58) ஆயினும் பிரிப்பின்றி நின்று தன்னோடு பிரிப்பின்றி நிற்கப்படும் பொருளைப் பாவிக்குமென்பதற்கு உயிரையும் உடலையும் உவமைகளாகக் கூறிக்கொள்க. என்னை. உயிர், உடலோடு பிரிப்பின்றி நின்றேயவ்வுடலையுணருமாறுபோல, சிவனோடு பிரிப்பின்றி நின்றே சிவனையுணருமாதலானென்க. கலந்து நிற்றற்கு இவ்வுவமை கூறலாமென்னுங் கருத்துப்பற்றியே,

கட்டு முறுப்புங் காணமுங் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்—கொட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

என மெய்கண்ட தேவரும் அருளிச்செய்வாராயினர். (சிவஞான போதம் சூ-2, 1-அதிகாணம். வெண்பா 1.) (14)

துவித பாவனையைக் கைவிட்டு அத்துவித பாவனையால் சிவம் நானெனப் பாவிப்பவனுக்கு முற்றுணர்வுத்தன்மை விளங்குமெனக் கூறுகின்றது.

சிவன்வேறே யென்றுநான் சிவனினும்வே றென்றுந்
திரிவுபட வேறாகக் காண்பதனை விட்டுச்
சிவனேநா னேயச் சிவனெனவோன் றாகச்
சிந்திப்பா னெவ்விடத்தும் வியாபகனு மாகி
அவனேயச் சருவான்மா வானசிவ சொரூப
மையமறக் காண்கூவனு மாகியபாவ னையாற்
சிவனேநா னெனவிகற்பா தீதனு யிருந்த
சிவயோகிக் குச்சருவக் ஞத்துவமும் விளங்கும்.

(இ-ள்) சிவன் வேறேயென்றும்—சிவப்பொருளென்னினும் வேறேயென்றும்,—நான் சிவனினும் வேறேயென்றும்—உயிர்ப்பொருளாகிய நான் அச்சிவப்பொருளினும் வேறென்றும்,—திரிவுபட வேறாகக் காண்பதனைவிட்டு—விபரீதமாகவும் வேற்றுமையாகவும் காண்பதனைவிட்டு,—சிவனே நான் நானேயச்சிவன் என

ஒன்ருகச் சிந்திப்பான் அவனே—சிவப்பொருளே நான் நானேயச் சிவப்பொருளென அபேதமாகப் பாவிப்பவன் எவனே அவனே,—எவ்விடத்தும் வியாபகனுமாகி—எங்கும் வியாபகனுமாய்,—அச் சர்வான்மாவான சிவசொரூபம் ஐயமறக் காண்குவனும்—வியாபிக்கப்படும் பொருள்களாகிய அவ்வான்மாக்கள் அனைத்துமாய் விளங்கும் சிவசொரூபத்தைச் சந்தேகமறக் காண்பவனுகும்,—அநிய பாவனையால் சிவனே நான் என விகற்பாதீதனுயிருந்த சிவயோகிக்கு சர்வக்ஞத்துவமும் விளங்கும்—அத்துவித பாவனையால் சிவனே நான் என்று நிருவிகற்பமாயுணர்ந்த அச்சிவஞானிக்கு பண்டைச் சிற்றறிவொழிந்து முற்றறிவின்றன்மை விளங்கித் தோன்றும். (எ-று.)

(பொ-ரை) சிவப்பொருள் என்னினும் வேறேயென்றும், உயிர்ப்பொருளாகிய நான் அச்சிவப்பொருளினும் வேறென்றும், விபரீதமாகவும் வேற்றுமையாகவும் காண்பதனைவிட்டு, சிவப்பொருளே நான் நானேயச்சிவப்பொருளென, அபேதமாகப் பாவிப்பவனெவனே, அவனே, எங்கும் வியாபகனுமாய், வியாபிக்கப்படும் பொருள்களாகிய அவ்வான்மாக்களனைத்துமாய் விளங்கும் சிவசொரூபத்தைச் சந்தேகமறக் காண்பவனுகும், அத்துவிதபாவனையால் சிவனே நான் என்று நிருவிகற்பமாயுணர்ந்த அச்சிவஞானிக்கு பண்டைச்சிற்றறிவொழிந்து முற்றறிவின்றன்மை விளங்கித் தோன்றுமென்றவாறு.

(க-ரை.) அத்துவிதபாவனையால் சிவனே நான் என்றுபாசிப்பவன், பண்டைச்சிற்றுணர்வினின்றும் நீங்கி முற்றறிவின்றன்மை விளங்கப்பெறுவன் என்பதாம்.

ஏகாரங்கள் தேற்றம்.

திரிவுபட வேருக என்றவிரிடத்தும் எண்ணும்மைவிகாரத் தாற்ருெக்கது. சிவன் வேறேயென்று திரிவுபடவும், நான் சிவனினும் வேறென்று வேருகவும் என நிரனிரையாகக்கொள்க. விபரீதமாகக்காண்டலாவது, ஒன்றைப்பிறிதொன்ருகக்காண்டல். வேற்றுமையாகக்காண்டலாவது, வேறுவேருகக்காண்டல். சிவப்பொருள் என்றும் தன்னேடு பிரிப்பின்றி நிற்கவும் தன்னினும் வேறென்று

காண்டல் விபரீதம். தான் சிவப்பொருளையின்றித் தனித்து நில்லா திருக்கவும் தனித்து நிற்பதாகக்காண்டல் வேற்றுமை.

சர்வக்ஞத்துவமும் என்றதில் உம்மை சிறப்பு.

பசித்தவன் உண்டதுபோலப் பாவிக்கின் பசிநீங்கி உண்ட தன்மையினை உற்றவனாகக்கண்டிலம். அங்ஙனமாகவும், அபேதபாவனையால் சிவமாதல் எவ்வாறு கூடுமெனின், கூறுதும். பாவனைக்கு எய்தாதபொருளை எய்தியதாகவைத்துப் பாவிப்பதும், எய்தும் பொருளை எய்தியதாகவைத்துப் பாவிப்பதும் எனப் பாவனை யிருவகைப்படும். அவற்றுள், முன்னையது பசித்தவன் உண்டதுபோலப் பாவிக்கும் பொய்ப்பாவனை. பின்னையது மறந்தவன் மறக்கப்பட்ட பொருள் நினைவில் தோன்றுதற்பொருட்டு அப்பொருளைப் பற்றிச் சிந்திப்பதாகிய மெய்ப்பாவனையென்க. சிவனும் சீவனும் பொருட்டன்மையால் இரண்டேயாயினும், வேறு வேறு பொருள்களாகப் பிரித்தறியவாராத கலப்பினையுடையன. இப்பொருள்களநாதியாதல்போலவே இவற்றின் கலப்பும் அநாதியேயாம். ஆயினும் அக்கலப்பினை மலமறைப்பாலுயிர் அறியாமல் அம்மலத்திலழுந்திற்று. அம்மலம் ஆன்மாவைப்பற்றி நின்று அறியவொட்டாது செய்ததோ? அம்மலத்தை ஆன்மாப் பற்றிநின்று அறியாமலழுந்திற்றோவெனின்? மலம் சடமாதலால் அது ஆன்மாவைப்பற்றாது. ஆன்மா அறிவுடைப்பொருளாதலால் அதுவே மலத்தைப்பற்றிச் சிவனையறியாது அம்மலத்திலழுந்திற்றென்க. ஆன்மா பற்றிற்றென்னின், பற்றாது சுத்தமாயிருந்து பின்னர்ப் பற்றிற்றென்றுகொள்ளவரும். வரவே, சுத்தமாய் இருந்த ஆன்மா மலத்தைப்பற்றுதற்கு ஏதுவேண்டப்படும். அன்றியும், இனிச்சுத்தமெய்தினும் முன்னர்ப்பற்றியவாறே பற்றுமெனப்பட்டு சுத்தமாதற்குச் செய்யும் செயல் பயனில்செயலாய் முடியும் எனின், அறியாது வினாயினாய்? என்னை, ஆன்மாவுமநாதி; மலமுமநாதி; ஆன்மா மலத்தைப் பற்றுதலுமநாதியாதலாலென்க. அநாதியாயின், உற்பத்தியில்லையெனப்பட்டு உற்பத்தியில்லாமையால் அழிதலுமில்லையென்றாகி மலம் எக்காலத்தும் ஆன்மாவை விட்டு நீங்குமாறில்லை யெனக் கொள்ளவருமே எனின், வாராது, என்னை, நீங்குமநாதியென்றும் நீங்காத அநாதியென்றும் அநாதியிருவகைப்படும். அவற்றுள்,

ஆன்மா, மலத்தைப்பற்றிநிற்றல் நீங்குமநாதி. சிவத்துடன் பிரிப்பின்றி நிற்றல் நீங்காத அநாதி. எதுபோலுமெனின், நெல்லினிடத்துமியும் செம்பினிடத்துக்களிம்பும் அநாதியேயாயினும் பிரிக்கப்படுமாறுபோலவும், மணியினிடத்தொளியும் அனலினிடத்துச்சூடும் அநாதியேயாய் பிரிக்கப்படாதவாறுபோலவுமாமென்க. ஒளியும் சூடும் குணமாதல்போல, ஆன்மா சிவத்தின் குணமன்று. ஆயினும், மணியையின்றியொளியும் அனலையின்றிச்சூடும் தனித்துநில்லாதவாறுபோல சிவனையின்றியான்மா தனித்துநில்லாமைக்கு மட்டும் உவமையாகுமென்க. அங்ஙனமாயினும், குணமும் குணியும்போல குணிப்பொருள்கள் இரண்டுபிரிக்கமுடியாது கலந்துநிற்றல் எவ்வாறு கூடுமெனின், ஆகாயமும் காற்றும் தனித்தனி குணமுடைய குணிப்பொருள்களேயாயினும் பிரிக்கமுடியாதவாறு கலந்துநிற்றல்போல, சிவமும் ஆன்மாவும் கலந்துநிற்றல்கூடுமென்க.

சிவம் ஆன்மாவோடு அநாதியே கலந்துநிற்கவும் ஆன்மா சிவனைப்பற்றி நின்று சிவானந்தத்தையனுபவியாது மலத்தைப்பற்றி நின்று வருந்துவானேனெனில், ஆன்மாவுக்குப் பற்றுந்தன்மை குணம். பற்றப்படும் பொருள்களாகிய மலமும் சிவமும் அநாதியேயான்மாவோடு கலந்துநிற்பினும், சிவம் சித்து என்னும் சாதியொப்புமையால் ஆன்மாவினும், மலம் சடமென்னும் சாதிவேற்றுமையால் ஆன்ம அறிவினும் கலந்து நிற்கும். ஆன்மாவிற்கலந்துநிற்றல் உள்ளும், ஆன்ம அறிவிற் கலந்துநிற்றல் புறம்புமாதலானும், பற்று தற்றொழில் புறத்துநிகழ்தல் இயல்பாகலானும், மலத்தைப்பற்றி நின்று வருந்திற்றென்க. சித்தின் கலப்பு சுசாதிக்கலப்பாதலால் அது நீங்குமாறில்லை. மலத்தின் கலப்பு வேற்றுச்சாதிக் கலப்பாதலால் நீங்கும்.

ஆகவே, உள்ளீடாய் விளங்கும் சிவம் ஆன்மாவின் துன்பத்திற்கிரங்கி, கலையாதி தத்துவங்களைக்கூட்டி ஏகதேச அறிவு விளங்கச்செய்து, அதனால் மலசத்தி தேய்ந்தவிடத்து, குருவடிவம் தாங்கி வந்து, உள்ளே விளங்கும் தன்னை நோக்கும் உபாயத்தையறிவிக்க, அவ்வுபாயமாகிய பாவனை, அநாதியே பிரிப்பின்றி நிற்றலையறியாதிருந்த அறியாமையினின்றும் நீக்கி, பிரிப்பின்றி நிற்கும்

சிவம் விளங்கச் சிவமாய் நிற்கச்செய்யும் மெய்ப்பாவனையாமென் றறிந்துகொள்க.

இங்ஙனம் சிவனையறிந்த சிவஞானி சிவமேயாய்நிற்றலின், சிவனுக்குரிய எண்குணங்களும் தன்பால் விளங்கித் தோன்றுமென மேலிரண்டாம் செய்யுளிற் கூறியவாறு, சிவனுக்குரிய முற்றறிவுத்தன்மை அச் சிவஞானியினிடத்து விளங்கித்தோன்றுமெனக் கூறவேண்டி, "சிவயோகிக்குச் சர்வக்ஞத்துவமும் விளங்கும்." என்றார். எனவே, கருவிகளோடு கூடிநின்று ஒன்றனையறியுங்கால் பிறிதொன்றனையறியாது நின்ற ஏகதேச அறிவுபோலாது, பிறிதொன்றனை யறியவேண்டுவதின்றாய்ச் சிவமொன்றனையே யறிந்து நிற்குமறிவில் சிவத்தின் முற்றறிவுத்தன்மை விளங்கித்தோன்றும் என்றவாறாயிற்று. தோன்றினும் சிவமொன்றனையேயறிதலின்றிச் சிவத்தின் முற்றறிவாலறியப்படும் பொருள்களையறியாமையின், சிவத்தின் அறிவைநோக்க அந்நிலையினும் ஆன்மவறிவு சிற்றறிவே யாம். ஏனையவெல்லாம் மேல் இரண்டாவது செய்யுளுரையிற்கண்டு கொள்க. சிவஞானத்தால் பழையசிற்றறிவொழிந்து வியாபகவறிவு விளங்கிச் சிவமொன்றனையேயறியுமென்பதனை,

> இருவினைச் செயல்க ளொப்பி லீசன்றன் சத்திதோயக்
> குருவருள் பெற்றுஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
> திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
> பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே.

என்பதனானுமறிக. (சிவஞானசித்தியார்-4-சூ-ம் 40-செ.) (15)

அத்துவிதபாவனையால் சிவமேதானாக அறியாதவன்
பிறந்திறந்துழல்வனெனக் கூறுகின்றது.

> எவரொருவர் மாதேவர் பிறப்பிறப்பு மில்லா
> றொன்றுவே தாகமத்தா னிசைப்பவரா யிருப்பார்
> அவர்தாமே யகாயர்நிர்க் குணரவரே நானென்
> றத்துவிதத் தையமற வறியாதான் பசுவாம்
> அவனேயைந் தொழிலிற்பட் டிறந்துபிறந் துழல்வா
> னுணர்ந்தவவன் சுத்தனு யழிவிலா திருக்குஞ்
> சிவனேயா மையமிலே யாதலினுன் மாவைச்
> சிவாகார மாயறிவ னவனேமெய்ஞ் ஞானி.

(இ-ள்.) எவர்ஒருவர் மாதேவர் பிறப்பிறப்புமில்லாரென்று— எவர் ஒப்பற்றவர் எவர் மகாதேவர் எவர் பிறப்பும் இறப்புமில்லாதவரென்று,— வேதாகமங்களா லிசைப்பவரா யிருப்பார்— வேதங்களானும ஆகமங்களானும் பாராட்டப்படுபவராக இருப்பாரோ,— அவர் தாமே அகாயர் நிர்க்குணர்—அவரே மாயாசரீரம் இல்லாதவரும் மாயையின் குணமில்லாதவருமாம்,— அவரே நான் என்று அத்துவிதத்து ஐயமற அறியாதான் பசுவாம்—அம்மகாதேவரே நானென்று அநந்நியபாவனையால் ஐயமறவறியாதவன் பசுவாம்,—அவனே ஐந்தொழிலிற்பட்டு இறந்து பிறந்து உழல்வான்— அங்ஙனமறியாதவனே சிருட்டி முதலிய ஐந்தொழிலிற்கட்டுண்டு இறந்து பிறந்து வருந்துவன்,—உணர்ந்த அவன் சுத்தனுப் அழிவிலாதிருக்கும் சிவனேயாம் ஐயமிலை—அங்ஙனமறிந்தவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிச் சுத்தனுயும் நித்தனுயும் விளங்கும் சிவனேயாவன். இதிற்சந்தேகமில்லை,—ஆதலின் ஆன்மாவை சிவாகாரமாயறிவன் அவனே மெய்ஞ்ஞானி—ஆதலால் ஆன்மாவைச் சிவாகாரமாயறிபவன் எவனோ அவனே மெய்ஞ்ஞானியாவன் எ-று.

(பொ-ரை.) எவர் ஒப்பற்றவர் எவர் மகாதேவர் எவர் பிறப்பும் இறப்பும் இல்லாதவர் என்று வேதங்களானும் ஆகமங்களானும பாராட்டப்படுபவராக இருப்பாரோ, அவரே மாயாசரீரமில்லாதவருமு மாயையின் குணமில்லாதவருமாம. அம்மகாதேவரே நான் என்று அநந்நியபாவனையால் ஐயமற அறியாதவன் பசுவாம். அங்ஙன மறியாதவனே சிருட்டி முதலிய ஐந்தொழிலிற்கட்டுண்டு இறந்து பிறந்து வருந்துவன். அங்ஙனமறிந்தவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிச் சுத்தனுயும் நித்தனுயும் விளங்கும் சிவனேயாவன். இதிற் சந்தேகமில்லை. ஆதலால் ஆன்மாவைச் சிவாகாரமாயறிபவன் எவனோ அவனே மெய்ஞ்ஞானியாவன். (எ-று.)

(க-ரை.) அத்துவிதபாவனையால் ஐயமறச் சிவமே நான் என்றறியாதவன் பசுவெனப்பட்டுப் பிறந்திறந்துழல்வன். அறிந்தவனே மெய்ஞ்ஞானியென்பதாம்.

அவர் தாமே என்றவிடத்து தாம் என்பது அசை. ஏகாரம் பிரிநிலை. அது மற்றவர் அகாயர் அல்லர் என்று பிரித்தது. அவரே என்றதில் ஏகாரம் தேற்றம்.

அத்துவிதத்து என்றவிடத்தில் ஆல் உருபு தொக்கது.

அவனேயென்றவிரிடத்தும் ஏகாரம் பிரிநிலை. அவற்றுள், முன்னையது முத்திபெற்றவர் ஐந்தொழிலிற்பட்டிறந்து பிறந்துழலாரென்றும், பின்னையது ஏனையோர் மெய்ஞ்ஞானியாகாரென்றும் பிரித்தன.

சிவனே என்றதில் ஏகாரம் தேற்றம். ஐயமிலை என்று மீண்டும் கூறியது வற்புறுத்தற்பொருட்டு.

தன்னொடு ஒப்பாரு மிக்காரும் இல்லையென்பதுணர்த்துதற்கு ஒருவரென்றும், பிரம விட்டுணு முதலிய தேவர் எல்லாரும் தத்தமக்குட்பட்ட புவனங்கட்குத் தெய்வமாதலேயன்றி எல்லாப் புவனங்களுக்கும் தெய்வமாதலில்லை; அன்றியும், அவர் அங்ஙனம் தெய்வமாதலும் சிவனருள்வழியின்றிச் சுதந்தரமாயில்லை என்பதுணர்த்துதற்கு மகாதேவரென்றும், ஏனைத்தெய்வங்களெல்லாம் பிறந்திறந்துழலுமாறுபோல இவனும் பிறந்திறந்துழலாமையே மகாதேவரென்பதனை வலியுறுத்துமென்பதுணர்த்துதற்கு, பிறப்பிறப்புமில்லாரென்றும், அவருக்கு ஞானமே திருமேனியன்றி மாயையின்வடிவ மின்றென்பதுணர்த்துதற்கு அகாயர் என்றும், தன்வயத்தன் முதலிய ஞானகுணங்கள் உடையரேயன்றி மாயையின் குணங்களாகிய சாத்துவிதம் இராசதம தாமதம் இல்லாதவரென்பதுணர்த்துதற்கு நிர்க்குணரென்றும், இத்தகைய சிவம் ஆன்மாவுடன் என்றும் பிரிப்பின்றி அத்துவிதமாய் நிற்றலால் அங்ஙனம் நிற்றலை யுணராதவன் மலத்துட்பட்டவன் என்பதுணர்த்துதற்கு அறியாதான் பசுவாமென்றும், இப்பசுத்துவம் நீங்குதற்பொருட்டே பதிபஞ்சகிருத்தியஞ்செய்கின்றனர்; அக்கிருத்தியங்களால் மலம் தேய்தற்பொருட்டு உயிர் பிறந்து இறந்து உழலுகின்றது என்பதுணர்த்துதற்கு ஐந்தொழிலிற்பட்டிறந்து பிறந்து உழல்வான் என்றும், உணர்ந்தவன் சிவனுவனே என்றையுறுதிருத்தற்கு ஐயமிலை என்றும், சிவபாநதன்மைப்பெருவாழ்வடைந்த அந்நிலையினும் நான் என்னும் தற்போதம் சிறிதும்முனைத்துத்தோன்றுமல் தன்னை சிவத்துள் விழுங்கக்கொடுத்து சிவபோதத்துள் அழுந்தி நிற்க வேண்டுமென்பதுணர்த்துதற்கு சிவாகாரமாயறிவனென்றும், இங்

னம் நிற்பவனே உண்மையுணர்ந்தோனாதலின் அவனே மெய்ஞ் ஞானியென்றுங்கூறினர்.

அத்துவிதம் என்னுஞ் சொற்குப்பொருள் இரண்டாவதில்லை என்று கொண்டு தாற்பரியத்தால் ஒன்றென்பர் ஏகான்மவாதிகளும் மாயாவாதிகளும். ஒன்றென்பதற்கு ஏகமென்றசொல்லிருக்கவும் அதனைக்கூறாது அத்துவிதம் என வ்யத்துணரவைத்தோதவேண் டாம். அன்றியும் அகரம் அன்மை இன்மை மறுதலைப்பொருள்க ளில் வருதல் பொருட்பெயர்ச்சொல்லின்கண்ணதேயன்றி எண்ணுப் பெயர்ச்சொல்லில் அங்ஙனம் வருதலில்லை. எவ்வாறெனின், அப் பிராமணனென்றவிடத்து அகரம் அன்மைப்பொருளினும், அமலன் என்றவிடத்து அகரம் இன்மைப்பொருளினும், அநீதியென்றவிட த்து அகரம் மறுதலைப்பொருளினும் பொருட்பெயர்ச்சொல்லில் வந்தன. எண்ணுப்பெயர்ச்சொல்லில் ஏகத்துடனும் துவிதத்துட னும் மட்டும் புணர்ந்து நின்று அநேகம் என்றும் அத்துவிதம் என்றும் வழங்கிவருகின்றன. இவற்றுள், அநேகம் என்பதில் அக ரம் ஒன்றில்லை என்று இன்மைப்பொருளுணர்த்தாது பலவென்று அன்மைப்பொருளுணர்த்தவும், அத்துவிதம் என்பதில் அகரம் இன்மைப்பொருளுணர்த்துமென்றல் பொருந்தாமை காண்க. ஆகவே பொருள்கள் இரண்டிருந்தும் இரண்டாகப் பிளவுபடப் பிரித்தறியவாராமலும், அங்ஙனம் பிரித்தறியவாராமையால் இரு பொருளில்லை என்று சொல்லமுடியாமலும் உள்ள நிலையில், ஒன் றென்றுவது இரண்டென்றுவது வரையறுத்தற்கு முடியாமை அத் துவிதமெனப்படுமென்பதாம். அத்துவிதம் என்னும் சொற்குப் பொருள் இதுவே என்பதுணர்த்துதற்கு மேலைச்செய்யுளில் அந நியபாவனையாலெனக்கூறி இச்செய்யுளில் அத்துவிதத்தாலெனக் கூறினர்.

இங்ஙனம் சிவமும் ஆன்மாவும் என்றும் பிரிப்பின்றி அத்து விதமாய் நிற்கவும், அங்ஙனம் நிற்றலையறியாதவன் மலத்தாற் கட்டுப் பட்டவனாதலிற் பசுவாமென்றார். மலத்துடன் கலந்துநிற்கும்நிலை யும் அந்நிலையிற் பிரிக்கமுடியாமைபற்றி அத்துவிதமெனப்படும். படினும், அது வேற்றுச்சாதிக்கலப்பாதலின் பிரிக்கப்படுவதான் அநாதிசேர்க்கையெனப்படும். இக்கருத்துப்பற்றியே “ஆணவத்

தோடத்துவித மானபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோடத்துவிதம் சாருநாளென்னாளோ" எனத் தாயுமானசுவாமிகளும் அருளிச் செய்வாராயினர்.

மேல் பொருட்பெயர்கூறுமிடத்தும் இலக்கணம் கூறுமிடத்தும் சிவமென்றும் ஆன்மாவென்றும் இருபொருள்களாகக் கூறியிருப்பவும், சிவனின் வேறாகிய ஆன்மா சிவம் நானெனப்பாவிக்கும் அத்துவிதபாவனையால் சிவமே தா னா க ஐக்கியமாதல் எவ்வாறு கூடும், ஒரு பொருள் மற்றொருபொருளாதல் எவ்விடத்தும் கண்டிலம் எனின், சார்ந்ததன்வண்ணமாய் நின்று அறிதலே ஆன்மாவின் இயல்பு. சாரப்படும் பொருள்கள் சிவமும் மலமுமாம். இவ்விரண்டும் அநாதியேயாயினும் மலம் நீங்கும் அநாதி; சிவம் நீங்காத அநாதி. அங்ஙனம் நீங்காதிருக்கும் சம்பந்தவிசேடத்தால் சிவமே நான் என்று பாவிக்குமான்மா சிவமாதல் கூடும். இக்கருத்துணர்த்துதற்கு அத்துவிதத்து உணர்ந்த அவன் சிவனேயாம் ஐயமில்லை என்றார். (16)

சிவாநுபவம் வருதற்பொருட்டு தன்னையும் தலைவனையும் எப்பொழுதும் பழகி அறியவேண்டுமுறைமை கூறுகின்றது.

பரமபர மென்றுசிவ மிருவிதமா மவைகள்
பகர்தூல சூக்குமமாம் பரசொரூப நிகழ்த்தின்
தருசருவோ பாதிசூ னியமாகிச் சச்சி
தானந்த மயமாகு மபரமைந் தொழிலும்
புரிசொரூப மாந்தூல மந்திரவத் தாகும்
புகலருஞ்சூக் குமஞானக் கண்ணாற்காண் குவதாம்
விரிவினின்னும் வாக்குவிகற் பங்களையிங் கியம்பின்
மிகவுமனத் திற்கதிக மோகத்தை விளைக்கும்.

(இ-ள்.) சிவம்பரம் அபரம் என்றிருவிதமாம்—சிவன் பரமென்றும் அபரமென்றும் இருவிதங்களாகும்,—பரசொரூபம் நிகழ்த்தின்—அவற்றுள் பரமாகிய சொரூபநிலையைச் சொல்லுமிடத்து,—தருசருவோபாதி சூனியமாகிச் சச்சிதானந்தமயமாகும்—சேர்க்கையாலுண்டாகின்ற சகலவுபாதிகளுமில்லாததாகிச் சச்சிதானந்தமயமாகும்,—அ ப ர ம ஐந்தொழிலும் புரிசொரூபமாம்—அபரமாவது

சிருட்டி முதலிய ஐந்துதொழில்களையும் எப்பொழுதும் மேற்கொள்ளும் தடத்தவடிவமாகும்,—அவைகள் பகர்தூல சூக்குமமாம்—உயிர்கள் சொல்லுகின்ற தூலம் சூக்குமம் என இருவிதங்களாகும்,—தூலம் மந்திரவத் தாகும்—அவற்றுள் தூலமாவது மந்திரத்தாற் சிவனை வழிபடுவதாகும்,—புகலரும் சூக்குமம் ஞானக்கண்ணுற் காண்குவதாம்—சொல்லுதற் கரிய சூக்குமமாவது ஞானக்கண்ணுற் சிவனைக்காண்பதாகும்,—இன்னும் வாக்கு விகற்பங்களை விரிவின் மிகவும் இங்கு இயம்பின் மனத்துக்கு அதிக மோகத்தைவிளைக்கும்—மீள மீள விகற்பத்திற்கேதுவாகிய வார்த்தைகளை விரித்துப் பலவாக இவ்விடத்துச்சொல்லின் மனத்திற்கு அதிக மோகத்தையுண்டுபண்ணும். (எ-று.)

(பொ-ரை.) சிவம் பரமென்றும் அபரமென்று மிருவிதங்களாகும். அவற்றுள் பரமாகிய சொரூப நிலையைச் சொல்லுமிடத்து செயற்கையாலுண்டாகின்ற சகலவுபாதிகளுமில்லாததாகிய சச்சிதானந்தமயமாகும். அபரமாவது சிருட்டி முதலிய ஐந்தொழில்களையும் எப்பொழுதும் மேற்கொள்ளும் தடத்த வடிவமாகும். உயிர்கள் சொல்லுகின்ற தூலம் சூக்குமம் என இருவிதங்களாகும். அவற்றுள், தூலமாவது மந்திரத்தாற் சிவனை வழிபடுவதாகும். சொல்லுதற்கரிய சூக்குமமாவது, ஞானக்கண்ணுற் சிவனைக் காண்பதாகும். மீள மீள விகற்பத்திற்கேதுவாகிய வார்த்தைகளை விரித்துப் பலவாக இவ்விடத்துச் சொல்லின் மனத்திற்கதிக மோகத்தையுண்டுபண்ணும். (எ-று.)

(க-ரை.) சிவசொரூபத்தின் றடத்தநிலையை மந்திரத்தாலும் சொரூபநிலையை ஞானத்தாலும் வழிபடுதலைப் பழகவேண்டுமென்பதாம்.

சிவமெனப் பிரித்தமையின் உயிர்களை அவைகளெனச் சுட்டிஞர். கள் அசை. பகுதிப்பொருள் விகுதியெனினுமாம்.

மேல் பொருள் உண்மை கூறுமுறையில் சிவபெருமானுடைய சொரூப தடத்த நிலைகள் கூறப்பட்டன. இவ்விடத்து ஆன்மா பழகுதற்பொருட்டு அவ்விரு நிலைகளும் கூறப்பட்டன. ஆதலிற் கூறியது கூறலின்மையுணர்க.

தடத்த நிலையாகிய அபரம் தூலமாதலின், தூலநிலையினை யுடைய ஆன்மாவிற்கு அனுபவமாகுமெனவும் சொரூபநிலையாகிய பரம்சூக்குமமாதலின் சூக்குமநிலையினையுடைய ஆன்மாவிற்கு அனுபவமாகுமெனவும் எதிர் நிரனிறையாகக்கொள்க.

ஆன்மாவின் விருத்தி புறத்து நிகழ்தலும் அகத்து நிகழ்தலு மெனவிரு வகைப்படும். அவற்றுள், புறத்து நிகழுங்கால் விடயங் களிற் பற்றுவைத்து அதிலழுந்தியுழலாது சிவபெருமான் திரு மேனிகொண்டெழுந்தருளியிருக்கும் ஆலயங்களிற் சென்று தட த்தத் திருமேனியிற் பற்றுவைத்து அத்திருமேனியை வழிபடும் மந்திரமயமாய் நிற்கவேண்டுமெனவும், இவ்வழிபாட்டின் முற்று தலால் விடயப்பற்று அற்று அதனால் விருத்தி புறத்துச்செல்லாது மடங்கி அகத்து நிகழுங்கால் சிவபெருமானுடைய சொரூபத் திரு மேனியிற் பற்றுவைத்து அத்திருமேனியை யறிதற்குரிய சிவ ஞானத்தை ஞானகுருவாற்பெற்று அச்சிவஞானமயமாய் நின்று சிவனைக் காணவேண்டுமெனவும், இவ்வாறு புறத்து மகத்தும் இடையறாது பழகிவரின் சிவமே நானென்னும் அத்துவிதநிலை சித் திக்குமெனவும் இதனாற் கூறியவாறாம். (17)

ஆன்மாவினியல்பு பசுத்துவத்தோடு கூடிப் பசுவெனவும் சிவத்துவத் தோடு கூடிச் சிவமெனவும் நிற்குமாறென்னையென்று ஐயுறுமைப் பொரு ட்டுச் சார்ந்ததன்வண்ணமாம் தன்மையால் எல்லாப்பொருள்களின் றன்மை களும் ஆன்மாவிற்குளவெனக் கூறுகின்றது.

ஆதலினா லெவ்வுருவைப் பாவித்தான் சீவ
னந்தவந்த ரூபமெலாஞ் சிவரூப மாகும்
ஆதிசிவன் வியாபகனா தலினிந்த வாறே
யான்மவிஞ் ஞானத்தைச் சுருக்கியுரை செய்தோம்
தீதினிலிவ்வா றான்மசொரூ பகமாக விருந்த
சிவத்துவத்தை யறிந்தான்மா வைக்காண்பா னவனே
ஓதியசம் சாரசா கரங்கடப்ப னல்லா
லுபநிடதம் வேள்விதெய்வத் தானீந்த லரிதாம்.

(இ-ள்.) ஆதலினால்—(வார்த்தைகளை விகற்பித்துச் சொல்லு தல் மயக்கத்திற்கேதுு) ஆதலால், (சுருக்கிக் கூறுகின்றேன் கேட்

பாயாக),— சீவன் எவ்வுருவைப் பாவித்தான் அந்த அந்தரூபம்— ஆன்மா எந்த எந்த உருவத்தைப் பற்றிற்றோ அந்த அந்த உருவமாய் நிற்குந்தன்மையுடையது,—ஆதிசிவன் வியாபகனாதலின்— ஆதியாகிய சிவன் (எல்லாப் பொருள்களுந் தன்னிடத்து வியாப்பியமாய் அடங்க) தான் வியாபகனாய் நிற்றலால்,—எலாம் சிவரூபமாகும்—எல்லாப்பொருள்களும் சிவரூபமாகும்,—இந்தவாறே ஆன்ம விஞ்ஞானத்தைச் சுருக்கியுரைசெய்தோம்- இந்தப்பிரகாரம் ஆன்மஞானத்தைச் சுருக்கியுரைத்தோம்,—இவ்வாறு தீதில் ஆன்மசொரூபகமாகவிருந்த சிவத்துவத்தையறிந்து ஆன்மாவைக் காண்பான்—உரைத்த இந்தப்பிரகாரம் குற்றமற்ற ஆன்மாவின் சொரூபமாகவிருந்த சிவத்தன்மையையறிந்து ஆன்மாவைக் காண்பவனெவனோ,—அவனே ஒழிய சம்சார சாகரம் கடப்பன்— அவனே சொல்லிய சம்சாரமென்னுங் கடலைக் கடப்பவனும்,— அல்லால் உபநிடதம் வேள்வி தெய்வத்தால் நீந்தலரிது—இவ்வான்மஞானமென்னும் புணையாலல்லது உபநிடதங்களை ஓதுதலாலும் வேள்விகளைச் செய்தலினாலும் தெய்வங்களை வழிபடுதலாலும் அக்கடலை நீந்தல் கூடாது. (எ-று.)

(பொ-ரை.) வார்த்தைகளை விகற்பித்துச் சொல்லுதல் மயக்கத்திற்கேதுவாதலால் சுருக்கிக் கூறுகின்றேன் கேட்பாயாக. ஆன்மா எந்த எந்த உருவத்தைப்பற்றிற்றோ அந்த அந்த உருவேயாய் நிற்குந் தன்மையுடையது. ஆதியாகிய சிவன் எல்லாப் பொருள்களுந் தன்னிடத்து வியாப்பியமாயடங்க தான் வியாபகனாய் நிற்றலால் எல்லாப் பொருள்களும் சிவரூபமாகும். இந்தப் பிரகாரம் ஆன்மஞானத்தைச் சுருக்கியுரைத்தோம். உரைத்த இந்தப் பிரகாரம் குற்றமற்ற ஆன்மாவின் சொரூபமாகவிருந்த சிவத் தன்மையையறிந்து ஆன்மாவைக் காண்பவனெவனோ அவனே சொல்லிய சம்சாரமென்னுங் கடலைக் கடப்பவனும். இவ்வான்மஞானம் என்னும் புணையாலல்லது உபநிடதங்களையோதுதலாலும் வேள்விகளைச்செய்தலினாலும் தெய்வங்களை வழிபடுதலினாலும் அக்கடலை நீந்தல் கூடாது. (எ-று.)

(க-ரை.) எல்லாப் பொருள்களின் தன்மைகளும் ஆன்மாவிற் றுளவாதலால் எல்லாப்பொருள்களுமாய் விளங்குஞ்சிவனைப் பாவிக

கின் ஆன்மா சிவத்தின்றன்மையே தன்றன்மையாகக் கொண்டு விளங்குமென்பதாம்.

சொரூபகம் என்றதில் ககரம் பகுதிப்பொருள் விகுதி. சிவமாய் நிற்றல் ஆன்மாவிற்குச் சொரூபமாதலின் அதனை ஆன்மஞானமென்றும், உலகப்பொருள்களையறியும் அறிவும் அறிவெனப்படுமாதலின், சிவனையறியுமறிவு அதுபோலாது பேரறிவெனப்படுமென்பதுணர்த்துதற்கு விஞ்ஞானமென்றுங்கூறினர்.

சம்சாரத்தைக் கடலாக உருவகஞ்செய்து ஆன்மஞானத்தைப் புணையாக உருவகம் செய்யாமையால் இஃது ஏகதேசவுருவகம்.

அருமை இன்மை குறித்து நின்றது. "பிறவாழி நீந்தலரிது" என்றாற்போல, (திருக்குறள்-செ-8.) ஆம் அசை.

பிரம விட்டுணு முதலிய தேவர்கட்கெல்லாம் முதற்கடவுளாதலின் ஆதிசிவன் என்றார். திருக்குறளாசிரியர் 'ஆதிபகவன்' என்றதும் இப்பொருட்டு. ஆதிசிவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகைவடநூன் முடிபு. எவற்றிற்கும் ஆதியாயிருப்பதொன்று எவற்றுடனும் வியாபித்திருக்குமென்பது தோன்ற ஆதிசிவன் வியாபகனாதலின் எனவும், வியாபகம் முற்பட்டும் வியாப்பியம் உட்பட்டும் விளங்குமென்பதுதோன்ற எலாம் சிவரூபமாகுமெனவும் கூறினர்.

எல்லாப் பொருள்களினும் முற்பட்டு விளங்கும் சிவரூபத்தைப் பாவிக்கிற் சிவத்தின்றன்மையாய் விளங்குவன்; உட்பட்டு விளங்கும் உலகப்பொருள்களைப் பாவிக்கின் அவ்வப்பொருள்களின்றன்மையாய் விளங்குவன்; ஆதலின் உட்பட்டு விளங்கும் உலகப்பொருள்களைப் பாவியாது முற்பட்டு விளங்கும் சிவரூபத்தைப் பாவிக்கவேண்டுமென்பதுணர்த்துதற்கு சீவன் எவ்வுருவைப் பாவித்தான் அந்த அந்த ரூபமெனவும், எலாம் சிவரூபமாகும் சுருக்கியுரை செய்தோம் எனவுங் கூறினர்.

ஆன்மாவிற்குச் சார்ந்ததன் வண்ணமாய் வியாபித்துநின்றறியுந்தன்மை சிறப்பியல்பு. ஆதலின் மலத்தைச் சார்ந்து மலமாயும், அதனின்றும் நீங்கியவிடத்து சிவத்தைச்சார்ந்து சிவமாயும் நிற்

றற்குரிமைபற்றி ஆன்மா சதசத்து எனப்படும். மலத்தைச் சார்ந்ததுவாய் நிற்றல் அநாதி செயற்கையும் சிவத்தைச் சார்ந்ததுவாய் நிற்றல் அநாதி இயற்கையும் ஆம். செயற்கை பொதுவெனவும், இயற்கை சிறப்பெனவும்படும். படவே, சார்ந்ததன்வண்ணமாதல் ஒரு சிறப்பும், சிவமாய் நிற்றல் மற்றொரு சிறப்புமாக, சிறப்பிரு திறப்படுமென்றாகி சிறப்புத்தன்மை பலவாதல் கூடாதென்றத னோடு முரணுமாலெனின், முரணாது. என்னை, சார்ந்ததன்வண்ணமாதல் சிறப்பும், சிவமாய் நிற்றல் சொரூபமும் ஆதலாலென்க. சொரூப நிலையைச் சிறப்பென்றும் தடத்த நிலையைப் பொதுவென்றுங் கூறுதல் வழக்கு. அன்றியும், பொருண்மைச் சாதியுடைமையாதல் குணமுடைமையாதல் பொருட்கு இலக்கணமாதலின், சார்ந்ததன்வண்ணமாதல் ஆன்மாவிற்குப் பொருண்மைச்சாதியெனவும், சிவமாய் நிற்றல் குணமெனவும் அறிந்துகொள்க. குணம்—சிறப்பியல்பு.

சிவம் அநாதியே பிரிப்பின்றி நிற்றலால் சிவத்தின்றன்மை அநாதியேயான்மாவிற்குரியது. அதுவேயான்மாவிற்குச் சொரூபம். ஆயினும், அது மலத்தால் தடைப்பட்டு விளங்காதாயிற்று. ஆதலின் ஆன்ம சொரூபகமாயிருந்த சிவத்துவத்தையறிந்தென்றார். எனவே, ஆன்ம சொரூபகமாயிருந்த சிவத்துவம் என்பதற்கு ஆன்மாவிற்கு இயல்பாகவே எண்குணங்களுண்டு; அது மலத்தால் மறைக்கப்பட்டு விளங்காதாயிற்று; மலம் நீங்கியவிடத்து விளங்கிற்று என்று கொள்ளக்கூடாதென்க, கொள்ளின் இயல்பாகவே எண் குணங்கள் இருந்தும் மலத்தால் மறைக்கப் பட்டவாறுபோல, இனி மலம் நீங்கிய காலத்து விளங்கினும் மீண்டும் மலத்தால் மறைக்கப்படுமென்றாகி, மலம் நீங்குதற்காகச் செய்யும் செயல்கள் பயனில் செயல்களாய் முடியும். அன்றியும், எண் குணங்களுள் இயல்பாகவே பாசங்களினீங்குதல் என்பது ஒரு குணமாகவும், அதற்கு மாறான இயல்பாகவே பாசங்களோடு பொருந்துதல் சிறிதும் பொருந்தாமை காண்க. இன்னும் எண் குணமுடைய சிவமொன்று; எண் குணமுடைய ஆன்மாவொன்று உண்டென இலக்கணத்துள் வேற்றுமையின்றி இலக்கியம் இரண்டு கோடல் மிகையென்னுங் குற்றமாம். ஆகவே, மலம் நீங்

கியவிடத்து தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் சிவத்தின்றன்மை விளங்கித்தோன்ற அதுவாய் நிற்குமென்பதே பொருத்தமுடைத்தென்பது உய்த்துணர்ந்துகொள்க.

சிவத்தின் குணங்களே தன்மாட்டு விளங்கித் தோன்றுமென்றல் சிவசங்கிராந்தவாதமாகாதோவெனின், ஆகாது. என்னை? கண்ணாடியில் முகந்தோன்றுவதுபோல மலம்நீங்கப்பெற்ற ஆன்மாவில் திருவருள் தோன்றும். தோன்றவே, உப்பளத்திலிட்ட பொருள் கெட்டு உப்பேயாதல்போல, ஆன்மா கெட்டுத் திருவருட்சொரூபமாய்த் தோன்றுமென்பது சிவசங்கிராந்தவாதம். "சுத்தவனுபோகத்தைத் துய்த்தலணு" என்னுஞ் சுருதியின்படி முத்தியினும் ஆன்மாவுண்டென்பது சைவசித்தாந்தம். ஆதலால், அது முத்தியில் ஆன்மாவில்லையென்னும் சிவசங்கிராந்தவாதம் ஆகாமைகாண்க.

அங்ஙனமாயின், "இத்தைவிளைவித்தன் மலம்" எனவும் அச்சுருதி கூறுதலின், முத்தியில் மலமும் உண்டென்று கொள்ள வருமே? வரின், மலத்தாலாகிய சம்சாரசாகரத்தைக் கடப்பனென்றது எவ்வாறு பொருந்துமெனின், மலநீக்கமேதுவாக சிவத்தன்மை விளங்கித்தோன்றும் என்பதுபற்றி இத்தை விளைவித்தன் மலமென்றாராதலின் பொருந்துமெண்க. இவ்வுண்மையினையும் உற்றுநோக்காது அவ்வாசிரியரே மேல் "முத்திதனில்—சித்தமலமற்றார் செறிந்திடுவ ரென்றுமறை சத்தியமாய் ஓதியிடும்" என்றருளியிருத்தலையும் நோக்காது முத்தியிலும் மலமுண்டுபோலுமென மயங்கி இடர்ப்படுவர்.

முத்தியில் மலம் அறவே நீங்கும். நீங்கினும் ஏனைப் பெத்தரிடத் திருத்தலால் நித்தத்திற்கிழுக்கு இல்லை. இதனை,

நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதியாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின்பா லில்லை
தொக்கிருந்து மற்றேருநெற் றேன்றிடாவா
மெல்லவிவை விடுமறவே யிவைபோல வணுவை
மேவுமல முடல்கன்ம மநாதிவிட் டேநீங்கு
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலா ஞசமுமின் றுமே.

என்னும் சிவஞானசித்தியாரானும் "ஏகனுகி இறைபணி நிற்கில் மலமாயை தன்னொடு வல்வினையின்றே" என்னும் சிவஞானபோதத்தானும் தெளிக.

அங்ஙனமாயின்,

"அழிந்திடும் பாசமென்னில் நித்தமென் றுரைக்கல் வேண்டா
அழிந்திடா தென்னில் ஞானம் அடைவது கருதவேண்டா
அழிந்திடுஞ் சத்திநித்த மழிந்திடா வொளியின் முன்னேர்
அழிந்திடு மிருளும் நாச மடைந்திடா மிடைந்திடாவே."

என்னும் சிவப்பிரகாசக் கருத்தோடு முரணுதோவெனின், முரணுது. என்னை? சிவனேடு பிரிப்பின்றி நிற்கும் உயிர்களை மறைக்கும் மலத்தின் சத்தி சிவனை மறையாதவாறுபோல சிவமேயாய்நிற்கும் உயிர்களை மறையாமையின் சத்தியழிந்திடுமென்றும், சிவனுள்வியாப்பியமாயிருந்து சிவனையுணராத உயிர்களை மறைத்து நிற்றலின் நித்தம்அழிந்திடாதென்றும் கூறினமையாலென்க. அன்றியும் முதனூல் வழிநூல்களோடு புடைநூலாசிரியர் மாறுபடக் கூறுரென்பதுங் கடைப்பிடிக்க. ஆதலால் இன்மை முகத்தான் இன்பம் விளையுமெனக் கூறவேண்டி இத்தை விளைவித்தன் மலமென்றுர் என்றுணர்ந்துகொள்க. இவ்வாறு திருக்குறளில் "அல்லலருளாள்வாற் கில்லை—வளிவழங்கு மல்லன்மா ஞாலங்கரி" என்றவிடத்து ஞாலமின்மை கரியெனக்கூறவேண்டியதனை ஞாலங்கரியென்று கூறியவாறு காண்க. இன்னும், பெரியபுராணம் திருநாவுக்கரசுசுவாமிகள் புராணத்தில் "இவ்வாழ்வுபெறத் தருசூலை யினுக்கெதிர்செய் குறையென்கொ லெனத் தொழுதார்." என்றதும் இதனை வலியுறுத்துமாறு காண்க. என்னை, "மன்னும் பதிகம் மதுபாடியபின் வயிறுற்றடுசூலை மறப்பிணிதான்—அன்னின்ற நிலைக்கணகன்றிடலும்" என மேலே சூலைநோய் நீக்கம்பெறப்பட்டமையின் என்க. எனவே, சூலைநோய் காரணமாகச் சிவபிரானையடைய அடைந்ததனுல் சூலைநோய் நீங்கி சிவானந்தம்பெற்றமையின் சிவானந்தானுபவகாலத்தும் சூலைநோய் சத்திகெட்டிருந்ததென்று கொள்ளுதல் கூடாதவாறுபோல, முத்திபெற்றவுயிரினிடத்து மலம் சத்திகெட்டு இருக்குமென்று கொள்ளுதல் கூடாதென்ப

தாம். இன்னும் இதுபற்றிய சங்கையுத்தரங்களெல்லாம் சிவஞான போதச் சிற்றுரைவிளக்கத்தினும் சிவஞானசித்தியார் பொழிப் புரையினும் கூறியிருக்கின்றுமாதலின் அவ்விடங்களிற்காண்க.

உபநிடதம் ஓதுதல் வேள்விசெய்தல் தெய்வவழிபாடு செய்த லாகிய இவையெல்லாம் ஆன்மஞானம் விளங்குதற்பொருட்டுச் சாதனமாக வேண்டப்படும். ஆயினும் சம்சாரசாகரத்தைக் கடத் தற்கு அவை நேரே சாதனமாகாதென்பதுணர்த்துதற்கு, உபநிட தம் வேள்வி தெய்வத்தால்நீந்தலரிதாம் என்றுர். வேள்வியென்பது இவ்விடத்து நைமித்திகமாகச்செய்யப்படும் திருவிழாவையென்க.

சிவம் பிரமம் என்பன ஒரு பொருட்சொற்கள். சிவமாய் நின்று சிவனையுணரும் சிவஞானமே உணருமுரிமைபற்றி இவ்வி டத்து ஆன்மஞான மெனப்பட்டது. இவ்வான்மஞானத்திற்கும் நான் பிரமம் என்னும் பசுஞானத்திற்கும் வேற்றுமை என்னையெ னின், மலம் நீங்கியவிடத்து தன்னோடு பிரிப்பின்றிநிற்கும் சிவம் விளங்கித்தோன்றுதலால் அச்சிவமாய் நிற்றல் சிவஞானம் எனப் படும் ஆன்மஞானம். கருவிகள் நீங்கியவிடத்து நானே பிரமம் என நிற்றல் பசுஞானம். ஆகவே, தானே கர்த்தாவாய் நிற்றல் பசுஞான மும் கர்த்தாவைச்சார்ந்து கர்த்தாவாய் நிற்றல் ஆன்மஞானமும் ஆதலே வேற்றுமையென்க. மாயாகாரியம் நீங்குதலும் மலம் நீங்கு தலும் முறையே பசுஞானத்திற்கும் ஆன்மஞானத்திற்கும் வேற் றுமை யெனினுமாம். (18)

ஆன்மஞானத்தின் பெருமைகூறி
அதனையே சிந்திக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

ஆன்மாவே பரமசிவ மேனவுண்மை யாக
அறிகின்றுன் அவனேந்த வவத்தையடை யினுமவ்
வாண்மாவே பரமுத்தி யெளிதடையு மிந்த
ஆன்மலா பத்தையோத்த லாபம்வே றில்லை
ஆன்மாவே விசிட்டகர ணுதீத வாக்கு
மனுதீத சருவக்ஞ ஞனபூ ரணனும்
ஆன்மாவே பரமசிவ சோரூபமா கலினு
லான்மரூ பத்தையே சிந்திக்கக் கடவன்.

(இ-ள்.) ஆன்மாவே பரமசிவம் என உண்மையாக அறிகின்ருன்—ஆன்மாவே பரமசிவமென அனுபவமாக அறிகின்றவன் எவனே,— அவன் எந்த அவத்தையடையினும்—அவ்வநுபவ அறிவுடையவன் எந்த நிலையையடையினும்,— அவ்வான்மாவே பரமுத்தி எளிது அடையும்—அந்த ஆன்மாவே பரமுத்தியை இலகுவாக அடையும்,— இந்த ஆன்மலாபத்தையொத்த லாபம் வேறில்லை—(ஆதலால்) இந்த ஆன்மலாபத்திற்கு ஒப்பான லாபம் வேறென்றுமில்லை,—ஆன்மாவே விசிட்டகர ணதீத வாக்கும ணதீத சர்வக்ஞனை பூரணனும்—இந்த ஆன்மாவே விசேடத்தோடுகூடிய கரணங்களுக்கு அதீதமாயும் பாசஞான பசுஞானங்கட்கு எட்டாததாயும் விளங்கும் முற்றறிவுடைய பூரணனும்,—ஆன்மாவே பரமசிவ சொரூபம்—இந்த ஆன்மாவே பரமசிவசொரூபமாகும்,—ஆதலினல் ஆன்ம ரூபத்தையே சிந்திக்கக்கடவன்—ஆதலால் ஆன்மசொரூபத்தையே சிந்திக்கக்கடவனுக. (எ-று)

(பொ-ரை) ஆன்மாவே பரமசிவமென அனுபவமாக அறிகின்றவன் எவனே அவ்வநுபவ அறிவுடையவன் எந்த நிலையையடையினும் அந்த ஆன்மாவே பரமுத்தியை இலகுவாக அடையும். ஆதலால் இந்த ஆன்மலாபத்திற்கொப்பான லாபம் வேறென்றுமில்லை. இந்த ஆன்மாவே விசேடத்தோடு கூடிய கரணங்கட்கதீதமாயும் பாசஞான பசுஞானங்கட் கெட்டாததாயும் விளங்கும் முற்றறிவுடைய பூரணனும். இந்த ஆன்மாவே பரமசிவசொரூபமாகும். ஆதலால் ஆன்மரூபத்தையே சிந்திக்கக் கடவனுக. (எ-று)

(க-ரை.) ஆன்ம ஞானத்தையடைந்தவன் எந்த நிலையையடையினும் பரமுத்தியை எளிதிலடைவனுகலின் ஆன்ம சொரூபத்தையே சிந்திக்கவேண்டுமென்பதாம்.

ஆன்மாவே சிவமெனக்கண்ட ஞானி, சாக்கிர முதலிய எந்த நிலையையடையினும் அந்நிலையைப் பற்றுனென்பதுணர்த்துதற்கு எந்த அவத்தையடையினும் பரமுத்தி எளிதடையு மெனவும், ஆன்மா பெறும் பேறுகள் பலவற்றுள்ளும் இதுவே சிறந்த பேறென்பதுணர்த்துதற்கு இந்த ஆன்ம லாபத்தையொத்த லாபம்

லேறில்லை யெனவும், தியான யோகங்களுடன் கூடின கரணங்களுக்கு அதீதன் என்பது உணர்த்துதற்கு விசிட்ட கரணாதீதன் எனவும், பாசஞான பசு ஞானங்கட்கு அதீதன் என்பதுணர்த்துதற்கு வாக்குமனாதீதன் எனவும் கூறினர். (19.)

இதுவுமது.

அகம்புறந்தூ ரஞ்சமீப மின்றாய்நிட் களமா
யதிகசுயம் பிரகாச மாய்ப்பிரம மாகித்
தகுங்குறுக்கு மேல்கீழுட் புறம்பெங்கு மோக்கச்
சருவசூ னியத்திருந்த தற்சோரூப மாகிப்
பகர்ந்தசூ னியமசூ னியமிரண்டு தொடர்விற்
பதிப்பதுமன் றாகிநிரா தாரநிரா மயமாய்
நிகழ்ந்தகுணா தீதவர்ண ரூபரகி தனுமாய்
நிரஞ்சனமாய் ஆன்மாவைச் சிந்திக்கக்கடவன்.

(இ-ள்.) அகம் புறம் தூரம் சமீபம் இன்றாய்—உள்ளென்றும் புறம்பென்றும் தூரமென்றும் சமீபமென்றும் இல்லாததாயும்,—நிட்களமாய்—கலாதி வடிவமில்லாததாயும்,—அதிக சொயம்பிரகாசமாய்—நிறைந்த சொயம்பிரகாசமாயும்,—பிரமமாகி—பிரமமாயும்,—தகுங்குறுக்கு மேல்கீழ் உள் புறம்பு எங்கும் ஒக்க சர்வசூனியத்து இருந்த தற் சொரூபமாகி—பொருந்துகின்ற குறுக்கும் மேலும் கீழும் உள்ளும் புறம்பும் ஆகிய எவ்விடத்தும் சமமாய் வெறும் பாழ்போலுள்ள சிவ சொரூபமாயும்,— பகர்ந்த சூனியம் அசூனியம் இரண்டு தொடர்வில் பதிப்பதும் அன்றாகி—சொல்லப்பட்ட சூனியம் சூனியமில்லாமை என்னும் இரண்டு தொடர்பில் அமைத்துக்கொள்ளும் தன்மை யல்லாததாயும்,— நிராதார நிராமயமாய்—தனக்கோர் ஆதாரமில்லாததாயும் துன்பமில்லாததாயும்,—நிகழ்ந்தகுணாதீத வர்ணரூபரகிதனுமாய்—மாயையின் காரியமாய் நிகழும் குணங்கட்கதீதமாயும் நாமரூபமில்லாததாயும்,—நிரஞ்சனமாய்—மலமில்லாததாயும்,—ஆன்மாவைச் சிந்திக்கக்கடவன்- ஆன்மாவைச் சிந்திக்கக் கடவனாக, (எ-று.)

(பொ-ரை.) உள்ளென்றும் புறம்பென்றும் தூரமென்றும் சமீபமென்றும் இல்லாததாயும், கலாதி வடிவமில்லாததாயும்,

நிறைந்த சொயம்பிரகாசமாயும், பிரமமாயும், பொருந்துகின்ற குறுக்கும் மேலும் கீழும் உள்ளும் புறம்புமாகிய எவ்விடத்தும் சமமாய் வெறும்பாழ்போலுள்ள சிவ சொரூபமாயும், சொல்லப் பட்ட சூனியம் சூனியமில்லாமையென்னும் இரண்டு தொடர்பில் அமைத்துக்கொள்ளும் தன்மையல்லாததாயும், தனக்கோராதார மில்லாததாயும், துன்பமில்லாததாயும், மாயையின் காரியமாய் நிகழும் குணங்கட்கதீதமாயும், நாம ரூபமில்லாததாயும், மலமில்லாத தாயும், ஆன்மாவைச் சிந்திக்கக்கடவன். (எ-று.)

(க-ரை.) சிவனாய் நிற்குமொற்றுமைபற்றிச் சிவனுக்குரிய தன்மையனைத்தும் தன்பாலேற்றித் தன்னையே சிந்திக்கவேண்டு மென்பதாம்

தத் என்பது மகா வாக்கியத்தால் அதுவென்றோதப்படுஞ் சிவம்.

உலகப்பொருள்களை வேறு வேறாகக் காணில் விகற்பவுணர் வுண்டாகுமென்பதும், எல்லாம் சிவமேயாய்க்காணினும் அப்பொ ழுதும் காணப்படும் சிவம் ஒன்று காணும் நான் ஒன்றென விகற்ப வுணர்வே மேம்படுமென்பதும், ஆதலின் அவன் என்றும் நானெ ன்றும் பேதபாவனையின்றி தான் சிவமாயே நிற்கவேண்டுமென்ப தும், அங்ஙனம் நிற்பவனுக்கு ஒவ்வொரு சமயத்தில் விருத்தி புறத்துவரின் அப்பொழுதும் சிவமாய் நிற்குமொற்றுமைபற்றி சிவமும் நான், சிவனால் வியாபிக்கப்பட்ட பொருள்களும் நானே எனத் தன்னையே சிந்திக்கவேண்டுமென்பதும், தன்னைச் சிந்திக் கும் அகநோக்குடையார்க்கு புறத்துவிடயம் தாக்காதென் பதுமுணர்த்துதற்கு, ஆன்ம ரூபத்தையே சிந்திக்கக்கடவன் என மேலைச் செய்யுளினும், ஆன்மாவைச் சிந்திக்கக்கடவன் என இச் செய்யுளினும் கூறியவாறுமென உய்த்துணர்ந்துகொள்க. (20)

ஆன்மஞானத்தைப்பெற்ற ஞானி சிவனையே சிந்தித்துக்கொண்டிருப்ப ரெனக் கூறுகின்றது.

வன்னமாச் சிரமமுயர் தபஞ்சேபந்தி யான
மந்திரந்தீர்த் தந்தெய்வ வுபாஸ்திதிக்குக் காலஞ்

சொன்னதரு மஞ்சாதி சங்கமெலாம் விட்டுச்
சுயம்பிரகா சத்தினே நிராசிரய ஞகி
அன்னியசிந் தனைவிட்டுச் சகலபதார்த் தத்து
மாசையற்றுப் பாவஞ தீதஞ யென்றுந்
தன்ஞலே தன்னைத்தன் னிடத்திலே தானே
தானிருந்து சிந்திப்பர் தகுஞானத் தவரோ.

(இ-ள்.) உயர் தபம் மந்திரசெபம் தியானம் தீர்த்தம் தெய்வவுபாஸ்திக்கு வன்னம் ஆச்சிரமம் சொன்ன காலம் தருமம் சாதி சங்கமெலாம்விட்டு—மேலான தவமும் மந்திரத்தைக் கணித்தலாகிய செபமும் மூர்த்தியைப் பாவித்தலாகிய தியானமும் தீர்த்தமாடலுமாகிய தெய்வவுபாசனைக்கு, வருணத்துக்கும் நிலைக்கு மேற்றவாறு கூறப்பட்ட காலம் செய்யுமுறை சாதி நல்லாரிணக்கம் ஆகிய இவை யெல்லாவற்றையும் விட்டு,—சுயம்பிரகாசத்தினே நிராசிரயனுகி—சுயம்பிரகாசமாய் விளங்கும் சிவனிடத்துச் சிந்தையை நிறுத்தி அங்ஙனம் நிற்கின்றேமென்னும் போதமும் அற்று,—அன்னிய சிந்தனை விட்டு—தான் என்றும் அவன் என்றும் கருதுகின்ற பேதபாவனையில்லாதவனுய்,—சகல பதார்த்தத்தும் ஆசையற்று—(பிராரத்தம் காரணமாக விடயங்கள் தோன்றவரினும்) அவற்றிலாசையில்லாதவனுய்,— பாவனுதீதனுய்—பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்று பாவனைகளுக்கும் அதீதனுய்,—தன்னை தன்ஞலே தன்னிடத்திலே என்றும் இருந்து சிந்திப்பர்தகு ஞானத்தவரே—தன்னைச் சிவனருளாலே சிவனிடத்திலே இடையறாது நின்று சிந்திப்பர் பெருமைவாய்ந்த சிவஞானச்செல்வர்கள். (எ-று.)

(பொ-ரை.) மேலானதவமும், மந்திரத்தைக் கணித்தலாகிய செபமும், மூர்த்தியைப் பாவித்தலாகிய தியானமும், தீர்த்தமாடலுமாகிய தெய்வ வுபாசனைக்கு, வருணத்திற்கும் நிலைக்குமேற்றவாறு கூறப்பட்ட காலம், செய்யுமுறை, சாதி, நல்லாரிணக்கம் ஆகிய இவையெல்லாவற்றையும்விட்டு, சொயம்பிரகாசமாய் விளங்கும் சிவனிடத்தில் சிந்தையை நிறுத்தி, அங்ஙனம் நிற்கின்றேமென்னும் போதமுமற்று, தான் என்றும் அவன் என்றும் கருதுகின்ற பேதபாவனையில்லாதவனுய், பிராரத்தங் காரணமாக விட

யங்கள் தோன்ற வரினும் அவற்றிலாசையில்லாதவனாய், பேதம், அபேதம் பேதாபேதமென்னும் மூன்று பாவனைக்குமதீதனாய், தன்னைச் சிவனருளாலே சிவனிடத்திலே இடையறாது நின்று சிந்திப்பர் பெருமை வாய்ந்த சிவஞானச் செல்வர்கள். (எ-று)

(க-ரை.) சிவஞானிகள் சிவனருளாலே சிவனிடத்தி லிடையறாது நின்று தன்னைச் சிவமாகச் சிந்திப்பரென்பதாம்.

தானே யென்பதும் தான் என்பதும் அசை. (21.)

சிவஞானியின் சுவாநுபூதி நிலை கூறுகின்றது.

சித்தமா னதுவேறொன் றையுஞ்சிந்தி யாமற்
சிந்தியா வசிந்திய மவ்விரண்டு மின்றாய்த்
தத்துவா தீதநிட் களசொரூப மான
தற்சொரூப மறிந்தாலேச் சுகமுண்டச் சுகமே
நித்தியநிர் விகற்பமாய்ச் சிந்திக்க வரிதாய்
நிரதிசயா னந்தமா கியபரம சுகமாம்
அத்துரிய சுகமேது திருட்டாந்த மின்றா
யாதியந்தா தீதமா முத்திச்சுக மாமே.

(இ-ள்.) சித்தமானது வேறொன்றையும் சிந்தியாமல்—அறிவானது தன்னின் வேறான ஒரு பொருளையுமறியாமல்,—சிந்தியா அசிந்தியம் அவ்விரண்டுமின்றாய்—சிந்தனை செய்தலும் சிந்தனை செய்யாதிருத்தலுமாகிய அவ்விரண்டுமில்லாததாய்,—தத்துவாதீத நிட்கள சொரூபமான தற் சொரூபமறிந்தால் எச்சுகமுண்டு—தத்துவங்களுக்கெல்லாம் அதீதமாகிய நிட்கள சொரூபமான தன்னுடைய சொரூபத்தையறிந்தால் எந்தச் சுகமுண்டோ,—அச்சுகமே நித்திய நிருவிகற்பமாய் சிந்தித்தற்கரிதாய் நிரதிசயானந்த பரமசுகமாம்—அந்தச்சுகமே நித்தியமாயும் நிருவிகற்பமாயும் சிந்தித்தற்கரிதாயும் நிரதிசயானந்தமாயும் விளங்குகின்ற மேலான சுகமாம்,—அத்துரிய சுகம் ஏது திருட்டாந்தமின்றாய் ஆதியந்தாதீதமாம் முத்திச்சுகமாமே—அந்தத்துரிய சுகமானது அநுமானப் பிரமாணத்தாலறிதற்குரிய ஏது திருட்டாந்தமில்லாததாயும் ஆதியந்தமில்லாததாயும் உள்ள முத்திச்சுகமாம். (எ, று.)

(பொ-ரை.) அறிவானது, தன்னின் வேறான ஒரு பொருளை யும் அறியாமல், சிந்தனை செய்தலும் சிந்தனை செய்யாதிருத்தலு மாகிய அவ்விரண்டுமில்லாததாய், தத்துவங்கட்கெல்லாம் அதீத மாகிய நிட்கள சொரூபமான தன்னுடைய சொரூபத்தை அறிந் தால் எந்தச்சுகமுண்டோ அந்தச்சுகமே, நித்தியமாயும் நிருவிகற் பமாயும் சிந்தித்தற்கரிதாகியும் நிரதிசயானந்தமாயும் விளங்கு கின்ற மேலான சுகமாம். அத்துரிய சுகமானது அநுமானப் பிர மாணத்தால் அறிதற்குரிய ஏது திருட்டாந்தம் இல்லாததாயும் ஆதியந்தமில்லாததாயும் உள்ள முத்திச்சுகமாம். (எ-று.)

(க-ரை.) சிவஞானி சிவஞானத்தால் சிவனோடு பிரிப்பின்றி நிற்கும் தன்னையறிந்து சிவானந்தமாய் வாழ்வனென்பதாம்.

இறைவனுடைய தடத்தநிலையாகிய அருவம் அருவுருவம் உருவமென்னும் மூன்றற்கும் அப்பாற்பட்ட சொரூப நிலையை யுணர்த்துதற்குத்துரியம் என்றார். (22)

சிவஞானிக்குச் சமய நியமங்களின் சங்கற்பம் கிடையாதெனக் கூறுகின்றது.

உறுவிடய சங்கமனோ வியாபாரம் போக்கி
யுன்மனிபா வகமாவ துயர்பரம சுகமா
நிறுவிநிரு விகற்பமா யிலயித்த போது
நிரதிசயா னந்தமா கியசுகமும் விளங்கும்
சறுவதிக்குத் தேசகா லங்கள்யோ கிக்காஞ்
சரியைகிரி யாயோக சமயநிய மங்கள்
செறிவன்னுச் சிரமங்கள் முதலாய நிகழ்த்துந்
தேசகா லந்திக்கு சிவஞானிக்காகா.

(இ-ள்.) உறுவிடய சங்கமனோ வியாபாரம் போக்கி—பொரு ந்துகின்ற விடயக் கூட்டம் காரணமாக மனத்தின்கண் நிகழும் சங் கற்ப விகற்பங்களை அறவேயொழித்து,— உன்மனிபாவகமாவது உயர் பரமசுகமாம்—மனோதீதமாய்ப் பிரகாசிக்கும் திருவருட் சத்தி தன்னறிவின்கண் விளங்கப்பெறுதல் மிக மேலான சுகமா கும்,—நிறுவிநிருவிகற்பமாய் இலயித்தபோது—அத் திருவருள் விளக்கம் நிலைக்கப்பெற்றுப் பின்னர்த் திருவருள்மானத் தாமென

வேற்றுமையின்றி அவ்வருளே தானாக ஒற்றுமைப்பட்டு நின்ற பொழுது,—நிரதிசயானந்தமாகிய சுகமும் விளங்கும்—தனக்கு மேற்பட்டதொன்றில்லாத நிலை பேறுடைய ஆனந்தமாகிய சுகமும் விளங்கித்தோன்றும்,—சறுவதிக்கு தேசகாலங்கள் யோகிக்கு ஆம்—திக்கு தேசம் காலம் முதலான எல்லா நியமங்களும் யோகிக்கு வேண்டப்படுவனவாம்,—சரியை கிரியா யோக சமய நியமங்கள் செறிவன்னாச்சிரமங்கள் முதலாய நிகழ்த்தும் தேசகாலம் திக்கு சிவஞானிக்காகா—சரியை கிரியை யோக அநுட்டானங்கள் சமயாசாரங்கள் பொருந்துகின்ற வருணாச்சிரம தருமங்கள் முதலாகச் சொல்லப்படும் தேசமும் காலமும் திக்கும் சிவஞானிக்கு வேண்டப்படுவனவல்ல. (எ-று.)

(பொ-ரை.) பொருந்துகின்ற விடயக்கூட்டங் காரணமாக மனத்தின்கண் நிகழும் சங்கற்பவிகற்பங்களையறவே யொழித்து மனாதீதமாய்ப் பிரகாசிக்கும் திருவருட் சத்தி தன்னறிவின்கண் விளங்கப்பெறுதல் மிக மேலான சுகமாகும். அத் திருவருள் விளக்கம் நிலைக்கப்பெற்று பின்னர்த் திருவருளெனத்தானென வேற்றுமையின்றி அவ்வருளே தானாக ஒற்றுமைபட்டு நின்றபொழுது தனக்கு மேற்பட்டதொன்றில்லாத நிலைபேறுடைய ஆனந்தமாகிய சுகமும் விளங்கித்தோன்றும். திக்கு தேசம் காலம் முதலான எல்லா நியமங்களும் யோகிக்கு வேண்டப்படுவனவாம். சரியை கிரியை யோக அநுட்டானங்கள் சமயாசாரங்கள் பொருந்துகின்ற வருணாச்சிரம தருமங்கள் முதலாகச் சொல்லப்படும் தேசமும் காலமும் திக்கும் சிவஞானிக்கு வேண்டப்படுவனவல்ல. (எ-று.)

(க-ரை.) சிவஞானிக்கு சரியை முதலிய சாதனங்களும் சமயாசாரங்களும் வருணாச்சிரம தருமங்களும் தேசகால திக்குக்களும் வேண்டப்படுவனவல்லவென்பதாம்.

மனம் எப்பொழுதும் யாதானுமொன்றைப்பற்றியே நிற்கும். ஒன்றையும் பற்றாது தனித்து ஒருகாலத்தும் நிற்பதில்லை. ஆதலால், புறத்து விடயங்களிற் பற்றுச்செய்து நிற்கும் மனத்தை அவற்றினின்று மீட்டவேண்டுமாயின், அகத்து பிராசாத நெறியாகிய யோகத்திற் பற்றுச்செய்து பயிலவேண்டுமென்பது தோன்ற

வும், அங்ஙனம் பயிலுங்கால் பிரமாந்திரத்தில் கோடி சூரியப்பிர காசமென்னும்படியான உன்மனிசத்தி விளங்கித்தோன்றும் என் பது தோன்றவும், அப்பொழுது உண்டாகும் சுகம் விடய சுகங் களை நோக்க மிக மேலானதென்பது தோன்றவும், உறுவிடய சங் கமனை வியாபாரம் போக்கி உன்மனிபாவகமாவது உயர்பரம சுக மாமென்றார்.

அங்ஙனம் உன்மனி சத்தி விளங்கித்தோன்று மந்நிலையும், காண்பான் காட்சி காணப்படுவதென்னும் பேதமான நிலையாதலின், அப்பேதமும் அறவேண்டுமென்பது தோன்றவும், அற்ற அந்நிலை யிலுண்டாம் சுகம் தனக்கு. மேற்பட்டதொன்றில்லாத நிலைபே றுடையதென்பது தோன்றவும், நிறுவி நிருவிகற்பமா இலயித்த போது நிரதிசயானந்தமாகிய சுகமும் விளங்குமென்றார்.

உம்மை சிறப்பு.

இன்ன தேசத்தில் இன்ன காலத்தில் இன்ன திக்குநோக்கி இவ்வாறு இருந்து இன்ன இன்ன சாதனங்கள் பயிலவேண்டு மென்ற நியமங்கள் சிவஞானம் வருதற்பொருட்டு வேண்டப்படு மாதலின் யோகிக்காமெனவும், சிவஞானம் கைவரப்பெறின் அந்த ஞானானுபவத்தில் அழுந்துதலிலேயே விருத்தி நிகழ, ஏனைச் சரி யையாதிகள் உறங்கினவன் கைப்பொருள்கள் போல நெகிழும் ஆதலின் சிவஞானிக்காகாவெனவுங்கூறினர். இக்கருத்தே பற்றி

"ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொ டாச்சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமலமில்லை
கோலமிலை புலனில்லை கரணமில்லை
குணமில்லை குறியில்லை குலமுமில்லை
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினே டாடலிவை பயின்றிடினும் பயில்வர்."

என்றருளிச்செய்தனர் அருணந்திசிவாசாரியரும். (சிவஞான சித்தியார்-அ-சூ-செ-௩௰௨.) (23.)

சிவஞானி சிவனிடத்திற் சித்தத்தை வைத்து அடங்கியிருப்பனெனக் கூறுகின்றது.

சுரபிகள்வ ருணம்பலவா யிருந்தாலு மந்தச்
சுரபிகளின் பாலேக நிறத்திருந்தாற் போலப்
பரவருணச் சிரமம்பல வானாலு ஞானப்
பான்மையொரு படித்தாகு மாகலினெவ் விடத்தும்
பெருவியா பகமாகிச் சருவதோ முகமாம்
பிரமத்தி னிடத்திலே சித்தத்தை வைத்துக்
கருமவநுட் டானங்க ளேவையுமுற்றத் துறந்து
கருத்தடங்கி நிருவிகற்பத் திருப்பவன் மெய்ஞ்ஞானி.

(இ-ள்.) சுரபிகள் வருணம் பலவாயிருந்தாலும் அந்தச் சுரபிகளின்பால் ஏகநிறத்து இருந்தாற்போல—பசுக்களின் சரீர நிறம் செம்மை வெண்மை முதலிய பல பேதமாயிருப்பினும் அந்தப் பசுக்களினிடத்துண்டாகும் பால் வெண்மையாகிய ஒரு நிறமாயிருப்பதுபோல,—வருணாச்சிரமம் பலவானாலும் பரஞானப் பான்மையொருபடித்தாகும்—சரீரதன்மமான அந்தணர் முதலிய சாதிகளும் பிரமசரியம் முதலிய நிலைகளும் பலவாயிருப்பினும் சரீரியாகிய ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றும் சிவஞானத் தின்றன்மை ஞானாகாசமான ஒருதன்மையாயிருக்கும்,— ஆகலின் எவ்விடத்தும் பெருவியாபகமாகிச் சர்வதோமுகமாம் பிரமத்தினிடத்திலே சித்தத்தைவைத்து—ஆதலால் எங்கும் நிறைந்த பெருவியாபகமாயும் எவ்வுயிர்களிடத்தும் கிருபாநோக்கமுடையதாயும் விளங்குகின்ற சிவத்தினிடத்திலே தன்னறிவை வைத்து,—கரும அநுட்டானங்களேவையும் முற்றத்துறந்து கருத்தடங்கி நிருவிகற்பத்திருப்பவன் மெய்ஞ்ஞானி—சரியை கிரியை யோக அநுட்டானங்கள் எவற்றையுமறவே கைவிட்டு அவற்றை விட்டோமென்னும் போதமும் இறந்து சிவனெனத் தானென வேற்றுமையின்றிச் சிவமாயேயிருப்பவனே மெய்ஞ்ஞானியாவன். (எ-று.)

(பொ-ரை.) பசுக்களின் சரீர நிறம் செம்மை வெண்மை முதலிய பல பேதமாயிருப்பினும் அந்தப் பசுக்களினிடத்து உண்டாகும் பால் வெண்மையாகிய ஒரு நிறமாயிருப்பதுபோல, சரீர

தன்மமான அந்தணர் முதலிய ஜாதிகளும் பிரமசரியமுதலிய நிலைகளும் பலவாயிருப்பினும், சரீரியாகிய ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றும் சிவஞானத்தின்றன்மை ஞானாகாசமான ஒரு தன்மையாயிருக்கும். ஆதலால் எங்கும் நிறைந்த பெருவியாபகமாயும் எவ்வுயிர்களிடத்தும் கிருபாநோக்கமுடையதாயும் விளங்குகின்ற சிவத்தினிடத்திலே தன்னறிவைவைத்து சரியை கிரியை யோக அநுட்டானங்கள் எவற்றையும் அறவே கைவிட்டு அவற்றை விட்டோமென்ற போதமும் இறந்து சிவனெனத் தானென வேற்றுமையின்றிச் சிவமாயேயிருப்பவனே மெய்ஞ்ஞானியாவன். (எ-று.)

(க-ரை.) சிவஞானம் எவ்விடத்தும் ஏகமாய் விளங்குமாதலால் சிவனிடத்தில் சித்தத்தை வைத்து கரும அநுட்டானங்கள் எவையும் முற்றத்துறந்து கருத்தடங்கி நிற்பவன் மெய்ஞ்ஞானியாவன் என்பதாம்.

பசு, உயிருக்கும், பசுவினுடல்கள், உயிர்கள் தங்கும் உடலுக்கும், பசுவினிடத்தில் உள்ளீடாய்க் கலந்திருக்கும் பால், உயிர்களிடத்து உள்ளீடாய்க் கலந்திருக்கும் சிவஞானத்திற்கும் உவமைகளாம். பால், இரத்தத்துள் அடங்காது தன்மையினால் வேறாயிருக்கும். இருப்பினும் கலப்பினால் இரத்தத்தோடு ஒன்றாயும் இருக்கும். தன்மையினால் வேறென்பது இரத்தத்தின் நிறம் செம்மையாயிருத்தலினும் பாலின் நிறம் வெண்மையாயிருத்தலினும் வைத்தறியப்படும். இவ்வாறே சிவஞானமும் உயிர்களின் அறிவினிடத்து கலப்பினால் ஒன்றாயும் தன்மையினால் வேறாயும் இருக்கும். எல்லாப் பசுக்களின் இரத்தமும் செம்மையாகவேயிருத்தலின் அதனையுவமை கூறாது பாலையுவமையாகக்கூறிய கருத்தென்னையெனின், இரத்தம் உடற்கூற்றுளொன்றாய் பசுதனக்குபகாரமாயிருப்பது. பால் உடற்கூற்றுளொன்றன்றாய் தன் கன்றுக்குபகாரமாயிருப்பது. அதுபோல, எல்லா ஆன்மாக்களின் ஞானமும் அறிவுமயமாயிருப்பினும் அவ்வறிவு ஆன்மாவாகிய தனக்கு உபகாரமாயிருக்கும். ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றுஞ் சிவஞானம் எவ்வுயிருக்குமுபகாரமாய் கருணைவடிவாயிருக்கும். பசுவின் பாலினால் கன்று திருப்தியடைவதைக்கண்டு பசு, தானும் திருப்தி

படைவதுபோல, ஆன்மாவினிடத்து விளங்குஞ் சிவஞானத்தால் பிறஆன்மாக்களும் தானும் திருப்தியடையும். ஆதலால் பாலையுவமை கூறியதென்க. பால் பசுவினுடல்முழுவதும் விரவியிருப்பினும் முலைக்காம்பின் வழியாக வெளிப்பட்டுத்தோன்றுமாறுபோல, சிவஞானம் எல்லா ஆன்மாக்களிடத்தும் விரவியிருப்பினும் சிவஞானிகளிடத்து விளங்கித் தோன்றும்.

சிவத்தின் றன்மை எல்லாவுயிர்களிடத்தும் ஒருதன்மையாயிருக்குமென்று கூறாது சிவஞானத்தின்றன்மை எல்லாவுயிர்களிடத்து மொருதன்மையாயிருக்குமென்றும், ஆதலாற் சிவத்தினிடத்து சித்தத்தை வைக்கவேண்டுமென்றுங் கூறிய கருத்தென்னையெனின், சிவம் சத்தனும் ஞானம் சத்தியுமாகும். எவ்விடத்தும் வியாபிக்கும் தன்மை சத்திக்குரியது. சத்தி சத்தனிற் பிரிப்பின்றி நிற்கும். ஆதலால் சத்திக்கு வியாபகம்கூறவே சத்தனுக்கும் வியாபகம் கூறியதாகும். ஆயினும், வியாபிக்குந்தன்மை நேரேயிருத்தல் பற்றி சத்தியின்மேல் வைத்தும், அங்ஙனமாயினும் பற்றப்படுதற்கு குணிபுலனாகுமன்றி குணம் புலனாகாது ஆதலால் சிவத்தினிடத்து சித்தத்தைவைக்கவேண்டுமென்றும் கூறியவாறுமென்க. இது எதுபோலவெனின். சூரியனும் அதன் ஒளியும்போல சிவமும் அதன் சத்தியும்; சூரியன் ஒளி வியாபிக்குமாறுபோல சிவசத்தி வியாபிக்கும்; சூரியனொளி சூரியனையின்றித் தனித்து நில்லாதவாறுபோல சிவசத்தி சிவனையின்றித் தனித்து நில்லாது; கண்ணாற்பற்றப்படுவதற்குப் புலனாவது சூரியனேயாமாறுபோல உயிரால் பற்றப்படுவதற்குப் புலனாவது சிவமேயாகுமென்க.

சிவனால் வியாபிக்கப்படும் பொருள் சடமும் சித்துமென இருவகைப்படும். அவற்றுள், சடத்தில் வியாபகமாயிருத்தலையுணர்த்துதற்கு பெருவியாபகம் என்றும், உயிர்களினிடத்து வியாபகமாயிருத்தலை யுணர்த்துதற்கு சர்வதோமுகமா யென்றுங்கூறினர். ஆதலின் கூறியது கூறலன்மையுணர்க. பிரமன் முதலியோருக்கு தத்தம் எல்லையளவும் வியாபகம் உண்டு ஆதலின், அவ்வியாபகங்களின் மேம்பட்டவியாபகமென்ப துணர்த்துதற்கு பெருவியாபகமென்றார். பிரமம் சிவம் என்பன ஒருபொருட்சொற்கள்.

சிவனெனத் தானென வேற்றுமையின்றிச் சிவமாய்நிற்கு மந்நிலையினும் நிற்பவனுண்டென்ப துணர்த்துதற்கு அடங்கியிருப்பவன் மெய்ஞ்ஞானியென்றார். (24)

*சிவஞானி எந்த அவத்தையடைபினும் பந்தமுறானெனக் கூறுகின்றது.*

ஞானிக்குப் பொருடேட வேண்டுவதே யில்லை
நன்மையொடு தீமையில்லை விதிவேட மில்லை
மோனத்தே யிருந்தாலு மஃதினைவிட் டோன்றின்
முயற்சிபுரிந் தாலும்விழித் தாலுநினைத் தாலும்
போனத்தும் பானத்தும் சாக்கிரசோப் பனத்தும்
புகல்வாத சீதவெப்பு பாதிபே தத்தும்
ஏனைத்தார்த் திரியமச்சம் வியாதியினு மென்று
மேகாக்கிர சித்தத்தி லயித்திருப்ப னவனே.

(இ-ள்.) ஞானிக்குப் பொருள்தேட வேண்டுவதேயில்லை—சிவஞானிக்கு நிலைபேறில்லாத பொருள்கள் தேடவேண்டுவதேயில்லை,—நன்மையொடு தீமையில்லை விதிவேடமில்லை—நன்மையுடனே தீமையுமில்லை; இன்னது செய்யவேண்டும் இன்னது செய்யக்கூடாதென்ற விதியும், சமயத்திற்கும் நிலைக்கும் ஏற்ற வேடமும் இல்லை,—மோனத்தேயிருந்தாலும் அஃதினைவிட்டு ஒன்றின் முயற்சிபுரிந்தாலும்—ஞானநிட்டையுடையவராயிருப்பினும் அந்நிட்டையினின்றும் நீங்கி யாதாலுமொன்றில் முயற்சிசெய்யினும்,—விழித்தாலும் நினைத்தாலும்—நேத்திரத்தின் வழியாக உலகப்பொருள்களைப் பார்க்குங் காலத்தும் மனத்தின்வழியாக அப்பொருள்களை நினைக்குங் காலத்தும்,—போனத்தும் பானத்தும்—அன்னத்தையுண்ணுங் காலத்தும் தண்ணீரைக் குடிக்குங்காலத்தும்,—சாக்கிர சொப்பனத்தும்—சாக்கிர அவத்தையைப் பொருந்துங்காலத்தும் சொப்பன அவத்தையைப் பொருந்துங்காலத்தும்,—புகல்வாதசீத வெப்பு உபாதிபேதத்தும்—சொல்லாநின்ற வாதம் சிலேட்டுமம் பித்தமென்னும் மூன்றின்காரணமாக உண்டாகும் நோயின் பேதத்தைப் பொருந்துங் காலத்தும்,—ஏனைத்தார்த்திரியம் அச்சம் வியாதியினும்—இவையல்லாத வறுமைக்காலத்தும் அஞ்சத்தக்கதான உற்பாதங்கள் நிகழ்ந்தவிடத்தும் தொத்துவியாதிகள் பரவுங

காலத்தும்,—அவன் என்றும் ஏகாக்கிரசித்தத்தில் இலயித்திருப்பன்—அந்த ஞானி எப்பொழுதும் ஏகாக்கிரசித்தத்தில் இலயித்திருப்பன். (எ-று.)

(பொ-ரை.) சிவஞானிக்கு நிலைபேறில்லாத பொருள்கள் தேடவேண்டுவதேயில்லை. நன்மையுடனே தீமையுமில்லை. இன்னது செய்யவேண்டும் இன்னது செய்யக்கூடாதென்ற விதியும், சமயத்திற்கும் நிலைக்குமேற்ற வேடமும் இல்லை. ஞானநிட்டையையுடையராயிருப்பினும், அந்நிட்டையினின்றும் நீங்கி யாதானுமொன்றின் முயற்சிசெய்யினும், நேத்திரவழியாக உலகப்பொருள்களைப்பார்க்குங்காலத்தும், மனத்தின்வழியாக அப்பொருள்களை நிலைக்குங்காலத்தும், அன்னத்தையுண்ணுங் காலத்தும்; தண்ணீரைக் குடிக்குங்காலத்தும், சாக்கிர அவத்தையைப் பொருந்துங்காலத்தும், சொப்பனவத்தையைப் பொருந்துங்காலத்தும், சொல்லாநின்ற வாதம் சிலேட்டுமம் பித்தம் என்னும் மூன்றின்காரணமாக உண்டாகும் நோயின் பேதத்தைப் பொருந்துங்காலத்தும், இவையல்லாத வறுமைக்காலத்தும், அஞ்சத்தக்கதான உற்பாதங்கள் நிகழ்ந்தவிடத்தும், தொத்துவியாதிகள் பரவுங்காலத்தும், எப்பொழுதும் அந்த ஞானி ஏகாக்கிரசித்தத்தில் இலயித்திருப்பன். (ஏ-று.)

(க-ரை.) சிவஞானி நிட்டைசாதிக்கினும், அதனினீங்கிப் பிரவிருத்திசெய்யினும், நோய் முதலியவற்றைப் பொருந்தினும், எப்பொழுதும் ஏகாக்கிரசித்தத்தில் இலயித்திருப்பனென்பதாம்.

பொருள் இன்பத்திற்குக் காரணமாகும். ஆகவே, இன்பத்திற்குக் காரணமான பொருள் தன்னைவிட்டு நீங்குங்காலத்து அதனால் உண்டான இன்பமும் தன்னிடத்தி லில்லையாய்ப்போகும். ஆதலால், என்றும் நிலைபேறுடைய இன்பத்தை வேண்டின், என்றும் நிலைபேறுடைய பொருளைப் பெறல்வேண்டும். அது சிவபரம் பொருளேயாம். உயர்ந்த பொருளையடைந்த ஒருவன் தாழ்ந்த பொருளையடைய விரும்பாதவாறுபோல, நித்தியப்பொருளாகிய சிவபரம்பொருளைப்பெற்று நித்தியானந்தமாய சிவானந்தத்தைஅநுபவிக்கும் சிவஞானி, அநித்தியமாகு மின்பத்தைத்தரும் அநித்தியப் பொருளை நாடான் என்பதுணர்த்துதற்கு ஞானிக்குப் பொருள்தேடவேண்டுவதேயில்லை என்றார். ஏகாரம் தேற்றம்.

நன்மை தீமை முதலியன உறங்கினவன்கைப்பொருள்போல நழுவுமாதலின் இல்லை என்றார். இல்லையென்பதை நன்மை விதியென்ற இரண்டிடத்தும் கூட்டுக.

மோனம் என்பது, வாக்குமோனம் கரணமோனம் காட்டமோனம் சுழுத்திமோனம் என நான்குதிறப்படும். அவற்றுள், வாக்குமோனமாவது வாய்பேசாதிருத்தல், இருப்பினும் மனம் சும்மாயிராது. யாதானுமொன்றை நினைத்துக்கொண்டேயிருக்கும். கரணமோனமாவது, கண் ஒருபொருளைப் பாராதிருத்தலும் செவி ஒரு சொல்லைக் கேளாதிருத்தலு முதலிய இந்திரிய அடக்கம். இவ்வடக்கத்தினும் மனம் யாதானுமொன்றைப் பற்றிக்கொண்டு நிற்குமன்றிச் சும்மாயிராது. காட்டமோனமாவது, சரீரம் அசையாதிருத்தல். அப்பொழுதும், மனம் யாதானுமொன்றில் இலயித்திருக்கும். அந்த இலயத்தினின்றும் நீங்குங்காலத்து, சரீரமும் அசையும். ஆகவே, வாக்குமோனம் கரணமோனம் காட்டமோனம் என்ற மூன்று மோனங்களினும் மனம் சும்மாயிருத்தலில்லையென்பதுபெற்றாம். பெறவே, மோனம் என்னும் சொல்லுக்கு இவைகள் உண்மைப்பொருளுடையனவாகாவென்பது தானே விளங்கும். இனி, மோனம் என்னும் சொல்லுக்குரிய உண்மைப்பொருள்தான் யாதெனின், சும்மாயிருத்தல் என்பதேயாம். அது சுழுத்திமோனத்திற்றான் சித்திக்கும். சுழுத்திமோனமாவது, உயிர்ப்பொருள் உயிரில்லாப்பொருள் ஆகிய எல்லாப்பொருள்களும், எப்பொருளையின்றித் தனித்து நில்லாவோ, அப்பொருள் யாதெனவாராய்ந்து, அது சிவமெனக்கண்டு, அச்சிவப்பொருள் மற்றெல்லாப் பொருள்களினும் உள்ளும் புறம்பும் வியாபித்து நிற்பதெனவறிந்து, எல்லாம் சிவமேயாய்க்கண்டு, கண்டோமென்னும் போதமும் இறந்து நிற்கும் ஞானநிட்டையேயாம். இந்நிலையிற்றான் கரணங்களும் ஆன்மாவும் செயலற்றுச் சும்மாயிருத்தலென்பது சித்திக்கும். இக்கருத்துப்பற்றியே "மோனமென்பது ஞான வரம்பு" என்றார் ஔவைப்பிராட்டியாரும். என்பது என்றதனாலேயே சிறப்பித்துச் சொல்லப்படுவதென்றாகி, அங்ஙனம் சொல்லப்படாத வாக்கு மோனம் முதலிய மோனங்களுண்டென்பதுவும், ஞானவரம்பு என்றதனாலேயே வரம்புக்குட்பட்ட பசுஞான பாசஞானங்கள் உண்டென்

பதுவும் தானே விளங்கும். விளங்கவே, சிறப்பித்துச் சொல்லப் படுவதாகிய சுழுத்திமோனமே முடிவான சிவஞானமாகும் என் பது அம்மையார் கருத்தென்றுணர்ந்துகொள்க. இந்தச் சிவஞான நிட்டையினையுணர்த்துதற்கு மோனத்தேயிருந்தாலும் என்றார்.

வாத பித்த சிலேட்டுமநிலை வேறுபாட்டால் உண்டாகும் நோய்கள் துன்பத்திற்குக்காரணமாதல்போல, வறுமை முதலியன வும் துன்பத்திற்குக் காரணமாதலால், அவ்வொற்றுமை தோன்ற தார்த்திரியம் முதலியவற்றைக் கூறுமிடத்து ஏனையென்னும் இடைச்சொல் பெய்துவைத்தமையறிந்துகொள்க.

உற்பாதமாவது பூமியதிர்ச்சி, வானத்தில் நின்றும் மீன் விழு தல் முதலியன.

ஏகாக்கிரசித்தமாவது—முன்னர்ச் சிந்திக்கப்பட்டதொன்றனை, மறந்து பின்னர்ச்சிந்தியாமல், இடையறாது சிந்தித்தல். அங்ஙனம் சிந்திக்குங்காலத்தும், சிந்திப்பது, சிந்தனை, சிந்திக்கப்படுவதென் னும் பேதம் நிகழுமாதலின், சிந்திக்கின்றேமென்னும் போத முனைப்புமற்று, சிந்திக்கப்படும் பொருளாகவே நின்று சிந்திப்ப னென்பதுதோன்ற, ஏகாக்கிரசித்தத்திலயித்திருப்பவனே மெய்ஞ் ஞானியென்றார். இலயித்திருத்தலென்றதனால், முனைப்பற்று தான் உளனென்பதும், மெய்ஞ்ஞானியென்றதனால், சிவமாய் நின்று சிவ னைச் சிந்திப்பனென்பதுங் கொள்ளக்கிடந்தவாறு காண்க. இதனை யே "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்றுகூறிற்று சிவ ஞானபோதம் பதினொராஞ் சூத்திரம். (25)

சிவஞானி, என்றும் யான் எனது என்னும் தற்போதமற்றுச்
சிவமாயிருப்பனெனக் கூறுகின்றது.

பூதபௌ திகவர்த்த மானகா லத்தும்
புகலுமிலா பச்சேத மேவைவந்த விடத்துந்
தீதிலாத் தற்சொரூப பாவனையே பண்ணிச்
செய்கருமத் தின்கண்வரு சுகதுக்க மோக
மாதிகர்த் திருத்துவபோக் திருத்துவங்க ளியாவு
மான்மதன்ம மன்றுபுத்தி தன்மமேன வுணரா
ஓதுபிர கிருதியின்சம் பந்தமுற்று நீங்கி
யுபநிடதத் துண்மையுணர் பவனேமெய்ஞ் ஞானி.

(இ-ள்.) பூத பௌதிக வர்த்தமான காலத்தும்-இறந்தகாலம் வருங்காலம் நிகழ்காலங்களாகிய முக்காலத்தும்,— புகலும் இலாபச்சேதம் எவை வந்தவிடத்தும்-சொல்லாநின்ற இலாபம் சேதம் என்னும் எவைவந்தவிடத்தும்,— தீதிலாத் தற்சொரூப பாவனையே பண்ணி-குற்றமில்லாத சிவசொரூப பாவனையே செய்து,— செய்கருமத்தின்கண் வரு சுகதுக்கமோகம் ஆதிகர்த்திருத்துவ போக்திருத்துவங்கள் யாவும்-செய்யப்படும் தொழிலினிடமாக வருகின்ற சுக துக்க மோகங் காரணமாக உண்டாகும் யான் எனது என்னும் மயக்கங்கள் அனைத்தும்,—ஆன்மதன்மமன்று புத்திதன்மமெனவுணரா-ஆன்மாவின் தன்மமன்று புத்தியின் தன்மமென்றறிந்து,—ஓதுபிரகிருதியின் சம்பந்தம் முற்றும் நீங்கி-சொல்லாநின்ற பிரகிருதியின் காரியமான தூலசூக்கும தேகங்களின் பற்றுக்கோடு அறவேநீங்கி,—உபநிடதத்து உண்மையுணர்பவனே மெய்ஞ்ஞானி-வேதாந்தத்தின் உண்மைப்பொருளாகிய சிவசீவ ஐக்கியத்தையறிபவனே உண்மைஞானியாவன் (எ-று.)

(பொ-ரை.) இறந்தகாலம் வருங்காலம் நிகழ்காலங்களாகிய முக்காலத்தும், சொல்லாநின்ற இலாபம் சேதமென்னுமெவைவந்தவிடத்தும், குற்றமில்லாத சிவசொரூபபாவனையேசெய்து, செய்யப்படும் தொழிலினிடமாக வருகின்ற சுகதுக்க மோகங்காரணமாக உண்டாகும் யான் எனதென்னும் மயக்கங்கள் அனைத்தும் ஆன்மாவின்றன்மமன்று புத்தியின் தன்மமெனவறிந்து, சொல்லாநின்ற பிரகிருதியின்காரியமான தூல சூக்கும தேகங்களின் பற்றுக்கோடு அறவே நீங்கி, வேதாந்தத்தின் உண்மைப்பொருளாகிய சிவசீவ ஐக்கியத்தை அறிபவனே உண்மைஞானியாவன். (எ-று.)

(க-ரை.) சிவஞானி எக்காலத்தும் சுகதுக்க மோகங்களிற் கட்டுப்படாமல் சிவனையேயுணர்ந்து சிவமாயிருப்பனென்பதாம்.

தத் என்பது மகாவாக்கியம். அவ்வாக்கியத்தின் பொருள் அது என்பதேயாம். அது இது உது என்னும் வாக்கியங்கள், முறையே தூரத்திலுள்ள பொருளையும் பக்கத்திலுள்ள பொருளையும் இடைப்பட்ட பொருளையும் சுட்டும். சிவபெருமானுடைய தடத்தநிலை இது இது வென்று சுட்டப்படும் எல்லாப்பொருள்க

ளோடுங்கலந்து அதுவதுவாய் விளங்கினும், சொரூபநிலை அப் பொருள்களுக்கு அப்பாற்பட்டிருத்தலின், அந்நிலையை தத்என்று வேதாந்தங்கூறிற்று. வேதாந்தத்திற்கூறப்படும் ஏனைய பொருள் களைக் குறிக்கும் வாக்கியங்கள்போலாது மகத்தாகிய பொருளைக் குறிக்கும் இவ்வாக்கியம் மகாவாக்கியமென்றாயிற்று. இம்மகா வாக்கியப்பொருளைக்குறிப்பதற்கு தத் என்றமையும், அப்பொருள் இயல்பாகவே மலத்திற் கட்டுப்படாதது என்பதுணர்த்துதற்குத் தீதிலாமென்னும் அடையடுக்கவைத்தமையும் அறிந்துகொள்க.

பெற்றதுகொண்டு திருப்தியடையச் செய்யும் சாத்துவிக குணத்தாற் சுகமும், ஏதுபெறினும் திருப்தியடையாது மேலும் பெறுதலிலேயே பிரவிருத்திக்கச் செய்யும் இராசத குணத்தால் துக்கமும், சுகதுக்கங்கள் கன்மகாரணமாக வருவனவென்றறி யாது தன்னாலும் பிறராலும் வந்தனவென்றறிந்து சுகத்திலிறு மாத்தலையுந் துக்கத்தில் வருந்துதலையும் செய்யும் தாமதகுணத் தால் மோகமும் உண்டாகும். சுகமாகவும் துக்கமாகவும் மோகமா கவும் நிச்சயிப்பது புத்தியாதலின், இம்மூன்றும் புத்தியின் பரி ணாமமேயாம். ஆதலின், ஆன்மதன்மமன்று புத்திதன்மமென்றார். சுகதுக்கமோகம் புத்திதன்மமென்பது,

சித்தமா மவ்வியத்தம் சிந்தனை யதுவும் செய்யும்
புத்தியவ் வியத்திற் றோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்.

என்னும் அருணந்திசிவாசாரியார் திருவாக்கானுமறிக. (சிவ ஞானசித்தியார், இரண்டாம் சூத்திரம், செ-58.)

ஆன்மதத்துவம் இருபத்து நான்கு வித்தியாதத்துவம் ஏழு சிவதத்துவம் ஐந்து ஆக தத்துவம் முப்பத்தாறனுள், ஆன்மதத்து வம் இருபத்து நான்கும் தானெனப்பாவித்து அநுபவிக்கப்படுவன வாயிருக்கும். எவ்வாறெனின், கண் பார்த்ததை நான் பார்த்தேன் என்றும், மனம் நினைத்ததை நான் நினைத்தேன் என்றும் புத்தி நிச்சயித்ததை நான் நிச்சயித்தேன் என்றும் இவ்வாறே பிறவும் நிகழுமாற்றாற்கண்டுகொள்க. வித்தியாதத்துவம் ஏழும் அனுபவத்

திற்கு ஏதுவாயிருக்குமேயல்லது அநுபவிக்கப்படுவனவாயிரா. சிவதத்துவம் ஐந்தும் அவ்வித்தியாதத்துவங்களைப் போகத்திற் கேதுவாம் வண்ணம் செலுத்தும். ஆதலின் ஆன்மதத்துவம் போக்கிய காண்டமென்றும், வித்தியாதத்துவம் போககாண்டமென்றும், சிவதத்துவம் பிரேரககாண்டமென்றும் கூறப்படும். தானெனப்பாவித்து அநுபவிக்கப்படுவனவாயிருக்கும் ஆன்மதத்துவமும் அத்தத்துவமிருத்தற்காதாரமான தூலதேகமும் பிரகிருதியின் காரியமாதலின், அவற்றின் சம்பந்தம் முற்றும் நீங்கினாலன்றி, புத்தியின் பரிணாமமாகிய சுகதுக்கமோகங்கள் நீங்காவாதலின், அவை புத்திதன்மமெனவுணர்தற்கு, தேகத்தின் பற்றுக்கோடு நீங்கவேண்டுமென்பதுணர்த்துதற்குப் பிரகிருதியின் சம்பந்தம் முற்றும் நீங்கியெனவும், பிறிதொன்றைப்பற்றினாலன்றி முன்பற்றிய தொன்றை விடமுடியாதாதலின் தேகந்தானாயிருந்த பற்று நீங்குதற் பொருட்டு சிவம்தானாயிருத்தலிற் பற்றுச்செய்யவேண்டுமென்பதுணர்த்துதற்கு உபநிடதத்துண்மையுணர்பவன் என்றுங்கூறினார்.

மாயாவாதம் ஏகான்மவாதம் முதலியனவும் வேதாந்தமெனவழங்கப்பெறும். பெறினும், அவை பதி பசு பாசங்களின் நித்தத்தை யொப்புக்கொள்ளாமையின் போலிவேதாந்தமெனப்பெறும் என்பதூஉம், முப்பொருள்களின் நித்தத்தையொப்புக்கொள்ளுவதே உண்மையான வேதாந்தமென்பதூஉம், அவ்வுண்மை வேதாந்தத்தின் முடிபே சிவாகமமாகிய சித்தாந்தமென்பதூஉம், வேதாந்தத்தின் முடிபும் சிவாகமத்தின் முடிபும் ஒன்றே என்னும் இவ்வுண்மையுணர்வுடையாரே மெய்ஞ்ஞானியென்பதூஉம் உணர்த்துதற்கு, உபநிடதத்துண்மையுணர்பவனே மெய்ஞ்ஞானியென்றார். எனவே, வேதாந்தத்தின் உண்மையாகிய முப்பொருள்களின் நித்தத்தன்மையையறியாதார் உண்மையுணராதாரேயாவர் ஆகலின் அவர் மெய்ஞ்ஞானியாகார் என்றவாறாயிற்று. (26)

*சிவஞானி பஞ்சகிருத்தியத்துக்குட்படானென்று கூறுகின்றது.*

பிரமச்ச ரியவிரத மக்கினியின் வீழ்தல்
பிண்டோத கக்கிரியை பிரவிர்த்தி நிவிர்த்தி
புரியுமருச் சனைகள்வரை பாய்தல்சுழி பாய்தல்
புண்ணியங்கள் பாபங்கள் நியமமுப வாசம்

தெரிசீவன் முத்தருக்கு வேண்டுவதே யில்லை
சிவஞான வமிர்தபா னம்பண்ணிக் கொண்டு
பரசிருட்டி கருமத்தி னகப்படா தென்றும்
பரசிவனைப் போலவே நித்தனய் இருப்பன்.

(இ-ள்) பிரமச்சரியவிரதம்—பிரமசரிய முதலான விரதங்களும்,—அக்கினியின் வீழ்தல்—அக்கினியில் நிற்பதாகிய தவமும்,—பிண்டோதகக்கிரியை—பிண்டமிட்டு சலத்தால் தருப்பணஞ்செய்தலாகிய கிரியையும்,—பிரவிருத்தி நிவிருத்தி—உலக சம்பந்தமான முயற்சிசெய்தலும் அதனைச் செய்யாதொழிதலும்,—புரியும் அர்ச்சனைகள்—மேற்கொள்ளும் ஆராதனைகளும்,— வரைபாய்தல் சுழிபாய்தல்—மலையினின்று விழுதலும் நீர்ச்சுழியில் விழுதலும்,—புண்ணியங்கள் பாவங்கள்—புண்ணியச்செயல்களும் பாவச்செயல்களும்,—நியமம் உபவாசம்—நியமமாகச்செய்யப்படும் உபவாச விரதமும் ஆகிய இவைகள,— தெரிசீவன்முத்தருக்கு வேண்டுவதேயில்லை—தன்னைச்சிவனாகவே தெரிந்துகொண்டிருக்கும் சீவன்முத்தருக்கு வேண்டப்படுவனவல்ல,— சிவஞான அமிர்தபானம் பண்ணிக்கொண்டு பரசிருட்டி கருமத்து அகப்படாது என்றும் பரசிவனைப்போலவே நித்தனயிருப்பன்—சிவஞானமாகிய அமிர்தத்தைப் பருகிக்கொண்டு சிவபெருமான்றடத்தநிலையிற் செய்தருளும் சிருட்டி முதலிய கிருத்தியங்கட்கு உட்படாது எக்காலத்தும் அச்சிவபெருமானைப்போலவே நித்தனயிருப்பன். (எ-று.)

(பொ-ரை.) பிரமசரியமுதலான விரதங்களும், அக்கினியினிற்பதாகிய தவமும், பிண்டமிட்டு சலத்தால் தருப்பணஞ்செய்தலாகிய கிரியையும், உலகசம்பந்தமாகிய முயற்சிசெய்தலும், அதனைச் செய்யாதொழிதலும், மேற்கொள்ளுமாராதனைகளும், மலையினின்று விழுதலும், நீர்ச்சுழியில் விழுதலும், புண்ணியச்செயல்களும், பாவச்செயல்களும், நியமமாகச்செய்யப்படும் உபவாசவிரதமும் ஆகிய இவைகள் தன்னைச் சிவமாகவே தெரிந்துகொண்டிருக்கும் சீவன்முத்தருக்கு வேண்டப்படுவனவல்ல. சிவஞானமாகிய அமிர்தத்தைப்பருகிக்கொண்டு, சிவபெருமான்றடத்தநிலையிற்செய்தருளும் சிருட்டி முதலிய கிருத்தியங்களுக்கு உட்படாது, எக்காலத்தும் அச்சிவபெருமானைப்போலவே நித்தனயிருப்பன். (எ-று.)

(க-ரை.) சிவஞானி, சிவஞான அமிர்தபானம் பண்ணிக்கொண்டு பஞ்சகிருத்தியத்திற்குட்படாது சிவபெருமானைப்போலவே எக்காலத்தும் நித்தனாயிருப்பன் என்பதாம்.

வேண்டுவது என்னுமொருமை தனித்தனிசென்றியையும்.

ஏகாரம் தேற்றம்.

அமிர்தம் என்பது மிருத்துவினால் உண்டாகும் மரணத்தைத் தடுப்பது. ஆயினும், தேவாமிர்தம் என்றவிடத்து மக்கள்போலத் தேவர்கள் விரைவில் இறத்தலைத்தடுப்பதெனப் பொருள்படுமேயன்றி, என்றும் இறவா திருத்தலைச்செய்யும் எனப்பொருள்படாது. இறப்புண்டேற் பிறப்புண்டு. என்றும் பிறந்திறந்துழலாது நித்தனாயிருத்தலைச்செய்வது சிவஞானமேயாதலின், சிவஞானஅமிர்தபானம் பண்ணிக்கொண்டு பாசிருட்டிகருமத் தகப்படாதெனவும், பஞ்சகிருத்தியகருத்தாவாகிய பரமசிவன் அக்கிருத்தியங்கட்கு உட்படாது என்றும் ஒருதன்மையாய் விளங்குமாறுபோல, பரமசிவனேயாய் விளங்கும் சிவஞானியும் அவ்வாறே விளங்குவன் என்பதுணர்த்துதற்கும், பரமசிவனேயாய் விளங்கினும் அவன்செய்யுமைந்தொழில் தான்செய்தலில்லையென்பதுணர்த்துதற்கும், பரமசிவனேயாய் விளங்குதலாலுண்டாம் பயன் பரமசிவனைப்போல பஞ்சகிருத்தியத்திற் குட்படாது நித்தனாய் விளங்குதலேயென்பதுணர்த்துதற்கும், "பாசிருட்டிக்கருமத்து அகப்படாதென்றும் பாசிவனைப்போலவே நித்தனாயிருப்பன்" எனவும் கூறியவாறு காண்க.

சிவஞானம், அமிர்தம்போன்று பானம்பண்ணப்படுவதென்பது "திருமணியைத் தித்திக்கும் தேனைப்பாலைத் தீங்கரும்பினின் சுவையைத் தெளிந்ததேறற், குருமணியை" என்னும் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்காகிய திருவாரூர்த் திருத்தாண்டகத்தானும், "தேனேயமுதே கரும்பின்றெளிவே" யெனவும், "தேனைப் பாலைக் கன்னலின்றெளிவை ஒளியை தெளிந்தார்தம்—ஊனை உருக்கும் உடையானை" யெனவும், அருளிய மாணிக்கவாசகசுவாமிகள் திருவாக்கானும், "பாலுமமுதமுந் தேனுமாய் ஆனந்தந் தன்னுள்ளே பாலிப்பான்" என்னும் சேந்தனார் திருவாக்காகிய திரு

விசைப்பாவானும், "பாலுமமுதமும் ஒத்துநின்றானுக்கே" என்னும் திருப்பல்லாண்டானும் பிறவாற்றானும அறிக (27)

சீவன்முத்தனாய் விளங்கும் சிவஞானி பரமுத்தியடையும் முறைமையினை உவமைமுகத்தாற் கூறுகின்றது.

இந்தஞா னிக்குமுத்தான் மாவென்று பேரா
மிவனுக்குப் பிரகிருதி பந்தமிலை யிவன்றன்
பந்தமாம் பிரகிருதி துடைத்தேந்த ஞான்றும்
பற்றுதலை யடையானஃ தென்போல வென்னில்
அந்தகா ரத்தையொழித் தொளிர்தருதீ பத்தி
னஞ்ஞான விருடீயத் தற்சோரூபத் தொளிர்வன்
அந்தவெண்ணெய் நசிக்கலய மடைதருதீ பம்போ
லான்மவிருத் தியும்பரமுத் தியினிலய மடையும்.

(இ-ள்.) இந்த ஞானிக்கு முத்தான்மாவென்று பேராம்-இவ்வாறு கூறப்பட்ட சிவஞானிக்கு முத்தான்மாவென்றுபெயராகும்,-இவனுக்குப் பிரகிருதிபந்தமிலை-இந்தச்சீவன்முத்தனுக்குப் பிரகிருதியின் காரியமான தூல சூக்கும தேகங்களின் பந்தமில்லை,-இவன் பந்தமாம் பிரகிருதி துடைத்து எந்தஞான்றும் பற்றுதலையடையான்-சீவன்முத்தான்மாவாய் விளங்குமிவன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டிருந்த தூல சூக்கும தேகங்களை ஒழித்து எக்காலத்தும் அத்தேகங்களின் பற்றுதலைப் பொருந்தாத பரமுத்தியையடைவான்,—அஃதென்போலவென்னில்-அஃதெதுபோலுமென்னில்,—அந்தகாரத்தை ஒழித்து ஒளிர்தரு தீபத்தின்-இருளை ஒழித்து பிரகாசத்தைத் தருகின்ற தீபம்போல,—அஞ்ஞான இருள்துமிய தற்சொரூபத் தொளிர்வன்-அஞ்ஞானமாகிய இருள்கெட சிவசொரூபமாய்ப் பிரகாசிப்பன்,— அந்த எண்ணெய் நசிக்க லயமடைதரு தீபம்போல்-சுடர்விட்டுப் பிரகாசித்தற்கு ஏதுவாயிருந்த எண்ணெய் இல்லாதொழிய இலயமடைகின்ற தீபம்போல,—ஆன்மவிருத்தியும் பரமுத்தியினில் லயமடையும்-சீவன்முத்தநிலையில் இயங்கிக்கொண்டிருந்த ஆன்மவிருத்தியும் பரமுத்தியினில் ஒடுங்கிவிடும். (எ-று)

(பொ-ரை.) இவ்வாறு கூறப்பட்ட சிவஞானிக்கு முத்தான்மாவென்று பெயராகும். இந்தச்சீவன்முத்தனுக்குப் பிரகிருதியின்

காரியமான தூல சூக்கும தேகங்களின் பந்தமில்லை. சீவன் முத்தான்மாவாய் விளங்குமிவன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டிருந்த தூல சூக்கும தேகங்களை ஒழித்து, எக்காலத்தும் அத்தேகங்களின் பற்றுதலைப் பொருந்தாத பரமுத்தியையடைவான். அது எதுபோல வென்னில், இருளையொழித்துப் பிரகாசத்தைத்தருகின்ற தீபம்போல, அஞ்ஞானமாகிய இருள்கெடச் சிவசொரூபமாய்ப் பிரகாசிப்பன். சுடர்விட்டுப் பிரகாசித்தற்கு ஏதுவாயிருந்த எண்ணெய் இல்லாதொழிய இலயமடைகின்ற தீபம்போல, சீவன் முத்திநிலையில் இயங்கிக்கொண்டிருந்த ஆன்மவிருத்தியும் பரமுத்தியினில் ஒடுங்கிவிடும். (எ-று.)

(க-ரை.) எண்ணெய் திரி முதலிய உபகரணங்களால் பிரகாசித்துக்கொண்டிருந்த தீபம் அவ்வுபகரணங்கள் இல்லையாயொழியத்தானும் தனக்காதாரமாயுள்ள பூதத்தில் இலயமடைவதுபோல, தூல சூக்கும தேகங்களோடு கூடி நிற்றலால் இயங்கிக்கொண்டிருந்த சீவன்முத்தவிருத்தி அத்தேகங்கள் நீங்கியபொழுது தனக்காதாரமாகிய சிவபெருமானுடைய திருவருளில் இரண்டற லயமடையுமென்பதாம்.

இவன்றான் என்றவிடத்துத் தானென்றது அசை.

சீவன்முத்தநிலையில் தூல சூக்கும தேகங்களின் சம்பந்தம் அம்முத்தான்மாவுக்குண்டென்பதுவும், ஆயினும் அவற்றிற் கட்டுப்படானென்பதுவுமுணர்த்துதற்குப் பிரகிருதிபந்தமிலை எனவும், பரமுத்தியில் தூல சூக்கும தேகங்கள் இல்லையாயொழிந்துவிடுமென்பதுணர்த்துதற்குப் பந்தமாம் பிரகிருதி துடைத்து எனவும், தேகமில்லாத கேவல நிலையில்நின்ற இவனுக்குப் பின்னர்த் தேகம் வந்தவாறுபோல தேகமில்லாத இப்பரமுத்தி நிலையையடைந்த பின்னரும் தேகம் வருமோவென்னு மையத்தை நீக்கித் தேகம் வாராதென்பதுணர்த்துதற்கு எஞ்ஞான்றும் பற்றுதலையடையான் எனவுங்கூறினர்.

தேகத்தோடு கூடியுள்ள சீவன்முத்தநிலையில் தேகசம்பந்தமான பந்தமில்லாமைக்கு எண்ணெய் திரியோடுகூடிச் சுடர்விட்டெரியும் நிலையில் அவ்வெண்ணெய் திரிகளினால் அச்சுடர் பந்தப்

படாமையை உவமையாகவும், தேகமில்லாத பரமுத்திநிலையில் ஆன்மவிருத்தி சிவபெருமான்றிருவருளோடு இலயமாய்விடுதற்கு எண்ணெய் திரிகள் இல்லாதநிலையில் அவற்றோடு கூடிநின்ற சுடர் மகாபூதத்தில் இலயமாதலை உவமையாகவும் கூறினமை காண்க.

ஆகாயம் வாயு அக்கினி என்னும் மூன்றின் அம்சங்களை உடையது சுடர். இச்சுடர், தான் பிரகாசிப்பதற்கு ஏதுவாய் நின்ற எண்ணெய் திரியில்லாதவிடத்து ஆகாசத்தின் அம்சம் ஆகாசத்தினும் வாயுவினம்சம் வாயுவினும் அக்கினியினம்சம் அக்கினியினும் ஒடுங்க லயமடையும்.

சீவன்முத்தி என்பது தேகத்துடனிருந்தும் சீவத்தன்மையில்லையாய் விடுதல். பரமுத்தி என்பது பரனைச்சார்ந்து அனைத்தும் விடுதல். (28)

பரமுத்திநிலையை உவமை முகத்தால் விளக்குகின்றது.

கடத்திருக்கு மாகாயம் போலச்சீ வான்மா
கருதுமகா காயம்போற் பரமான்மா விருக்கும்
கடத்திருக்கு மாகாயங் கடமுடைந்தான் முன்னர்க்
கருதுமகா காயமா நிறைந்துநின்றற் போலத்
திடத்தினுறு பிரகிருதி சம்பந்த மாய
தேகவுபா திகண்முழுது நீங்கியபோ தந்தச்
சடத்தமர்சீ வான்மாவே பரமான்மா வாகுஞ்
சர்வஞ்ஞ ஞமெம்மாற் சோலப்பட்ட திதுவே.

(இ-ள்.) கடத்திருக்குமாகாயம் போலச் சீவான்மா—கடத்தால் வளையப்பட்டிருக்கும் ஆகாயம்போலச் (சரீரத்தாற் கட்டுப்பட்டிருப்பது) சீவான்மாவாகும்,—கருது மகாகாயம் போல் பரமான்மாவிருக்கும்—கருதி யுணரப்படுகின்ற மகாகாயம்போலப் பரமான்மா விருக்கும்,—கடமுடைந்தால் கடத்திருக்கு மாகாயம் முன்னர் கருதுமகாகாயமா (க]·நிறைந்து நின்றற்போல—கடமுடைந்தவிடத்துக் கடத்தின்கண் இருக்கும் ஆகாயம் கடத்தோற்றத்திற்கு முன்னர் அவ்விடத்துக் கருதி யுணரப்படுவதாய் தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் மகாகாயமாக நிறைந்து ஒற்றுமை

ப்பட்டுநின்றவாறுபோல,—திடத்தினுறு பிரகிருதி சம்பந்தமாய தேகவுபாதிகள் முழுதும் நீங்கியபோது அந்த சடத்து அமர்சிவான்மாவே (முன்னர்கருது) பரமான்மாவாகும்—ஆணவமலங் காரணமாகப் பொருந்திய பிரகிருதியின் சம்பந்தமான தேகவுபாதிகள் முற்றும் அறவே நீங்கியவிடத்து அந்தத்தேகத்தின் கண்ணே பொருந்திநின்ற சீவான்மாவே அநாதியே தன்னோடு பிரிப்பின்றி நிற்பது எனக்கருதி யுணரப்படும் பரமான்மாவாய் ஒற்றுமைப் பட்டு நிற்கும்,—இது சர்வஞ்ஞ மெம்மால் சொலப்பட்டதுவே—(சகலாகமசாரமான) இம்முடிவு சர்வஞ்ஞனுகிய எம்மாற் சொல் லப்பட்டதுவேயாம். (எ-று)

(பொ-ரை) கடத்தால் வளையப்பட்டிருக்கும் ஆகாயம்போலச் சரீரத்தாற் கட்டுப்பட்டிருப்பது சீவான்மாவாகும். கருதியுணரப் படுகின்றமகாகாயம்போலப்பரமான்மாவிருக்கும். கடமுடைந்தவிடத்துக் கடத்தின் கண்ணிருக்குமாகாயம் கடத்தோற்றத்திற்குமுன்னர் அவ்விடத்துக்கருதி யுணரப்படுவதாய்த் தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் மகாகாயமாக நிறைந்து ஒற்றுமைப்பட்டுநின்றவாறுபோல, ஆணவமலங்காரணமாகப் பொருந்திய பிரகிருதியின் சம்பந்தமான தேகவுபாதிகள் முற்றும் அறவே நீங்கியவிடத்து அந்தத்தேகத் தின்கண்ணே பொருந்திநின்ற சீவான்மாவே, அநாதியே தன்னோடு பிரிப்பின்றி நிற்பது எனக்கருதியுணரப்படும் பரமான்மாவாய் ஒற் றுமைப்பட்டு நிற்கும். சகலாகமசாரமான இம்முடிவு சர்வஞ்ஞனு கிய எம்மாற் சொல்லப்பட்டதுவேயாம். (எ-று)

(க-ரை.) கடாகாயமும் மகாகாயமும் கடமுடைந்த விடத்து ஒற்றுமைப்பட்டு நிற்குமாறுபோல, தேகவுபாதிகள் நீங்கிய பரமுத்தியில் சீவான்மாவும் பரமான்மாவும் ஒற்றுமைப்பட்டு நிற்குமென்பதாம்.

முன்னர்க்கருதும் என்னும் உவமையடை பொருளினும் சென்றியையும்.

ஆகவென்பது கடைக்குறைந்து நின்றது.

ஆகாயம் கண்ணுக்குப்புலப்படாது மனத்துக்குப் புலப்படுவதொன்றாகலின் கருது மகாகாயம் என்றார்.

கடத்தால் வளைபட்டுக் கடாகாயமென விளங்கப்படுவதற்கு முன்னர் அவ்விடத்துக்கருதி புணரப்படுவதாயுள்ள ஆகாயம் மகாகாயமேயாமென்பதுணர்த்துதற்கும், கடமுடைந்தவிடத்து கடாகாயம் அம்மகாகாயத்தோடு பிரிப்பின்றி நிற்குமென்பதுணர்த்துதற்கும் முன்னர்க்கருதுமகாகாயமாய் நிறைந்து நின்றாற்போலென்றார்.

இவ்வுவமையினால் ஆகாயமொன்றாயிருந்து கடவுபாதியால் கடகாயமென்று வழங்கப்பட்டு, அவ்வுபாதி நீங்கியவிடத்து ஒன்றாகிய மகாகாயமே இருப்பதுபோல, பரமான்மாவொன்றே, தேகவுபாதியால் சீவான்மாவெனப் பெயர்பெற்று நின்று, அவ்வுபாதி நீங்கியவிடத்து ஒன்றாகிய பரமான்மாவே யிருக்குமென்பர் ஏகான்மவாதிகள். ஒரு வாக்கியத்திற்குப் பொருள்கொள்ளுங்காலத்து முன்னொடுபின் முரணாதுகொள்ளல்வேண்டும். ஆசிரியர்கள் சில விஷயங்களில் ஒருவரோடு ஒருவர் மாறுபட்டிருத்தல் கூடும். ஒரே ஆசிரியர் முன்னொடுபின் முரண்பட எக்காலத்துங் கூறார். ஒரே ஆசிரியருடைய வாக்கியம் முன்னொடுபின் முரணுவதுபோல் காணப்படின், முன்னே, சொன்னதின் தாற்பரியம் இது; பின்னே சொன்னதன் தாற்பரியம் இதுவென ஊகித்து முரணின்மையை யறியவேண்டும். இவ்விடத்துத்தான் உத்தியின் செயல் உபயோகம். நூலொடு பொருந்தாத உத்தி குயுக்தி எனப்படும். இந்நூலில்மேல் இரண்டாவது செய்யுளில் பசுவாவது என்று தொடங்கி சின்மாத்திரன் மலதூஷிதன் என்பனவாதிய இலக்கணமுகத்தால் பசுவுண்மைகூறி "அசையாத சிவத்துவம் சேதனவான்மாவிடத்தில் அநாதியே மலத்தடையாம்" எனவும் கூறினார். கூறவே, சிவமும் ஆன்மாவுமென இருபொருள்கள் அநாதியே உண்டென்பதுவும், அவ்விருபொருள்களும் அநாதியே அத்துவிதமாய்க் கலந்து நிற்குமென்பதுவும், கலந்து நிற்பினும் சிவத்தின்றன்மை ஆன்மாவினிடத்து விளங்கித்தோன்றவொட்டாமற் செய்யும் மலத்தின்றடையும் அநாதியே உண்டென்பதுவும் பெறப்படும். படவே, பதி பசுபாசம் என்னும் முப்பொருள்களும் அநாதியென்பதுவும், அநாதிக்கு உற்பத்தியின்மையின் உற்பத்தியில்லாத பொருள் நாசமாகாதெனப்பட்டு நித்தமென்பதுவும் நன்குபுலப்படும். அங்ஙனமாகவும், அதற்குமாறாக இவ்விடத்து ஒரு பொருள்தான்

உண்டென்று முரண்படக்கூறுவரா? கூறாரெனக் கடைப்பிடிக்க.

அங்ஙனமாயின், இங்கே கூறியகடாகாய மகாகாய வுவமையின் கருத்தென்னையெனின், பரமுத்தி நிலையில் சீவான்மா பரமான்மாவோடு ஒற்றுமைப்படச்சேர்தல் மாத்திரைக்குக் கூறிய ஒருபுடைவுவமையாதலின், அவ்வளவே கருத்தென்க. ஒற்றுமைப்படச்சேர்தன் மாத்திரையான அவ்வளவே கருத்தென்பது, கடத்திருக்கு மாகாயம்போலச் சீவான்மா கருதுமகாகாயம்போல் பரமான்மாவிருக்கும் என்றமையால் வலியுறுத்தப்படும். எவ்வாறெனின், மகாகாயம்போலப் பரமான்மா; அதுவே கடத்தில் வளைபட்டபோது கடாகாயமாதல்போலச் சீவான்மாவெனக்கூறாது, கடத்தால் வளைபட்டிருக்கும் நிலையும் வளைபடாத நிலையுமாகிய இருநிலைகளின் உண்மையில் வைத்துக்கூறியதனால், சீவான்மா பரமான்மாவென இருபொருள்கள் அநாதிநித்தமாய் உண்டெனக்கொண்டாரென்பது நன்கு புலனாம். புலனாகவே, ஒற்றுமைப்படச்சேர்தற்குமட்டும் கூறிய ஒருபுடை உவமை யென்பது வலியுறுத்தப்படுமாறு காண்க. இன்னும் கடத்திருக்கு மாகாயம்போலச் சீவான்மா கருது மகாகாயம்போல் பரமான்மாவிருக்கும் என்றதனானும் இருபொருள்களும் நித்தமெனக்கொண்டு ஒருபுடை யுவமையாகக் கூறினார் என்பது நன்கு விளங்கும். இருக்கும் என்பது மேலும் சென்றியையும். இம்மட்டோ கடத்திருக்குமாகாயம், கருதுமகாகாயமாக நிறைந்து நின்றாற்போல என்றதனாலும் ஒரு புடையுவமை என்பது ஐயவிபரீதக் குற்றமின்றி யுணரப்படும். எவ்வாறெனின், கடத்திருத்தலால் கடாகாயமெனப்படும் மகாகாயமே, கடமுடைந்தவிடத்து தானாய் நிறைந்து நின்றாற்போல என்னாது கடத்தால் வளைபட்டு ஏகதேசமாய் நின்ற ஆகாயமே மகாகாயத்தோடுகூடி மகாகாயமாக நிறைந்து நின்றாற்போல வெனக்கூறியவாற்றாலென்க. பரமான்மாவாகும் என்று பாடமோதினும் அது மேலுஞ்சென்றியைந்து ஒரு புடையுவமையாதற் கிழுக்கில்லை.

இனி முற்றுவமையாகக்கொள்ளின், மகாகாயம் கடத்தில் வளைபடுதற்குக் கடத்தை ஒருவன் செய்துதரல்வேண்டுவதுபோல, பரமான்மா தேகவுபாதியில் கட்டுப்படுதற்கு தேகத்தைச் செய்து தருதற்பொருட்டு வேறொருவன் வேண்டப்படும். படவே, அத

ணச செய்துகொள்ள முடியாத அது பரமான்மாவெனபபடாது. தானே செய்துகொண்டதெனின், மகாகாயமே குடத்தைச்செய்து கொள்ளல்வேண்டும். அவ்வாறின்மையின் முற்றுவமையாதல் செல்லாமையறிக.

ஆகாயம் சடமாதலின் கடத்தைச்செய்துகொள்ளாது; பரமான்மா சித்தாதலின் தேகவுபாதிகளைத் தானே செய்துகொள்ளுமெனின், அங்ஙனமாயினும் நின்கூற்றானே முற்றுவமையாதலில்லை யென்பது இனிதுபுலனும்.

அன்றியும், சுத்தமாயிருந்த பரமான்மா அசுத்தமான தேகவுபாதிகளை எதற்காகச்செய்து எப்பொழுது கூடிற்று? விளையாட்டாகச்செய்து அநாதியே கூடியிருந்ததெனின், அநாதியே அழுக்குடைய அது சீவான்மாவாகுமன்றி பரமான்மாவாகுமா? விளையாட்டாக முன்னர்ச் செய்துகூடியவாறுபோலவே இனி நீங்கிய பின்னரும் அவ்வாறுசெய்து கூடுமென்றாகி நீங்குதற்கான செயல்களெல்லாம் வீண்செயல்களாயன்றோ முடியும்! ஆதலின், கடாகாய மகாகாயவுவமை முற்றுவமையாதல் எவ்வாற்றானும் செல்லாமை காண்க.

உவமைகளெல்லாம், வினை பயன் வடிவு நிறம் என்னும் நான்கனுள் ஒவ்வொன்றுபற்றியே கூறப்படும் என்பதுவும், அவற்றினிலக்கணமும், இக்கடாகாய மகாகாய வுவமை வடிவுபற்றி வந்ததென்பதுவும் அறிந்திருப்பராயின், முற்றுவமையாகக்கொண்டு இடர்ப்பட்டு மயங்காரென்க.

ஆணவமலம், அறிவிச்சை செயல்களையுடைய ஆன்மாக்களுக்கு அவற்றின்றொழிற்பாடு சிறிதும் நிகழவொட்டாது அநாதியே தடைசெய்து நிற்கும் வலிமையுடைமையால் அதனைத்திடமெனவும், அதன் மறைப்புக்காரணமாக வருந்துமுயிர்கள் அம்மறைப்பு நீங்கி இன்புறுதற்பொருட்டு மாயையினின்றும் தநுகரணாதிகளை இறைவன்றருதலால் திடத்தினுநுசம்பந்தமாய தேகம் எனவும், ஆன்மாவின்சாதி சித்து ஆதலின் தேகம் ஆன்மாவிற்குபாதியென்பது துணர்த்துதற்கு தேகவுபாதிகளெனவும், சீவன் முத்திநிலையில் இவ்வுபாதிகள் ஆன்மாவினறிவினின்று நீங்கினும் அவ்வுபாதிகளின் சம்பந்தம் நீங்காது; அதுபோலன்றி, பரமுத்தி

நிலையில் அவ்வுபாதிகளின் சம்பந்தம் அறவே நீங்குமெனப துணர்த்துதற்கு முழுதும் நீங்கியபோதெனவும், ஆன்மாவிற்குச் சார்ந்ததன்வண்ணமாந் தன்மையுண்மையின் தேகத்தோடுகூடிச் சீவான்மாவாய் நின்றவதுவே பரமான்மாவோடு கூடினவிடத்து அப்பரமான்மாவாய் நிற்றற்கிழுக்கில்லை என்பதுணர்த்துதற்கு சீவான்மாவே பரமான்மாவாகுமெனவும், சகல ஆகமங்களின் சாரம் இதுவென்பதுணர்த்துதற்கு "சர்வஞ்ஞனமெம்மாற் சொலப்பட்டதிதுவே, எனவும் கூறினமைகாண்க.

சாதியென்பது ஒருபொருளின் இயற்கைத்தன்மை. உபாதி என்பது ஒரு பொருளின் செயற்கைத்தன்மை. இயற்கைத்தன்மையென்பது ஒரு பொருளுக்கு இயல்பாயுள்ளதன்மை. செயற்கைத்தன்மையென்பது ஒரு பொருளுக்கு செய்துகொள்ளுதலா லுள்ள தன்மை. இயல்பாயுள்ளதன்மை என்றும் உள்ளதாகும். செய்துகொள்ளுதலால் உள்ளதன்மை இடையே வந்து கூடினதாகும். என்றுமுள்ளது நீங்காது. இடையே வந்துகூடினது நீங்கும். இடையே வந்துகூடின செயற்கையுள்ள விடத்தும் இயற்கை விளங்கித்தோன்றுதலில்லையயன்றி நீங்குதலில்லை. செயற்கை நீங்கினபொழுது இயற்கைவிளங்கித்தோன்றும். எதுபோலுமெனின், ஒருவன் பலவேடங்கொள்ளுதல் செயற்கை. அங்ஙனம்கொள்ளுங்காலத்து அவனுடைய இயற்கைத்தன்மை விளங்கித்தோன்றுதல் இல்லையயன்றி நீங்குதலில்லை. கொண்ட வேடங்கள் நீங்கியபொழுது இயற்கைத்தன்மை விளங்கித்தோன்றுதல்போலுமென்க. இவ்வாறே சீவான்மாவிற்கு இயற்கைத் தன்மை எக்காலத்தும் பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றல். செயற்கைத்தன்மை தேகவுபாதிகளுடன்கூடி நிற்றல். இவ்வுபாதி அநாதியே கூடியுள்ள ஆணவமலநீக்கங்காரணமாக இடையே வந்துகூடினது. இத்தேகவுபாதியோடுகூடி நிற்குங்காலத்தும் பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றல் விளங்கித்தோன்றுதலில்லையயன்றி நீங்குதலில்லை. தேகவுபாதிகள்முற்றும் நீங்கியபொழுது பரமான்மாவோடு பிரிப்பின்றிநிற்றல் விளங்கித்தோன்றும். இவ்வளவேயன்றிப் புதிதாகப் பரமான்மாவாதலில்லையென்பது உணர்ந்துகொள்க.

இவ்வாறு இடையேவந்துகூடியது செயற்கையென்பது பெறப்படவே, சீவான்மாவோடு அநாதியே கூடியுள்ளது ஆணவமலமாதலின், அது இயற்கையெனப்படல்வேண்டும். வேண்டவே, எக்காலத்தும் ஆணவமலம் நீங்குமாறில்லை என்பது பெறப்படுமேயெனின், அங்ஙனமன்று. என்னை, ஒருபொருள் தன்னோடு ஒத்தசாதிப்பொருளோடுதான் பிரிப்பின்றி நிற்றல்கூடும். வேற்றுச்சாதிப்பொருளோடு பிரிப்பின்றி நிற்றல்கூடாது. எதுபோலவெனின், ஆற்றுநீர் தன்னோடு ஒத்தசாதிப்பொருளாகிய கடல்நீரோடு பிரிப்பின்றி நிற்கும். வேற்றுச்சாதிப்பொருளாகிய உப்புடன் பிரிப்பின்றி நிற்பதில்லை. அது நீரில்நின்றும் உப்புப்பிரிக்கப்படுதலாலறியப்படும். ஆயினும் நீரோடு உப்பைக்கூட்டி உப்புக்கடலாக இடையே ஒருவரால் ஆக்கப்படாமையின், கடல்நீருக்கும் உப்புக்குமுள்ள சம்பந்தம் அநாதிசெயற்கை. அந்நீருக்கும் வெளிக்குமுள்ள சம்பந்தம் தாதான்மியம். தாதான்மியமாவது இருபொருள்கள் பிரிக்கமுடியாது கலந்து நிற்றல். இவ்வாறே சீவான்மா தன்னோடுஒத்த சித்துச்சாதிப்பொருளாகிய பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றல் இயற்கை. வேற்றுச்சாதிப்பொருளாகிய சடமென்னும் ஆணவமலத்தோடுகூடி நிற்றல் அநாதிசெயற்கை. ஆதலின் முத்திக்காலத்து ஆணவமலம் நீங்குதற்கிழுக்கில்லை என்பதுணர்ந்துகொள்க. அநாதியே செயற்கையாயிருந்து பின்னர் நீங்குமென்பதற்கு நெல்லினிடத்து உமி அநாதிசெயற்கையாயிருந்து நீங்குவதும், செம்பினிடத்துக் களிம்பு அநாதிசெயற்கையாயிருந்து நீங்குவதும் உவமைகளாகும். இது மேலுங்காட்டப்பட்டது.

சீவனும் சிவமும் சித்தென்னும் சாதிப்பொதுமையால ஒத்தனவென்ப துணர்த்துதற்கு சீவான்மா பரமான்மாவெனஈரிடத்தும் ஆன்மாவென்னும்சொல்லைப் புணர்த்திக்கூறினமைகாண்க.

இச்செய்யுளாற் கூறிமுடித்த பொருளென்னையோவெனின், கடாகாயமும் மகாகாயமும் ஆகாயம் என்னும் சாதிப்பொதுமையால் ஒன்றுபவாறுபோல, சீவான்மாவும் பரமான்மாவும் சித்து என்னும் சாதிப் பொதுமையால் ஒன்றென்பதூஉம், ஆயினும

மகாகாயம் பற்றின்றியும் கடாகாயம் கடத்தைப்பற்றியும் நிற்கு மாறுபோல, பரமான்மாஒன்றினும் தோய்வின்றிச் சுயம்பிரகாச மாயும் சீவான்மா யாதானுமொன்றைப்பற்றி அதன்மயமாயும் நிற்கும் என்பதுவும், கடமுடைந்தபின்னர்க் கடாகாயம் மகாகாய மாய் ஒன்றுபட்டுநிற்குமாறுபோல தேகவுபாதிகள் நீங்கியபின்னர் பரமுத்தியில் சீவான்மாவிற்கு வேறு பற்றுக்கோடின்மையின் அது பரமான்மாவோடு ஒன்றுபட்டுநிற்குமென்பதுவுமாமென்க. (29)

இம்முடிபு சகலாகமசாரமாதலின் இதனையே கடைப்பிடிக்கவேண்டுமெனக் கூறுகின்றது.

இந்தவண்ணம் யாதோருவ னறிகின்ற னவனே
நாமவனே சர்வக்ஞ ஞனபூ ரணனும்
முந்தியதத் துவசாலம் வித்தார மாக
மோழியாக மங்களுறீஇச் சாரச்சா ரத்தின்
இந்தவா கமத்துரைத்த யோகத்தைத் தேர்ந்தே
யிதற்குமே லறிபோருள்வே றில்லையெனத் தேளிந்தே
சிந்தைவிகற் பங்களேலாம் போய்க்காயங் கழிந்தாற்
சிவசுபா வந்தனது சுபாவமா யிருப்பன்.

(இ-ள்.) இந்தவண்ணம் யாதொருவ னறிகின்றன்—இவ்வாக மத்திற்கூறியவாறு எவனொருவனறிகின்றனே,— அவனே நாம்— அவனே நாமாகும்,— அவனே சர்வக்ஞன பூரணனும்—அவனே முற்றுணர்வுடைய பூரணனுமாம்,— தத்துவசாலம் வித்தாரமாக மொழிமுந்திய வாகமங்கள் உறீஇ—தத்துவக்கூட்டங்களின்தோற்ற வொடுக்கங்களைப்பற்றி விரிவாகச்சொல்லுகின்ற முந்திய ஆகமங்க ளிலுள்ள,— சாரச்சாரத்தின் இந்த ஆகமத்து உரைத்த யோகத் தைத்தேர்ந்து—சாரத்தின் சாரமாக இந்த ஆகமத்தின்கண்ணே சொல்லப்பட்ட யோகத்தைத்தேர்ந்து,—இதற்குமேல் அறிபொ ருள் வேறில்லையெனத் தெளிந்து—சீவான்மா பரமான்மாவோடு ஐக்கியமாதலைக்கூறும் இப்பொருளுக்குமேல் அறியப்படவேண்டி யதான பொருள் வேறொன்றில்லையெனத்தெளிந்து,—சிந்தைவிகற் பங்கள் எல்லாம்போய்—மனத்தின்கண் உள்ள சங்கற்ப விகற்பங்க ளெல்லாம் அறவே நீங்கி,—காயம் கழிந்தால்—ஊழின்பயனையனுப

வித்துக்கொண்டிருந்த உடல் கழிந்தவிடத்து,—சிவசுபாவம் தனது சுபாவமாயிருப்பன்—சிவத்தின் சுபாவமே தனதுசுவானுபவமாகவாழ்வன். (எ-று.)

(பொ-ரை) இவ்வாகமத்திற் கூறியவாறு எவனொருவனறிகின்றானோ அவனே நாமாகும். அவனே முற்றுணர்வுடைய பூரணனாகும். தத்துவக்கூட்டங்களின் தோற்றவொடுக்கங்களைப்பற்றி விரிவாகச்சொல்லுகின்ற முந்திய ஆகமங்களிலுள்ள சாரத்தின் சாரமாக இந்த ஆகமத்தின்கண்ணே சொல்லப்பட்ட யோகத்தைத் தேர்ந்து, சீவான்மா பரமான்மாவோடு ஐக்கியமாதலைக்கூறும் இப்பொருளுக்குமேல் அறியப்படவேண்டியதான பொருள் வேறொன்றில்லையெனத்தெளிந்து, மனத்தின்கண்ணுள்ள சங்கற்ப விகற்பங்களெல்லாம் அறவே நீங்கி, ஊழின்பயனை அனுபவித்துக்கொண்டிருந்த உடல் கழிந்தவிடத்து, சிவத்தின்சுபாவமே தனதுசுவானுபவமாக வாழ்வன். (எ-று.)

(க-ரை.) சகலாகம சாரமான இவ்வாகமத்துட் கூறப்படும் சீவபரஐக்கியத்தைத்தேர்ந்து தெளிந்தவன் சிவமாக வாழ்வனென்பதாம்.

ஆன்மாவின்றன்மை சார்ந்ததன்வண்ணமாதலின் முற்றுணர்வுடைய பூரணனைச்சார்ந்தவிடத்து அவ்வாறாதற்கிழுக்கில்லை என்பதுணர்த்துதற்கு அவனேநாம் அவனே சர்வஞ்ஞன பூரணனும் என்றார். இதன்கட்படும் கடாவிடைகளெல்லாம் மேல் இரண்டாவது செய்யுளினும் பதினான்காவது செய்யுளினுங் கூறப்பட்டிருத்தலின் அவ்விடங்களிற்காண்க. சமயங்களும் சமயசாத்திரங்களும் பலவாதலின், அவற்றுள் அங்கமிது அங்கியிதுவென நிர்ணயிக்கப் புகுவார்க்குத் தத்துவங்களேயாதாரமாகும். ஆகவே, தத்துவங்களின்வைத்தே மதமும் மறுப்பும் நிர்ணயிக்கப்படுமென்றவாறாயிற்று. இதனை,

"ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவ
மாகின்ற நாலேழ் வேதாந்தி வைணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமா யாவாதிக்கே"

என்னும் திருமந்திரத்தானும் அறிக.

பௌட்கரம் மிருகேந்திரமுதலிய ஆகமங்கட்குச் சுபக்கமாகிய சித்தாந்தப்பொருளைப் பொதுவையாகக்கூறிவைத்துப் பலவாற்றானும் பரபக்கங்களாகிய புறச்சமயங்களின் கொள்கைகளை மறுப்பதே கருத்தென்பதுணர்த்துதற்கு தத்துவசாலம் வித்தாரமாக மொழியாகமம் எனவும், சித்தாந்தப்பொருளையே சிறப்புவகையால் தனித்தெடுத்துக்கூறுவது இவ்வாகமமாதலின் சிறப்பை நோக்கப் பொது முன்னருளியதென்பதுணர்த்துதற்கு முந்திய ஆகமங்கள் எனவும், அவ்வாகமங்களின்சாரம் பதிபசுபாசங்கள் மூன்றும் அநாதிநித்தம் என்பதும், அவை முறையே வியாபக வியாப்பிய வியாத்தியாம் என்பதும், அச்சாரத்தின்சாரம் சீவான்மா மலத்தடையினின்றும் நீங்கிப் பரமான்மாவோடு என்றும் பிரிப்பின்றி நிற்றலையுணர்ந்து பரமான்மாவாக நிற்றலென்பதும், சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றிநிற்றலே சிவயோகம் எனப்படுமென்பதும் உணர்த்துதற்கு சாரச்சாரத்தின் இந்த ஆகமத்துரைத்தயோகமெனவும், சிவன்நானெனப் பழகவேண்டுமென்பதுணர்த்துதற்கு யோகத்தைத்தேர்ந்து எனவும், அப்பழக்கமுதிர்ச்சியால் நிட்டை சாதித்தல் கூடுமென்பதுணர்த்துதற்குத்தெளிந்து எனவும், இவ்வநுபவம் சீவன்முத்திநிலை பரமுத்திநிலையென இருதிறப்படுமாதலின் அவற்றுள் சீவன்முத்திநிலை இதுவென்பதுணர்த்துதற்குச் சிந்தைவிகற்பங்களெலாம்போய் எனவும், பரமுத்திநிலை இதுவென்பதுணர்த்துதற்குக் காயம் கழிந்தால் எனவும்கூறினமை காண்க.

சீவன்முத்தியடையாதார் காயமும் கழிதலின் அவர்பரமுத்தியடையார் என்பது உணர்த்துதற்கு மேலேகூறிமுடித்த சீவன்முத்திநிலையை அநுவாதமாகக்கொண்டாராதலின் கூறியதுகூறலென்னும் குற்றமின்மையறிக

ஏகாரம் நான்கனுள் முன்னையவிரண்டும் தேற்றம். பின்னையவிரண்டும் அசை.

உறீஇய என்னும் பெயரெச்ச வீறுதொக்கது. உறீஇ என்றிருந்தவாறே வினையெச்சமாகக்கொள்ளின், அவற்றினொன்னுமோர் சொல்வருவித்துரைக்க.

சாரத்தின் சாரம் என்பது சாரச்சாரத்தின் என மாறிநின்றது. பாலின்சாரம் நெய்யும் அந்நெய்யின்சாரம் சுவையுமாதலின்

அது சாரத்தின் சாரமெனப்படும். படவே, வேதம் பசுவெனவும், சிவாகமங்கள் பால் எனவும், அவ்வாகமங்களின் தந்திரகலை மந்திர கலை உபதேசகலை என்னும் மூன்றனுள் உபதேசகலை நெய்யெண வும், இச்சர்வஞானோத்தரம் அந்நெய்யின் சுவையெனவும் அறிந்து கொள்க. (30)

## ஆன்மசமாதிப் பிரகரணம்.

அஃதாவது, ஆன்மா, சிவத்தின் குணங்களே தன் குணங்க ளாக விளங்கப்பெற்று நிற்கும் நிட்டையைப்பற்றிக் கூறும்பகுதி யாம்.

*பரமுத்திநிலையில் ஆன்மாவிற்குச் சிவசுபாவமே தனதுசுபாவமாய் விளங்குமெனக் கூறுகின்றது.*

சீவன்முத்த னாயிருப்பான் விசேடஞா னத்தாற்
றேகாந்தத் துப்பரம முத்தியிலே நிறைவாய்த்
தாவில்சரு வத்திரவி யாபியாய்க் கோண்டு
சராசரமூர்த் தாமூர்த்த மாகியவத் துக்கள்
யாவையுமா யிருந்தபிர பஞ்சத்துட் புறம்போத்
தேகமாய்த் தற்றரும தருமியென வொன்றாய்
மேவுசிவ சுபாவமதே தனதுசுபா வமதாய்
விளங்குவனச் சிவசுபா வத்தையினி யுரைப்பாம்.

(இ-ள்.) விசேடஞானத்தால் சீவன்முத்தனாயிருப்பான்—சிவ ஞானத்தால் சிவனே நானெனவறிந்து தேகத்தோடுகூடிச் சீவன் முத்தனாயிருப்பவன்,— தேகாந்தத்து பரமுத்தியிலே—தேகம் நீங் கியபின்னர் பரமுத்தியெனப்படும் மேலான நிலையின்கண்ணே,— நிறைவாய்—எவ்விடத்தும் நிறைவாயும்,—தாவுஇல் சர்வத்திரவியா பியாய்க்கொண்டு—(நிறைவுக்குட்பட்டு வியாப்பியமாய் விளங்கும் பொருள்களினிடத்துப்) பற்றுக்கோடின்றி அப்பொருள்களுக்கு அப்பாலாந் தன்மையைக்கொண்டும்,—சாராசரமூர்த்தா மூர்த்தமா கிய வத்துக்கள்யாவையுமாய்—உயிர்ப்பொருள் உயிரில்பொருள் உரு வப்பொருள் அருவப்பொருள் ஆகிய அப்பொருள்கள் எல்லா மாய்,—இருந்த பிரபஞ்சத்து உள் புறம்பு ஒத்து—விளங்குகின்ற பிரபஞ்சத்தினிடத்து உள்ளும் புறம்பும் ஒத்து,—ஏகமாய்—அத்து

விதமாயும் (பிரகாசிக்கின்ற),— தற்றருமதருமியென ஒன்றாய்—சிவத்தின் தருமமேதனக்குத்தருமமாக தான் தருமியென சிவனோடு ஒன்றாய்நிற்றலால்,—மேவுசிவசுபாவமதே தனது சுபாவமதாய் விளங்குவன்—விளங்கித்தோன்றும் சிவசுபாவமே தனதுசுபாவமாய்ப் பிரகாசிப்பன்,—அச்சிவசுபாவத்தை இனியுரைப்பாம்—அந்தச்சிவ சுபாவத்தின் இலக்கணங்களை இனிச்சொல்லுவாம். (எ-று.)

(பொ-ரை) சிவஞானத்தால் சிவனேநானெனஅறிந்து தேகத் தோடுகூடிச் சீவன்முத்தனாயிருப்பவன், தேகம் நீங்கிய பின்னர் பரமுத்தியெனப்படும் மேலானநிலையின் கண்ணே, எவ்விடத்தும் நிறைவாயும், நிறைவுக்குட்பட்டு வியாப்பியமாய் விளங்கும் பொருள்களினிடத்துப் பற்றுக்கோடின்றி அப்பொருள்களுக்கு அப்பாலாந்தன்மையைக்கொண்டும், உயிர்ப்பொருள் உயிரில்பொருள் உருவப்பொருள் அருவப்பொருள் ஆகிய அப்பொருள்கள் எல்லாமாய் விளங்குகின்ற பிரபஞ்சத்து உட்புறம்பொத்து அத்துவிதமாயும் பிரகாசிக்கின்ற சிவத்தின்றருமமே தனக்குத் தருமமாகி தான் றருமியெனச் சிவனோடு ஒன்றாய் நிற்றலால், விளங்கித்தோன்றும் சிவசுபாவமே தனது சுபாவமாய்ப்பிரகாசிப்பன். அந்தச் சிவசுபாவத்தின் இலக்கணங்களை இனிச்சொல்லுவாம். (எ-று)

(க-ரை) பரமுத்திநிலையில் சிவத்தின் தருமமே ஆன்மாவிற்குத்தருமமாய் ஆன்மா தருமியாய் நிற்க முற்றுணர்வுமுதலிய எண்குணமுடையனாய் விளங்குவனென்பதாம்.

நிறைவுவியாபகம் என்பன, முறையே நிறைந்து நிற்றலையும் பசுபாசங்களை வியாப்பியமாய்க்கொண்டு நிற்றலையும் குறித்தலின் கூறியது கூறலன்மையுணர்க. இதுமேல் எட்டாவது செய்யுளுரையினும் காட்டப்பட்டது.

தாவுதல்-பற்றுதல்.

சரம் உயிரையும், அசரம் உயிர்தங்குதற்கிடனாகிய உடலையும், மூர்த்தாமூர்த்தம் அவ்வுடல் தங்குதற்கிடனாகிய பூதபௌதிக உலகங்களையும் குறித்துநின்றன. ஐந்துபூதங்களுள், மண் புனல் நெருப்பு மூன்றும் உருவப்பொருள். வெளி அருவப்பொருள்.

காற்று கண்ணுக்குக் காணப்படாமையின் அருவும் ஊறுதலைச் செய்தலின் உருவுமெனப்பட்டு அருவுருவப்பொருளாம். இம்மூன்றும் அருவுருவென்னும் இரண்டனுள் அடங்கும். இவ்வாறே இவற்றின் காரியங்களுமாம்.

ஏகம்—அத்துவிதம். இதனை "ஏகமாய்நின்றே யிணையடிகளொன்றுணர" என்னும் மெய்கண்டதேவர் திருவாக்கானுமறிக. (சிவஞானபோதம் (11) ஞ் சூத்திரம் 1-ம் அதிகரணம்.)

தத்தரும தருமிஎன்பதில் தத் என்பது சிவத்தைக்குறிக்கும். குறிக்கவே, சிவத்தின் தருமமே ஆன்மாவிற்குத்தருமமாய் ஆன்மாதருமியாய் நிற்குமென்றவாறாயிற்று. தருமம் குணம் என்பன ஒருபொருட்சொற்கள். ஆயின் தருமம் ஒன்று என்றும் தருமி இரண்டென்றும் கொள்ளக்கிடந்து தருமத்தைக்கொண்டே தருமியின் வேற்றுமை அறியப்படுவதாகும் என்பதனோடு முரணுதோவெனின், முரணாது. எவ்வாறெனின், எண்குணங்களாகிய தருமத்தால் பரமான்மாவாகிய தருமியும், அக்குணங்களைப்பற்றி அதுவாய்நிற்றலாகிய தருமத்தால் சீவான்மாவும் உண்டென அறியப்படுமாதலின் என்க. இவ்வுண்மையினை "எண்குணஞ் செய்தவீசனே" என மாணிக்கவாசகசுவாமிகளும், எண்குணத்துளோமே எனத்திருநாவுக்கரசுசுவாமிகளும், இவ்வாறே பிறசிவானுபூதிச்செல்வர்களும் அருளியதிருவாக்குக்களால் அறிந்தமைக. இன்னும் இதுபற்றிய சங்கையுத்தரங்களெல்லாம் மேல் இரண்டாவது செய்யுளுரையிற்காண்க.

தருமம் எட்டாகவும் தருமிஒன்றாதல் எவ்வாறுகூடுமெனில், ஞானம் என்ற ஒருதருமத்தின் வியாபாரபேதமே எண்வகைப்படுதலன்றி வேறன்மையின் கூடுமென்க. அன்றியும், ஒரு தருமியினிடத்தில் வேற்றுமைப்பட்ட பலதருமம் இருத்தல் கூடாது; ஒற்றுமைப்பட்ட பலதருமம் இருத்தல்கூடும். அக்கினியில் சூடு செம்மை முதலாகிய பலதருமங்கள் இருத்தலில் வைத்து இது அறியப்படும். ஆதலானும், ஒற்றுமைப்பட்ட எண்குணங்கள் முதல்வனிடத்திருத்தல் கூடுமென்க.

இனி, தற்றரும தருமியென்பதற்கு, தற்றருமம் போலும் தருமத்தையுடையதெனக்கொண்டு, ஆன்மாவிற்கு அநாதியே எண்குணங்களுள; அவைமலத்தால் அநாதியே மறைக்கப்பட்டிருந்தன; மலம்நீங்கிய முத்திநிலையில் விளங்கித்தோன்றின என்று கொள்ளலாகாதோவெனின், ஆகாது. என்னை? எண்குணங்களும் ஆன்மாவினிடத்தில் அநாதியே உள்ளனவாயின், அவற்றுள் ஒன்றான அநாதி போதமெனப்படும் இயல்பாகவே பாசங்களின் நீங்கிநிற்றற்கு மாறான இயல்பாகவே பாசத்தோடுகூடுதல் பொருந்தாதாதலின் என்க. எண்குணங்களும் விளங்கித்தோன்றாமையால் பாசத்தைக் கூடிற்றெனின், பாசத்தைக் கூடிநிற்றல் பிரதிக்ஞையு (மேற்கோளு)ம் எண்குணங்கள் விளங்கித்தோன்றாமை ஏதுவுமாகும். ஆகவே, மலசம்பந்தத்தால் சித்திக்கவேண்டிய எண்குணம் விளங்காமை மலசம்பந்தத்திற்கேதுவாதல் செல்லாமையின் சொரூபாசித்தியென்னும் ஏதுப்போலியாய் வழுவாம். ஆதலின், பாசத்தால் எண்குணம் விளங்கித் தோன்றவில்லை யென்றலும், எண்குணம் விளங்கித் தோன்றாமையால் பாசத்தைக்கூடிற்று என்றலும் பொருந்தாமையின் எவ்வாற்றானும் எண்குணங்கள் ஆன்மாவிற்கு அநாதியாயுண்டென்றல் பொருந்தாதெனப்பட்டு, சார்ந்தபொருளின்றன்மையே தன்றன்மையாகக்கொண்டு நிற்கும் இயல்புடைய ஆன்மாவிற்குச் சிவனைச்சார்ந்தவிடத்து சிவத்தின்றன்மையவாகிய எண்குணங்களும் தன்மாட்டு விளங்கித்தோன்றுமென்றலே பொருத்தமாகும். ஆதலின், தற்றரும தருமியென்பதற்கு தற்றருமம் போலும் தருமத்தையுடைய தருமியெனக்கொள்ளாது தற்றருமத்தால் தருமியெனக் கொள்ளுதலே பொருத்தமாமென்க.

இன்னும் தற்றரும தரும என்றிருந்தால்மட்டும் அதன் தருமம்போலுந் தருமத்தையுடைய ஆன்மாவென்றாகி உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகக் கொள்ளலாமேயன்றி, தற்றரும தருமி என்றதை அவ்வாறுகொள்ளுதல்கூடாது. உவமைத்தொகைத் தொடராகக்கொண்டா லென்னையெனின், தருமம் உவமையும் தருமிபொருளுமாதல் முறையன்றாதலின் பொருந்தாதென்க. தருமியென்றதனாலேயேதருமத்தையுடையதென்றாகிப் பொருந்தாதோவெனின், அங்ஙனமாயினும், அதுபோலுந் தரு

மத்தையுடைய தருமியென்னும் பொருள்படத் தற்றருமி என்றிருத்தல்வேண்டுமேயன்றி தரும தருமி என்றிருத்தல் வேண்டாமாதலிற் பொருந்தாதென்க.

இனி, சில ஆகமங்களில் அநாதியே ஆன்மாக்களுக்கு எண்குணங்களுண்டென்று கூறுவதன் கருத்தென்னையெனின், அநாதியே சிவனோடு பிரிப்பின்றிநிற்றல் பற்றியேயன்றிப் பிறிதில்லையென்க.

ஏகமாய் என்பது சிவம் எல்லாப்பொருள்களினும் கலந்துநிற்றலையும், ஒன்றாய் என்பது சீவன் சிவனோடுகலந்துநிற்றலையும் குறித்தமையால் கூறியது கூறலன்மையுணர்க.

அது இரண்டும் பகுதிப்பொருள் விகுதி. (31)

சிவசுபாவமாகிய எண்குணங்களிவையெனக் கூறுகின்றது.

சருவஞ்ஞ தாதிருத் தியனாதி போதம்
அறைசுதந் தரதா வலுத்த சத்தி
நிறையநந்த சத்தி நிராமய வான்மா
சேறிவிசுத்த தேக மிவைசிவத் துவமே.

(இ-ள்.) சருவஞ்ஞதா—முற்றுமுணர்தல்,—திருத்தி—வரம்பிலின்பமுடைமை,— அநாதிபோதம்—இயல்பாகவே பாசங்களினீங்குதல்,— சுதந்தரதா—தன்வயத்தனாதல்,— அலுத்தசத்தி—பேரருளுடைமை,— அநந்தசத்தி—முடிவிலாற்றலுடைமை,— நிராமய வான்மா—இயற்கையுணர்வினனாதல்,—செறிவிசுத்த தேகம்—நிறைந்ததூயவுடம்பினனாதல்,— அறையிவைசிவத்துவம்—என்று சொல்லப்படும் இவ்வெட்டும் சிவசுபாவமாம். (எ-று.)

(பொ-ரை.) முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், தன்வயத்தனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, இயற்கையுணர்வினனாதல், தூயவுடம்பினனாதல் என்று சொல்லப்படுமிவ்வெட்டும் சிவசுபாவமாம். (எ-று.)

(க-ரை.) முற்றுணர்வுமுதலிய எண்குணங்களும் சிவத்தின் சுபாவம் என்பதாம்.

முதல்வனுக்கு இவ்வெண்குணங்களும் சொரூபநிலையில் இயல்பாயுள்ள தர்மம். அது காட்டுதும். எல்லாவுயிர்களையும் அவ்வுயிர்களுக்கு வேண்டுவனவற்றையும் அறிதலின் முற்றுணர்வுடைமையும், அவ்வாறறிதல் தான் இன்புறுதற்பொருட்டன்றி அவ்வவ்வுயிர்களுக்கு இன்பஞ்செய்தற்பொருட்டாகி வரம்புக்குட்படாதவுயிர்களுக்கு இன்பஞ்செய்தலின் வரம்பிலின்பமுடைமையும், மலத்தடை நீங்கப்பெற்றவுயிர் முதல்வனைச்சார்ந்தவிடத்து முதல்வனுப்நின்று வரம்பிலின்பமுடையதாய் விளங்குமாறுபோலாது இயல்பாகவே வரம்பிலின்பமுடையனாதலின் இயல்பாகவே பாசங்களின் நீங்குதலுடைமையும், இயல்பாகவே மலத்தின்வயப்படாமையின் தன்வயமுடைமையும், வரம்பில்லாதவுயிர்களுக்கு வரம்பில்லாத இன்பந்தருளும் கிருபையுடைமையின் பேரருளுடைமையும், வரம்பில்லாதவுயிர்களுக்கு வேண்டுவனவெல்லாமறிந்து அறிந்தவாறேசெய்யும் வல்லபமுடைமையின் அளவிலாற்றலுடைமையும், இயல்பாகவே பாசங்களின் நீங்குதலின் இயற்கையுணர்வுடைமையும், ஞானமே வடிவாதலின் தூயவுடம்புடைமையும் முதல்வனுக்கு இயல்பாயுள்ள தருமங்களாம். இவ்வெண்குணங்களுள் இயற்கையுணர்வுடைமையை இயல்பாகவே பாசங்களினீங்குதலினும், தூயவுடம்புடைமையை பேரருளுடைமையினும் அடக்கி ஆறென்று கூறுதலுமுண்டு. லுத்தம்—உலோபம். அலுத்தம்—உலோபமின்மை. ஆதலின், அது பேரருள் எனப்பட்டது.

இவ்வெண்குணங்களும் ஞானத்தின் இயற்கைத்தன்மையேயன்றி மாயாகாரியமான சத்துவமுதலிய குணங்களின்பாற்படாமையின் முதல்வனைக் குணாதீதன் என்று ஆகமங்கள் கூறும். இக்கருத்தறியாதார் குணாதீதன் என்பதற்கு ஞானகுணமும் இல்லாதவன் என்று கொண்டு மயங்குவர். குணமில்லாத குணியில்லையாதென்பது அவரறிந்திலர். குணிதோன்றியபின் அடுத்தகணத்துக் குணம் தோன்றுமென்பது நையாயிகர்மதம். குணிதோன்றும்பொழுதே உடனிகழ்ச்சியாயுள்ளகுணம் புலப்படத்தோன்றாமைபற்றி மயங்கிக்கூறிய நையாயிகர்மதம் சைவசித்தாந்தத்திற்கேலாமைகாண்க.

ஏகாரம்—அசை. (32)

*இவ்வாகமத்திற்கூறிய முத்தியே மேலானமுத்தியெனச் சத்தியங்கூறி வற்புறுத்துகின்றது.*

அத்துவிதந் துவிதம்விசிட் டாத்துவித மாமேன்
றபேதம்பே தாபேதம் பேத மாக
முத்திபல வும்பகர்ந்தேம் பக்குவத்துக் கீடா
முத்தியதி காரிக்குச் சொன்னமுத்தி குககேள்
சுத்தவத்து விதமான சாக்ஷாத்கா ரதையாஞ்
சொன்னவிம்முத் திக்குமே லறிவதொன்று மில்லை
சத்தியமா முதற்புனர்சத் தியமுக் காலும்
சத்தியமா கும்நாத்தி நாத்தி நாத்தி.

(இ-ள்.) அத்துவிதம் துவிதம் விசிட்டாத்துவிதமாமென்று அபேதம் பேதம் பேதாபேதமாக—உயிரும் முதல்வனும் அத்துவிதம் என்றுவைத்து அபேதமாகவும், துவிதம் என்று வைத்துப் பேதமாகவும், விசிட்டாத்துவிதம் என்று வைத்துப் பேதாபேதமாகவும்,— பக்குவத்துக்கீடா (க) முத்திபலவும் பகர்ந்தேம்—உயிர்களின் பக்குவத்துக்கீடாக பலவிதமான முத்திகளையும் (ஆகமங்களிற்) கூறினேம்,— முத்தியதிகாரிக்குச் சொன்னமுத்தி—(அவற்றுள் மேலான) முத்தியையடைய விரும்பும் அதிகாரிக்குச்சொன்ன முத்தியாதெனின்,—குக கேள்—சுப்பிரமணியனேகேட்பாயாக,—சுத்த அத்துவிதமான சாக்ஷாத்காரதையாம்—சுத்த அத்துவிதமெனப்படும் (சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றலை உள்ளவாறுணர்ந்து பரமான்மாவின்றன்மை சீவான்மாவிடத்து) விளங்கப்பெறுதலாம்,—சொன்னவிம் முத்திக்குமேல் அறிவதொன்றுமில்லை நாத்தி நாத்தி நாத்தி—இவ்வாகமத்திற்கூறிய சுத்தாத்துவிதமெனப்படும் இம்முத்திக்குமேல் அறியத்தக்கது ஒன்றுமில்லை இல்லை இல்லை இல்லை,— முதல்சத்தியமாம் புனர்சத்தியம் மூக்காலுஞ்சத்தியமாகும்—முதலாவதுசத்தியம் பின்னருஞ்சத்தியம் முக்காலும் சத்தியமாகும். (எ-று.)

(பொ-ரை.) உயிரும் முதல்வனும் அத்துவிதம் என்று வைத்து அபேதமாகவும், துவிதம் என்றுவைத்துப் பேதமாகவும், விசிட்டாத்துவிதமென்று வைத்துப் பேதாபேதமாகவும், உயிர்க

ளின் பக்குவத்திற்கிடாக பலவிதமுத்திகளையும் ஆகமங்களிற் கூறினேம். அவற்றுள், மேலானமுத்தியை அடையவிரும்பும் அதிகாரிக்குச்சொன்ன முத்தியாதெனின், சுப்பிரமணியனே கேட்பாயாக; சுத்தஅத்துவிதமெனப்படும், சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றலே, உள்ளவாறுணர்ந்து பரமான்மாவின்றன்மை சீவான்மாவினிடத்து விளங்கப்பெறுதலாம். இவ்வாகமத்திற் கூறிய சுத்தாத்துவிதமெனப்படும் இம்முத்திக்குமேல் அறியத்தக்கது ஒன்றுமில்லை. இல்லை இல்லை இல்லை. முதலாவது சத்தியம்; பின்னரும் சத்தியம்; முக்காலும் சத்தியமாகும். (எ-று.)

(க-ரை.) அத்துவிதம் துவிதம் விசிட்டாத்துவிதமாகக் கூறப்பட்ட முத்திகளுள் அத்துவிதமுத்தியே மேலானமுத்தி. இம்முத்திக்குமேல் அறியவேண்டுவதொன்றுமில்லை என்பதாம்.

முத்தியென்னுஞ்சொல்லுக்குப் பொருள்விடுதல் என்பதாம். எனவே, யார்விடுதல்; எதனைவிடுதல்; எதற்காகவிடுதல்; எவ்வாறு விடுதல்; என்பனவாதிய ஆசங்கைகள் நிகழுமன்றே? அவற்றிற்கு விடைகூறுமிடத்து, உயிர் தன்னோடு அநாதியேகூடி நின்ற மலத்தை அதனாலுண்டான துன்பத்திற்காற்றாது வருந்துதற்கிரங்கி முதல்வன் குருவாய்வந்து விடுவிக்க விடுதல் என இறுக்கப்படும். படவே, மலத்தின் சத்தி பலவாதலின், மலநீக்கமும் பலவேறுவகைப்பட்டு அதனால் முத்தியும் பலவேறுவகைப்படுமென்றவாறாயிற்று. ஆகவே, முத்தியென்பது தொகையால் ஒன்றாய், வகையால் பதமுத்தி பரமுத்தியென இருதிறப்பட்டு, விரியால் சாலோக சாமீப சாரூபமெனப் பதமுத்தி மூவகையாகவும், அபரசாயுச்சியம் பரசாயுச்சியமெனப் பரமுத்தி இருவகையாகவும் பலவேறுவகைப்படுமென்றுணர்க. பதம்=உலகம். பதமுத்தியென்பது சிவலோகத்தையடைந்து மலசத்திகளின் ஏகதேசம் நீங்கப்பெறுதல். பரமுத்தியென்பது பரனையடைந்து மலசத்திமுற்றும் நீங்கப்பெறுதல்.

சாலோகம்— சிவலோகத்துள் எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்து அங்குள்ள போகங்களையநுபவித்து வாழ்தல். இதற்குச் சரியை சாதனம்.

சாமீபம்—சிவலோகத்துள் சிவபெருமானுடைய சமீபத்திலி ருந்து அங்குள்ள விசேடபோகங்களை அநுபவித்துவாழ்தல். இத ற்குக் கிரியை சாதனம்.

சாரூபம்—சிவபெருமானதுவடிவத்தையொத்த வடிவமும் அவ ரணிந்திருக்கும் ஆபரணங்களையொத்த ஆபரணங்களும் அவரநுப வத்தையொத்த போகநுகர்ச்சியும் பெற்றுச்சிவலோகத்து வாழ் தல். இதற்கு யோகம் சாதனம்.

அபரசாயுச்சியம்—சிவபெருமானது வடிவத்தைப்பெற்று அவ ரால்திட்டிக்கப்பெற்று அவர்செய்யும் அதிகாரங்களையும் அவர் போலவேசெய்துகொண்டு வாழ்தல். இதற்குச் சரியைமுதலிய மூன்றினுமுள்ளஞானம் சாதனம். இதுபொதுவாய்ப் பரமுத்தி யெனப்படினும் உண்மையாய் நோக்குமிடத்துப் பதமுத்தியென வேபடும்.

பரசாயுச்சியம்—சிவபெருமான்றிருவருளில் இரண்டறக்கல ந்து சிவமாய்நின்று சிவானந்தத்தையநுபவித்தல். இதற்கு ஞா னத்தில் ஞானம் சாதனம்.

இம்முத்திகளுள் சாலோகசாமீபம் இரண்டும் சிவன்வேறு தான்வேறாய் நிற்றலின் பேதமுத்தியெனப்படும். சாரூபமும் அபரசாயுச்சியமும், பொருளால் பேதமும் வடிவாலும் தொழிலா லும் அபேதமுமாதலின், பேதாபேதமுத்தியெனப்படும். பரசா யுச்சியம் பொருட்டன்மைபற்றி சீவான்மா பரமான்மாவென்னும் இருபொருள்களுண்டெனினும், பிரித்தறியவாராது கலந்துநிற்ற லின் அபேதமுத்தியெனப்படும். பேதம் துவிதமெனவும், பேதா பேதம் விசிட்டாத்துவிதம் எனவும், அபேதம் அத்துவிதம் என வும் கூறப்படும். விசிட்டம் அத்துவிதம் என்பது விசிட்டாத்து விதம் என்றவாறாயிற்று. விசேடணவிசேடியங்களின் கூட்டம் விசிட்டம். நீலகண்டம் விசேடணம். அதனையுடைய திருமேனி விசேடியம். இவ்விரண்டனையும் சேர்த்து நீலகண்டன் என்றபொ ழுது விசிட்டம். இந்தவிசிட்டம் சிவனுக்கும் சீவனுக்கும் அபே தமாயிருத்தலின், இது சைவவிசிட்டாத்துவிதமென்றாயிற்று. இவ்விசிட்டாத்துவிதம் அடையடுக்காத சுத்தாத்துவிதமாகாது.

ஆயினும், உயிர்களின் பக்குவத்துக்குத்தக்கவாறு பலவேறுவகை ப்பட்டமுத்திகளை விரித்துக்கூறி முமுட்சு எனப்படும் மோக்ஷ இச்சையுடைய உத்தம அதிகாரிக்கு வேண்டப்படும் சுத்தாத்து விதமுத்தியை ஏனைய ஆகமங்களில் பொதுவகையாகக்கூறி வை த்து, இவ்வாகமத்து அம்முத்தியொன்றனையே தனித்தெடுத்துச் சிறப்புவகையாற்கூறுதலின், இதற்குமேல் அறியற்பாலன ஒன்று மில்லையெனச் சத்தியங்கூறி வற்புறுத்தி, இது கவனிக்கத்தக்கது என்பதுணர்த்துதற்கு குகனே கேள் என்றார். இல்லையென்ற மூன்ற டுக்கும் துணிவுப்பொருளைக்குறித்து நின்றன. சத்தியம் என்ற மூன்றடுக்கும் ஆர்வமிகுதியைக்குறித்து நின்றன. ஒருவருடைய வருகையைக்கண்டவுடன் வரல்வேண்டும் வரல்வேண்டும் வரல் வேண்டும் என்னும் அடுக்கு ஆர்வமிகுதியைக் காட்டுதல் காண்க.

அத்துவிதம் என்னும் சொல்லுக்குப்பொருள் இருபொருள் களின் கலப்பு என்னும் உண்மையறியாது, ஒன்றுஎன்றுகொண்டு பிரமம் ஒன்றேயன்றிப் பசுபாசங்களாகிய வேறுபொருள் இல்லையெ ன்பர் ஏகான்மவாதிகள். இவர் கேவலாத்துவிதி எனப்படுவர். கேவலம்—பிரமம். அவ்வாறே ஒன்றென்றுகொண்டு விசிட்டமாகிய நாராயணன் ஒருவனே என்பர் பாஞ்சராத்திரிகள். இவர் பசுபாச ங்கள் உண்டென்றுகொள்ளினும், அத்துவிதச்சொற்குப் பொருள் ஒன்றென்றுகொண்டாராதலின் இவர் வைணவவிசிட்டாத்துவிதி எனப்படுவர். இனி, அவ்வாறே அதன்பொருள் ஒன்றெனவே கொண்டு ஒன்றன் மறுதலையாகிய இரண்டுமுண்டென்பர் மாத்து வர். இவர் துவைதி எனப்படுவர். இவரெல்லாரும் அத்துவிதச் சொல்லின் உண்மைப்பொருளை உள்ளவாறுணர்ந்தவர் ஆகார். சீவான்மாவும் பரமான்மாவும் பிரிப்பின்றிக் கலந்துநிற்றலே அத் துவிதச்சொல்லின் உண்மைப்பொருளாகும். இது, மேல் பதி னொராவது செய்யுளுரையினும் சிவஞானபோதச்சிற்றுரை விளக் கத்தினும் சிவஞானசித்தியார் பொழிப்புரையினும் விரித்துக்காட் டினுமாதலின் விரிவையவ்விடங்களிற்காண்க. (32)

*அத்துவிதமுத்தியடைந்த சிவஞானியின் பெருமை கூறுகின்றது.*

நிருவிகற்பத் தாற்சீவன் முத்தனு யிருப்பா
னின்மலபா வனையுடைய னுகலினு லவன்றுன்

திரிதருகா லத்திலே தன்னையடைந் தோரைத்
திருநோக்கான் மனவாக்காற் கரசரணு திகளால்
அருளின்மல விருணீக்கி முத்தராக் குவன்வே
றவனையிகழ்ந் தோரதோ கதியடைவ ரவன்செல்
தரணிதல விசேடமா லயமூர்த்தி விசேடஞ்
சலந்தீர்த்த விசேடமாந் தானவனு மவனே.

(இ-ள்.) நிருவிகற்பத்தால் சீவன்முத்தனுயிருப்பான்—சிவன் வேறு தான்வேறு என்னும் விகற்பமின்றிச் சிவனே தானாக விளங்குதலால் சீவன்முத்தனுகவிருப்பவன்,—நின்மலபாவனையுடையானுகலினுல்—ஞானமயமாய்விளங்கும் சிவபாவனை யுடையவனுதலால்,—அவன் திரிதருகாலத்திலே தன்னையடைந்தோரை—அச்சீவன்முத்தன்செல்காலம் நிகழ்காலம் வருங்காலமென்னும் முக்காலத்திலேயும் (அன்புடன்) தன்னையடைந்தவரை,—அருளின்றிருநோக்கால் மனவாக்கால் கரசரணுதிகளால்—கிருபையோடு செய்யப்படும் அழகிய சட்சுதீட்சையாலும் மானததீட்சையாலும் வாசகதீட்சையாலும் திருக்கைதிருவடிகளைச் சிரமேல் வைத்தலாகிய பரிசதீட்சையாலும்,— மலவிருள்நீக்கி முத்தராக்குவன்—ஆணவமலமாகிய இருளைநீக்கி முத்தராகும்படி செய்வன்,—வேறு அவனையிகழ்ந்தோர் அதோகதியடைவர்—பகைமைகொண்டு அச்சீவன்முத்தனை யிகழ்ந்தோர் அதோகதி அடைவார்,—அவன் செல்தரணிதலவிசேடம்-அவன் செல்லுகின்றபூமி நலவிசேடமுடையதாகும்,—ஆலயம் மூர்த்திவிசேடம—அவன் செல்லுகின்ற ஆலயம்மூர்த்தி விசேடம் உடையதாகும்,—சலம் தீர்த்தவிசேடமாய்—அவன் சென்று ஆடும் நீர் தீர்த்தவிசேடமுடையதாகும்,—தான் அவன் நாம் அவனே—சிவன் அவன் நாமும் அவனே. (எ-று)

(பொ-ரை) சிவன்வேறு தான்வேறு என்னும் விகற்பமின்றிச் சிவனே தானுகவிளங்குதலால் சீவன்முத்தனுக இருப்பவன் ஞானமயமாய் விளங்கும் சிவபாவனையுடையவன் ஆதலால், அச்சீவன்முத்தன் செல்காலம் நிகழ்காலம் வருங்காலமென்னும் முக்காலத்திலேயும், அன்புடன் தன்னையடைந்தவரைக் கிருபையோடு செய்யப்படும் அழகிய சட்சுதீட்சையாலும் மானததீட்சையாலும் வாசகதீட்சையாலும் திருக்கை திருவடிகளைச்சிரமேல் வைதத

லாகிய பரிசதீட்சையாலும் ஆணவமலமாகிய இருளைநீக்கி முத்த ராகும்படி செய்வான். பகைமைகொண்டு அச்சீவன்முத்தரை யிகழ்ந்தவர் அதோகதியடைவர். அவன் செல்கின்றபூமி தலவி சேடமுடையதாகும். அவன்செல்கின்ற ஆலயம் மூர்த்திவிசே டம்உடையதாகும். அவன் சென்று ஆடும் நீர் தீர்த்தவிசேட முடையதாகும். சிவன் அவனே நாமும் அவனே. (எ-று.)

(க-ரை.) சீவன்முத்தனாய் விளங்கும் சிவஞானியை வழிபடு வோர் முத்தராவர். இகழ்வோர் நரகதுன்பத்தையடைவர். அவன் செல்லுகின்ற தலம் ஆலயம் தீர்த்தங்கள் விசேடமுடையனவாகு மென்பதாம்.

அவன்றான் என்றவிடத்து தான் அசை.

திரிதரு என்பது ஒரு சொல்.

அவன் செல் என்பது பின்னரும் சென்றியையும்.

ஏகாரம் தேற்றம்.

நின்மலனைப்பாவிக்கும் பாவனையை நின்மலபாவனை யென்றார்.

நோக்கம் என்பது சட்சுதீட்சை எனப்படும். அஃதாவது கண்ணாற் பார்தல். பார்வை, அநுக்கிரகம் என்றும் நிக்கிரகம் என்றும் அவ்விரண்டுமின்றிய பொதுவென்றும் மூவகைப்படும். அவற்றுள், அநுக்கிரகமான பார்வையே சட்சுதீட்சையாம். அது ஆசிரியன் உண்மைப்பொருளிலே சித்தத்தை வைத்து அச்சித்த விருத்தியோடுகூட மாணாக்கனை அவன்பந்தம் நீங்கும்படி பார்த் தல்.

மானததீட்சையென்பது, ஆசிரியன் தன்னுடைய யோகாப் பியாசத்தால் மாணாக்கனுடைய இருதயத்திற் பிரவேசித்து அவ னறிவில் சிவமாந்தன்மை விளங்கும்படி செய்தல்.

வாசகதீட்சையென்பது, மந்திரத்தை உபதேசித்தல். சாத்திர வுபதேசமு மிதனுளடங்கும்.

பரிசதீட்சையென்பது, ஆசிரியன் தனது வலதுகையில் சிவ பெருமானைப் பாவனைசெய்து பூசித்து அக்கையால் மாணாக்கன் றலையைப் பரிசித்தலும் தனது திருவடியை அவன் சிரத்தில் சூட்

டுதலுமாம். தீட்சையின் பேதங்களும் அவற்றின் உண்மைப்பொருள்களும் சிவஞானசித்தியார் எட்டாஞ்சூத்திரவுரையில் விரித்துக் கூறியிருக்கின்றுமாதலின் அவ்விடத்துக்காண்க.

வேறுபட்டு என்பது குறைந்துநின்றது. வேறுபடுதல்-பகைத்தல்.

அதோகதி-நரகம். அது கீழுலகமாதலின் அதோகதியெனப்பட்டது. கதி-செல்லுமிடம்.

சிவஞானிகள் செல்லுந்தலமும் ஆலயமும் தீர்த்தமும் விசேடமுடையவென்பது திருஞானசம்பந்தசுவாமிகள் முதலிய பெரியார் தெரிசிக்கப்பெற்ற தலமுதலியன இப்பொழுதும் விசேடமுடையனவாய் விளங்குதலில் வைத்தறிந்துகொள்க. விசேடமுடைமைக்குக்காரணம் அவர்க்குச் சிவபெருமான் விளங்கித்தோன்றி அநுக்கிரகம் புரிதலேயாம்.

தான் அவன் என்றவிடத்து தான் என்பது சொரூபசிவத்தையும், நாம் அவன் என்றவிடத்து நாம் என்பது சீகண்டபரமேசுவராகிய தடத்த சிவத்தையும் குறித்து, சீவன்முத்தன், சுவாநுபவநிலைபற்றிச் சொரூப சிவமும், தேகத்தோடு காணப்படுதல் பற்றித் தடத்தசிவமுமாமெனவிளக்கினமை காண்க. (31)

பரமுத்தியடைவதற்கு இன்னுமொருபாயம் கூறுகின்றது.

மன்னியவிவ் வான்மசா க்ஷாத்கார மாக
மருவுகர ணங்கள்சிவ கரணங்க ளாக
இன்னுமோரு பாயநாஞ் சொல்லுவோ மதுதா
ணியம்புநிரு மலஞதற் கேதுவா யிருக்கும்
அன்னியமி லாதுசரு வமுநமது சொரூப
மாயறித லாற்சருவ முமத்து விதமாம்
வன்னமரு வியபிரதி பாவமா யான்மா
மாயைமா மாயையஞ் ஞானமுத லாக.

(இ-ள்.) மன்னிய இவ் ஆன்ம சாக்ஷாத்காரமாக மருவுகரணங்கள் சிவகரணங்களாக—நிலைபெற்ற பரமான்மாவாய் நிற்கும் இவ்வான்ம சாக்ஷாத்காரத்தையடையவும் பொருந்திநிற்கும் கரணங்கள் சிவகரணங்களாகவும்,—இன்னுமோர் உபாயம் நாம்

சொல்லுவோம்—இன்னுமோருபாயம் நாம் சொல்லுகின்றோம் (கேட்பாயாக),— அது இயம்பு கிருமலனாதற்கு ஏதுவாயிருக்கும்— அவ்வுபாயம் மேற்கூறிய பரமான்மாவாதற்கேதுவாயிருக்கும்,— அன்னியமிலாது சருவமும் நமது சொரூபமாய் அறிதலால் சருவமும் அத்துவிதமாம்—(அதுதான் யாதெனின்) அன்னியமாக ஒரு பொருளும் காணப்படாது எல்லாப்பொருளும் நமது சொரூபமாக (அறிதலேயாம்.) அவ்வாறறிதலால் அனைத்தும் ஒன்றாகிய சிவ சொரூபமாய் விளங்கும். (எ-று.)

(பொ-ரை.) நிலைபெற்ற பரமான்மாவாய் நிற்குமிவ்வான்ம சாக்ஷாத்காரத்தையடையவும், பொருந்திநிற்கும் கரணங்கள் சிவ கரணங்களாகவும், இன்னுமோருபாயம் நாம் சொல்லுகின்றோம் கேட்பாயாக. அவ்வுபாயம் மேற்கூறிய பரமான்மாவாதற்கேதுவா யிருக்கும். அதுதான் யாதெனின், அன்னியமாக ஒரு பொருளும் காணப்படாது, எல்லாப்பொருளும் நமது சொரூபமாக அறிதலே யாம். அவ்வாறறிதலால் அனைத்தும், ஒன்றாகிய சிவசொரூபமாய் விளங்கும் (எ-று.)

(க-ரை) காணப்படும் பொருள்கள் அனைத்தையும் குருவடிவாகக் காண்டலால் பரமான்மாவாதல் கூடும் என்பதாம்.

தான் அசை.

சாக்ஷாத்காரம்—பிரத்யக்ஷம். உள்ளதுதான் பிரத்யக்ஷமாகும்; இல்லது பிரத்யக்ஷமாகாது. ஆன்மாவிற்கு என்றுமுள்ள தன்மை பரமான்மாவோடு பிரிப்பின்றிநிற்றல். இது ஒன்றே நிலைபேறுடையது. ஏனையவெல்லாம் நிலைபேறில்லாதன. ஆதலின்நிலைபேறுடைய அது விளங்குதலை மன்னிய ஆன்மசாக்ஷாத்காரமென்றார். இகரம் மேலே கூறிமுடித்த பரமான்மாவாதலைச் சுட்டிற்று.

பரமான்மாவாதற்கு, தன்னைப் பரமான்மாவாகப்பாவித்து உபாசனைசெய்யவேண்டுமென்றும், அதனால் தான் பரமான்மாவாக விளங்குதல் கூடுமென்றும் இதுகாறும் கூறி, அறிவிற்குத் தூலமாய் புலப்படாததொன்றைப் புலப்பட்டதாகவைத்து உபாசித்தற்கு அறிவு நுணுகிச்செல்லல்வேண்டுமாதலின், அது கூடாதாருமுய்தற் பொருட்டு, எல்லாப்பொருள்களையும், முன்னிலையாகநின்று உப

தேசிக்கும் என்னுடைய சொரூபமாகப்பாவித்து உபாசனைசெய்க என்றும், நாம் ஓர் வடிவுடையான்போன்று பிறர்க்குக்காணப்படினும் உண்மையில் சிவசொரூபமேயாதலின் நம்மைப்பாவித்தலால் எல்லாப்பொருளோடுங்கலந்து அத்துவிதமாய் விளங்கும் சிவசொரூபம் விளங்கித்தோன்றுமென்றுங்கூறினர்.

இதனால் எல்லாப்பொருள்களினிடத்தும் சிவபாவனைசெய்ய இயலாதவர் குருபாவனைசெய்து உய்யலாமென்பது கூறப்பட்டமை காண்க.

இச்செய்யுளினிறுதியடி வருஞ்செய்யுளிற் சேர்த்துக்கூறப்படும். (35.)

## பூதான்மப்பிரகரணம்.

*ஆன்மாவொன்றே உபாதியோடுகூடி நிற்றலானும் உபாதிநீங்கி நிற்றலானும் ஆறுபேதப்படுமெனக் கூறுகின்றது.*

நிறையுபா திகளோடுங் கூடியது வதுவாய்
நிற்றலா னுஞ்சிவன்ற னனுக்கிரகத் தானே
அறையுபா திகணீங்கி நிற்றலா னுந்தா
னறுபே தப்படுவே னான்மாவே றென்னின்
குறைவில்சாத் துவிதவி ராசததா மதமாய்க்
கூறுபல விதமாகிச் செயல்களும்வே றாகிப்
பெறுகுணபே தத்தினே ரான்மாத் தானே
பேதாபே தங்களா கக்காணப் படுவோன்.

(இ-ள்.) வன்னமருவிய பிரதிபாவமாய்—பளிங்கின் நிறமானது தன்னிடத்துப்பொருந்திய வேறு வேறு பொருள்களின் தன்மையாய் விளங்குமாறுபோல,—ஆன்மா—ஆன்மாவும்,—மாமாயை மாயை அஞ்ஞானமுதலாக நிறையுபாதிகளோடுங்கூடி அது வதுவாய் நிற்றலானும்—சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை முதற்காரணங்களாக அவற்றின் காரியமாய் விரிந்தஉபாதிகளோடுங்கூடி அதுவதுவாய் நிற்றலானும்,— சிவன்தன் அநுக்கிரகத்தானே அறையுபாதிகள்நீங்கி நிற்றலானும்—சிவபெருமான்திருவருளானே மேற்சொல்லிய உபாதிகளினின்றுநீங்கி நிற்றலானும்,—ஆறுபேதப்படுவன்—பூதான்மாமுதலாகப் பாமான்மாவிறு

தியாக ஆறுபேதப்படும்,—ஆன்மாவேறுளன்னில்—அங்ஙனம் ஆறு பேதப்படுதலால் ஆன்மா ஆறுகுமோவெனின்,—ஓரான்மாத்தானே—ஒருஆன்மாவே,— குறைவில்சாத்துவித இராசத தாமதமாய் கூறுபலவிதமாகி—குறைவில்லாத சாத்துவிதம் இராசதம் தாமதமாகக்கூறப்படும் குணங்களோடுகூடிப் பலவிதமாகி,—செயல்களும் வேறுகி—அக்குணங்களுக்கேற்பச் செயல்களும் வேறுவேருகி,—பெறுகுணபேதத்தின் பேத அபேதங்களாகக் காணப்படுவான்—மாயை தரப்பெறும் அக்குணங்களோடுகூடிப் பேதமாயும் அருள்தரப்படும் கு ண த் தோ டு கூ டி அபேதமாயும்காணப்படும். (எ-று.

(பொ-ரை.) பளிங்கினிறமானது தன்னிடத்துப் பொருந்திய வேறு வேறு பொருள்களின்றன்மையாய் விளங்குமாறுபோல, ஆன்மாவும், சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை முதற்காரணங்களாக அவற்றின் காரியமாய்விரிந்த உபாதிகளோடுங்கூடி அதுவதுவாய் நிற்றலானும், சிவபெருமான்றிருவருளாலே மேற்சொல்லிய உபாதிகளினின்றும் நீங்கிநிற்றலானும், பூதான்மாமுதலாகப் பரமான்மாவிறுதியாக ஆறுபேதப்படும். அங்ஙனம் ஆறு பேதப்படுதலால் ஆன்மா ஆறுகுமோவெனின், ஒரு ஆன்மாவே குறைவில்லாத சாத்துவிதம் இராசதம் தாமதமாகக் கூறப்படும் குணங்களோடு கூ டி ப் பலவிதமாகி அக்குணங்களுக்கு ஏற்பச் செயல்களும் வேறுவேருகி மாயைதரப்படும் அக்குணங்களோடு கூடிப் பேதமாயும், அருள்தரப்படும் குணத்தோடு கூடி அபேதமாயும் காணப்படும். (எ-று.)

(க-ரை ) பளிங்கினிறமானது தன்னிடத்துப் பொருந்திய பொருள்களின்றன்மையாய் விளங்குமாறுபோல, ஒரு ஆன்மாவே மாயாகாரியங்களோடுகூடிப் பூதான்மாமுதல் மந்திரான்மா விறுதியாக ஐவகையாகவும், திருவருளொடுகூடிப் பரமான்மாவாகவும் விளங்குமென்பதாம்.

ஆய் என்பது போலவென்னும் பொருளில் நின்றது. ஆள்வாரிலி மாடாவேனோ என்முற்போல.

அஞ்ஞானம் என்பது இவ்விடத்துப் பிரகிருதி.

நிறைதல்—விரிதல்.

தான்-அசை.

குறைவில் என்பது சாத்துவிதத்துக்கேயடையாய் நின்று அதனிலக்கணத்தையுணர்த்திற்று. அது முன்னர் முப்பத்தெட்டாவது செய்யுளிற்கூறப்படுதலால் ஆண்டுக்காண்க.

மாயாகாரியமாகிய குணங்களோடுகூடி நிற்குங்காலத்து சிவம் வேறு தான்வேறென நிற்பன். திருவருளினுலுண்டாகும் சிவஞானத்தோடுகூடி நிற்குங்காலத்து சிவமே தானுகநிற்பன். ஆதலின், குணபேதத்தின் ஓரான்மாத்தானே பேதாபேதங்களாகக் காணப்படுவான் என்றார். தான் கட்டுரைக்கண்வந்த அசை. (36.)

ஆன்மா உபாதியோடுகூடி விடயங்களையநுபவிக்கும் முறையும் முக்குணங்களின் பொது விலக்கணமும் கூறுகின்றது.

இந்தவுயிர் சிற்சத்தி மனத்துடனே கூடி
யிந்திரியத் தொடுகூடி யிந்திரியம் விடய
பந்தமொடு கூடியொன்று தனைப்பிரவிர்த் திக்கும்
பகருடலந் தோறும்பிரதி பாவமா யிவணம்
சந்ததமு மதுவதுவாய் நின்றுசேட் டிக்குஞ்
சாத்துவித ஞானத்தைப் பிரகாசம் பண்ணு
மந்தரா சதகுணமி ராகத்தைப் பண்ணு
மருவியதா மதமோகந் தன்னைவிளை விக்கும்.

(இ-ள்.) இந்தவுயிர் சிற்சத்தி மனத்துடனேகூடி இந்திரியத்தொடுகூடி இந்திரியம் விடயபந்தமொடுகூடி ஒன்றுதனைப்பிரவிர்த்திக்கும்—(பேதப்பொருளோடுகூடிப் பேதமாயும் அபேதப்பொருளோடுகூடி அபேதமாயும் நிற்றற்குரிமையுடைய உயிர் விடயங்களை அநுபவிக்குமுறை எவ்வாறெனின்) இந்தவுயிரின் ஞானசத்தி மனத்துடனேகூடி அம்மனம் இந்திரியத்துடன்கூடி அவ்விந்திரியம் விடயபந்தத்துடன்கூடி (இவ்வாறே) ஒவ்வொருவிடயத்தினும் தொழிற்படும்,—இவணம் பகர் உடலந்தோறும் பிரதிபாவமாய் சந்ததமும் அதுவதுவாய்நின்று சேட்டிக்கும்— இவ்வாறு சொல்லாநின்ற சரீரந்தோறும் வேறுவேறுவிதமாய் எக்காலத்தும் அது

வதுவாய் நின்றுதொழிற்படும்,—சாத்துவிதம் ஞானத்தைப் பிரகாசம்பண்ணும்—(அங்ஙனம் தொழிற்படுங்காலத்து) சாத்துவித குணத்தோடுகூடில் அதுஞானத்தை விளங்கப்பண்ணும்,—இராசதகுணம் இராகத்தைப்பண்ணும்–இராசதகுணத்தோடுகூடில் அது விடயங்களில் இச்சையை உண்டுபண்ணும்,—மந்தம்மருவிய தாமதம் மோகம் தன்னைவிளைவிக்கும்–மந்தம்பொருந்திய தாமதகுணத்தோடுகூடில் அது அறியாமையை உண்டுபண்ணும். (எ-று.)

(பொ-ரை.) பேதப் பொருளோடுகூடிப் பேதமாயும் அபேதப்பொருளோடுகூடி அபேதமாயும் நிற்றற்குரிமையுடைய உயிர், விடயங்களை அநுபவிக்கும் முறை எவ்வாறெனின், இந்த உயிரின் ஞானசத்தி மனத்துடனேகூடி அம்மனமிந்திரியத்துடனேகூடி, அவ்விந்திரியம் விடயபந்தத்துடன்கூடி இவ்வாறே ஒவ்வொரு விடயத்திலும் தொழிற்படும். இவ்வாறு சொல்லாநின்ற சரீரந்தோறும் வேறுவேறுவிதமாய் எக்காலத்தும் அதுவதுவாய் நின்று தொழிற்படும். அங்ஙனந்தொழிற்படுங்காலத்து சாத்துவிதகுணத்தோடுகூடில் அது ஞானத்தை விளங்கப்பண்ணும். இராசதகுணத்தோடுகூடில் அது விடயங்களில் இச்சையை உண்டுபண்ணும். மந்தம்பொருந்திய தாமதகுணத்தோடுகூடில் அது அறியாமையை உண்டுபண்ணும். (எ-று.)

(க-ரை.) உயிரினறிவு மனத்துடன்கூடி மனம் இந்திரியத்துடன்கூடி இந்திரியம் விடயத்துடன்கூடி உயிர் ஒரு விடயத்தை அநுபவிக்குமென்பதாம்.

மனம் முக்குணமுடையது ஆதலானும், அவற்றுள் ஒவ்வொருகுணமே மேம்பட்டு நிகழுமாதலானும், மனத்துடன்கூடின பொழுது ஒவ்வொரு குணம் மேம்பட்டுவிளங்கும். இது செய்யலாம் இதுசெய்யக்கூடாதென அறிதல் சாத்துவிதகுணத்தின் செயல். அறிந்தவற்றில் முயற்சித்தல் இராசதகுணத்தின் செயல். முயற்சியாலுண்டாகும் சுகதுக்கங்களை வினைப்பயனென்றறியாது அவற்றிற்கட்டுண்டு மயங்கல் தாமதகுணத்தின் செயலென அறிக. (37)

*முக்குணங்களின் சிறப்பிலக்கணங்கூறி அவற்றுள் சாத்துவித குணத்தை விருத்திசெய்யவேண்டுமெனக் கூறுகின்றது.*

சாத்துவித ஞானத்தாற் றயைதிடநல் விநயந்
தயிரியஞ்சத் தியமுளவாம் ராசதாா கத்தால்
வாய்த்ததறு கண்மையிடம் பங்கோ பங்கண்
மருவுந்தா மதமோக மசத்தியமஞ் ஞானம்
ஏத்தலுறு பிரமாத மாலசிய மிவைதேர்ந்
திராசததா மதகுணத்திற் பிரவிருத்தி யின்றிச்
சாத்துவித குணத்தையே வர்த்திக்கப் பண்ணிற்
றர்மார்த்த காமமோட் சங்களுள வாமே.

(இ-ள்.) சாத்துவிதஞானத்தால் தயை திடம் நல்விநயம் தைரியம் சத்தியம் உளவாம்—சாத்துவிதகுணத்தால் உண்டாகும் அறிவினால் எல்லாவுயிர்களிடத்துந் தயையும், நல்லனவென்றறிந்தவற்றில் உறுதிப்பாடும், செய்யவேண்டுவன இவை செய்யவேண்டாதன இவைஎன ஆராயும் நல்லவிநயமும், சுகதுக்கங்களுள் அமிழ்ந்தாததைரியமும், பிறவுயிர்க்குத் தீங்குபயவாத சத்தியமும், உளவாம்,—ராசதாாகத்தால் வாய்த்ததறுகண்மை இடம்பம் கோபங்கள் மருவும்—இராசதகுணத்தாலுண்டாகும் விடய இச்சையால் பொருந்துகின்ற பாவச்செயல்களுக்கு அஞ்சாமையும், ஆவாரமான இடம்பமும் கோபங்களும் உளவாம்,—தாமதமோகம் அசத்தியம் அஞ்ஞானம் ஏத்தல் உறுபிரமாதம் ஆலசியம்—தாமதகுணத்தாலுண்டாகும் மயக்கத்தால் பொய்மையும் அறியாமையும் தன்னைமதித்து இறுமாக்கும் வெறியும் சோம்பலும் (உளவாம்),—இவைதேர்ந்து இராசத தாமதகுணத்தில் பிரவிருத்தி யின்றி—இம்முக்குணங்களின் செயல்களை ஆராய்ந்து இராசததாமத குணங்களோடுகூடித் தொழிற்படுதலின்றி,—சாத்துவிதகுணத்தையே வர்த்திக்கப்பண்ணில் தருமஅர்த்தகாமமோக்ஷங்கள் உளவாம்—சாத்துவிதகுணத்தையே எப்பொழுதும் மேற்கொண்டொழுகின் அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கும் அதனாலுளவாகும். (எ-று.)

(பொ-ரை.) சாத்துவிதகுணத்தாலுண்டாகும் அறிவினால் எல்லாவுயிர்களிடத்தும் தயையும், நல்லனவென்றறிந்தவற்றில்

உறுதிப்பாடும், செய்யவேண்டுவன இவை செய்யவேண்டாதன இவை என ஆராயும் நல்ல விநயமும், சுகதுக்கங்களுள் அமிழ்ந்தாததைரியமும், பிற உயிருக்குத் தீங்குபயவாத சத்தியமும் உளவாம்; இராசதகுணத்தால் உண்டாகும் விடய இச்சையால் பொருந்துகின்ற பாவச்செயல்களுக்கு அஞ்சாமையும், ஆரவாரமான இடம்பமும், கோபங்களும் உளவாம்; தாமதகுணத்தால் உண்டாகும் மயக்கத்தால் பொய்மையும், அறியாமையும், தன்னைமதித்து இறுமாக்கும் வெறியும், சோம்பலும் உளவாம்; இம் முக்குணங்களின் செயலை ஆராய்ந்து இராசத தாமத குணங்களோடு கூடித் தொழிற்படுதலின்றிச் சாத்துவித குணத்தையே எப்பொழுதும் மேற்கொண்டொழுகின் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கும் அதனால் உளவாகும். (எ-று.)

(க-ரை.) இராசத தாமத குணங்களுடன் கூடாமல் சாத்துவிதகுணத்துடன் கூடி. அதனை மிகும்படிசெய்யின் அதனால் அறம் பொருள் இன்பம் வீடு உண்டாகும் என்பதாம். (38)

சாத்துவிதகுணமே முத்திக்குநிமித்தமெனவும் பூதான்மாவாய் நிற்கும் முறையும் கூறுகின்றது.

தாமதமிக் கிருகுணங்கீழ்ப் படினுமிரா சதமே
　　தழுவிமற்றை யிருகுணந்தாழ் படினுமெண்ணில் காலந்
தீமைபுரி சம்சாரத் திறந்துபிறந் துழல்வன்
　　செப்பியசாத் துவிதமே முத்திக்கு நிமித்தம்
ஆமினிய பிருதிவியப் புத்தேயு வாயு
　　வாகாச மேனுமைம்பூ தங்களுடன் கூடிப்
பூமிதனின் மற்றுளதத் துவங்களைக்கீ ழிட்டுப்
　　பூதமயந் தனையடைவா னவன்பூத வான்மா.

(இ-ள்.) தாமதம்மிக்கு இருகுணம் கீழ்ப்படினும் இராசதமே தழுவி மற்றை இருகுணம் தாழ்படினும் எண்ணில்காலம் தீமைபுரி சம்சாரத்து இறந்து பிறந்து உழல்வன்—(முக்குணங்களுள்) தாமதகுணம் மேற்பட்டு சாத்துவித இராசத குணங்கள் கீழ்ப்படினும், இராசதகுணம் மேற்பட்டு ஏனைய இருகுணங்கள் கீழ்ப்படினும் அளவில்லாதகாலம் துன்பத்தைச்செய்கின்ற சம்சார

பந்தத்திற்கட்டுப்பட்டு இறந்து பிறந்து திரிவன்,—செப்பியசாத்து விதமே முத்திக்கு நிமித்தம் ஆம்—(ஆதலால் இராசத தாமத குணங்கள் கீழ்ப்படச்) சொல்லிய சாத்துவிதகுணம்மேற்பட்டிருக் குமாயின் அதுவே முத்தியைச்செய்விப்பதாம்,— இனிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் ஐம்பூதங்களுடன் கூடி— விரும்பப்படுகின்ற பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களுடன் கூடி,—பூமிதனில் மற்றுள தத்துவங்களைக் கீழிட்டு பூதமயம் தனை அடைவான் அவன் பூத ஆன்மா—இவ் வுலகத்தில் ஏனையதத்துவங்களைக் கீழ்ப்படுத்தி பூதத்தின் சார மாகிய தேகத்தைப்பொருந்தி நிற்கின்ற ஆ ன் மா பூ தா ன் மா வாகும். (எ-று)

(பொ-ரை.) முக்குணங்களுள் தாமதகுணம் மேற்பட்டு சாத் துவித இராசத குணங்கள் கீழ்ப்படினும், இராசதகுணமேற்பட்டு ஏனை இருகுணங்கள் கீழ்ப்படினும், அளவில்லாதகாலம் துன்பத் தைச்செய்கின்றசம்சாரபந்தத்திற் கட்டுப்பட்டு இறந்து பிறந்து திரிவன். ஆதலால் இராசத தாமத குணங்கள் கீழ்ப்படச், சொல்லிய சாத்துவிதகுணம் மேற்பட்டிருக்குமாயின் அதுவே முத்தியைச் செய்விப்பதாம். விரும்பப்படுகின்ற பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் ஐந்துபூதங்களுடன்கூடி இவ்வுலகத்தில் ஏனைய தத்துவங்களைக் கீழ்ப்படுத்திப் பூதத்தின் சாரமாகிய தேகத்தைப் பொருந்திநிற்கின்ற ஆன்மா பூதான்மாவாகும். (எ-று.)

(க-ரை) பூதகாரியமாகிய உடம்பொடு உயிர் கூடி அதுவே தானாக நிற்குங்காலத்துப் பூதான்மா என ப் பெயர்பெறும் என்ப தாம்.

உலகத்தில் கண்ணினாற் காணப்படும் பொருள்களை அன்றி வேறுபொருள்களில்லையென்றும் அப்பொருள்களால் உண்டாகும் இன்பமே இன்பமென்றும் கருதுவதை உணர்த்துதற்கு பிருதிவி முதலிய பூதங்களுக்கு இனிய என்னும் அடைகொடுத்தும், உடம் பே தானென நிற்றலை உணர்த்துதற்குப் பூதமயந்தனை அடைவான் என்றும் கூறினார். இதுவே தேகான்மவாதியாகிய உலகாயத மதக் கொள்கை என அறிக. (39)

## அந்தரான்மப் பிரகரணம்.

*அந்தர ஆன்மாவாய் நிற்கும் முறை கூறுகின்றது.*

வத்திக்கு மாகாயத் தன்மையைச்சத் தத்து
மருவியநற் பிராணனொடு மபானனொடுங் கூடிச்
சத்தப்பிர விர்த்தியோடு நிவிர்த்தியோடு மாகச்
சஞ்சரிக்கு மவதரமந் தரான்மா வாகும்
சத்தப்பிர விர்த்தியினாற் றெய்வபா டையினாற்
சகலமா கியபலசாத் திரங்களுமுண் டாகும்
சத்தத்தாற் பசுக்கண்மிரு கங்கள்பற வைகளூர்வ
சரிப்பனவாஞ் சகலசீவர் களும்பிரவர்த் திக்கும்.

(இ-ள்.) வத்திக்கும் ஆகாயத்தன்மையை—(உயிரானது) அகத்தே இயங்கிக்கொண்டிருக்கும் நாதமாத்திரையான சூக்கும வாக்கை,—சத்தமருவிய நற்பிராணனொடு அபானனொடுங்கூடி—ஓசைபொருந்திய நல்ல பிராணவாயுவினுடனும் அபானவாயுவுடனுங்கூடி,—சத்தப்பிரவிர்த்தியொடும் நிவிர்த்தியொடுமாக—வசனித்தலைச்செய்தலையும் செய்யாதிருத்தலையும் (உடைய) தாக,—சஞ்சரிக்குமவதரம் அந்தரான்மாவாகும்—நிற்கும்நிலையில் அந்தரான்மாவாகும்,—சத்தப்பிரவிர்த்தியினால் தெய்வபாடையினால் சகலமாகிய பலசாத்திரங்களும் உண்டாகும்—நாதத்தின்றொழிலால் தெய்வபாஷையும் அப்பாஷையினால் சகலசாத்திரங்களும் உண்டாகும்,—சத்தத்தால் பசுக்கள் மிருகங்கள் பறவைகள்ஊர்வ சரிப்பனவாம் சகலசீவர்களும் பிரவிருத்திக்கும்—நாதத்தினாலேயே பசுக்களும் ஏனையமிருகங்களும் பறவைகளும் ஊர்வனவும் நடப்பனவுமாகிய எல்லாவுயிர்களும் தொழிற்படும். (எ-று)

(பொ-ரை.) உயிரானது அகத்தே இயங்கிக்கொண்டிருக்கும் நாதமாத்திரையான சூக்குமவாக்கை, ஓசைபொருந்திய நல்லபிராணவாயுவுடனும் அபானவாயுவுடனும்கூடி வசனித்தலைச் செய்தலையும் செய்யாதிருத்தலையும் உடையதாகநிற்கும் நிலையில் அந்தரான்மாவாகும். நாதத்தின்றொழிலால் தெய்வபாஷையும் அத்தெய்வபாஷையினால் சகலசாத்திரங்களுமுண்டாகும். நாதத்

தினுமேல பசுக்களும் ஏனையமிருகங்களும் பறவைகளும் ஊர்வன வும் நடப்பனவுமாகிய எல்லாவுயிர்களும் தொழிற்படும். (எ-று.)

(க-ரை.) உயிரானது அகத்தேயிருக்கும் நாதமயமாகிய வாக்குக்களுடன்கூடி நிற்குங்காலத்து அந்தரான்மாவெனப்படுமென் பதாம்.

சத்தத்து என்றவிடத்து அத்து சாரியை.

வாக்காவது சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என நான்கு வகைப்படும்· அவற்றுள், அகத்தே நாதமாத்திரையாயியங்கிக் கொண்டிருப்பது சூக்குமை. அக்கரங்கள் அகத்தேநிருவிகற்ப மாய்த்தோன்றுதல் பைசந்தி. அக்கரங்கள் அகத்தேபிரிந்து தோன்றுதல் மத்திமை. தன்செவிக்கும் பிறர்செவிக்கும் கேட் கப்படுவதாய்ச் சொல்லும்சொல் வைகரி. மத்திமை வாக்கு உதா னவாயுவின்றொழிற்பாட்டோடு கூடியது. வைகரிவாக்கு பிராண வாயுவின்றொழிற்பாட்டோடுகூடியது. சூக்குமை பைசந்தியிரண் டினும் வாயுக்களின்றொழிற்பாடு கிடையாது. ஆதலின், அவ்வி ரண்டினும் சொற்களின்றொழிற்பாடில்லை. மத்திமை வாக்கில் சொற்களின்றொழில் சூக்குமமாயும், வைகரிவாக்கில் சொற்களின் றொழில் தூலமாயும் நிகழும். ஆதலால், சத்தப்பிரவிர்த்தியொ டும் நிவிருத்தியொடும் என்றார். பிரவிருத்திதூலநிகழ்ச்சியையும் நிவிருத்தி சூக்கும நிகழ்ச்சியையுங் குறித்தன.

வாக்கெனப்படுமிந்த நாதம் இன்றேல் ஒருயிரும் ஒன்றனை யும் அறிதலைச்செய்யாது என்பதுணர்த்துதற்கு சத்தத்தால் சகல சீவர்களும் பிரவிருத்திக்குமென்றார். இக்கருத்தேபற்றி "மூவகை யணுக்களுக்கு முறைமையின் விந்து ஞானம—மேவின தில்லையாகில் விளங்கியஞானம் இன்றும்" என்றார் அருணந்தி சிவசாரியரும், (சிவஞானசித்தி 1-ம் சூ-ம். செ. 26.) ஆண்டுவிந்துஞானமென்பது ஞானத்திற்கு ஏதுவாகிய வாக்கு என்றவாறும். (40)

## தத்துவான்மப் பிரகரணம்.

### தத்துவான்மாவாய் நிற்கும்முறை கூறுகின்றது.

சத்ததன்மாத் திரைபரிச ரூபதன்மாத் திரைகள்
தருமிரத கந்ததன்மாத் திரைகளென வியம்பும்

இத்தகைய பஞ்சதன்மாத் திரைமனமாங் கார
மெய்துபுத்தி யோடுகுணதத் துவமவ்வி யத்தம்
வித்தியாதத் துவம்புருடன் கலைகால மாதி
விரவுசுத்த வித்தையீ சுரஞ்சாதாக் கியங்கள்
சத்திசிவ மாகுமிந்தத் தத்துவமா றாறுந்
தழுவிச்சீ விக்குமவ தரந்தத்து வான்மா.

(இ-ள்.) தருசத்ததன்மாத்திரை பரிசரூபதன்மாத்திரைகள் இரதகந்ததன்மாத்திரைகள் என இத்தகைய இயம்பும் பஞ்சதன் மாத்திரை—குணரூபமாய் விளங்கும் சத்ததன்மாத்திரையும் பரிச தன்மாத்திரையும் ரூபதன்மாத்திரையும் இரததன்மாத்திரையும் கந்ததன்மாத்திரையும் என இவ்வாறு சொல்லப்படும் ஐந்துதன் மாத்திரைகளும்,—மனம் ஆங்காரம் புத்தியொடு எய்துகுணதத் துவம் அவ்வியத்தம்—மனமும் அகங்காரமும் புத்தியும் அவற்று டன் பொருந்துகின்ற குணதத்துவமும் மூலப்பிரகிருதியும் (ஆகிய ஆன்மதத்துவமும்),—வித்தியாதத்துவம் புருடன்கலைகா லம் ஆதி—வித்தியாதத்துவமாகிய புருடன் கலைகாலமுதலியவை களும்,—விரவு சுத்தவித்தையீசுரம் சாதாக்கியங்கள் சத்திசிவம் ஆகும் இந்தத்தத்துவம் ஆறாறுந்தழுவிச் சீவிக்குமவதரம் தத் துவான்மா—ஏனைத்தத்துவங்களுடன் கலந்துநிற்கும் சுத்தவித்தை யீசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் சிவதத்துவங்களும் ஆகிய இந்தத்தத்துவம் முப்பத்தாறையும் பொருந்தித் தொழிற் படும் நிலையில் (உயிர்) தத்துவான்மா எனப்படும். (எ-று.)

(பொ-ரை.) குணரூபமாய் விளங்கும் சத்ததன்மாத்திரை யும் பரிசதன்மாத்திரையும் ரூபதன்மாத்திரையும் இரததன்மாத் திரையும் கந்ததன்மாத்திரையும் என இவ்வாறு சொல்லப்படு மைந்து தன்மாத்திரைகளும், மனமும் அகங்காரமும் புத்தியும் அவற்றுடன் பொருந்துகின்ற குணதத்துவமும் மூலப்பிரகிருதி யுமாகிய ஆன்மதத்துவமும், வித்தியாதத்துவமாகிய புருடன் கலைகாலமுதலியவையும், ஏனைத்தத்துவங்களுடன் கலந்துநிற்குஞ் சுத்தவித்தையீசுரம் சாதாக்கியம் சத்திசிவம் என்னும் சிவதத்து வங்களும் ஆகிய தத்துவம் முப்பத்தாறையும் பொருந்தித் தொ ழிற்படுநிலையில் உயிர் தத்துவான்மாவெனப்படும். (எ-று.)

(க-ரை.) உயிர் முப்பத்தாறு தத்துவங்களுடனுங்கூடித் தொழிற்படும் நிலையில் தத்துவான்மாவெனப்படும் என்பதாம்.

சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தமென்னும் ஐந்தும் தன்மாத்திரை எனவும் விடயமெனவும் இருவகைப்படும். அவற்றுள், விடயம், ஆகாயம் வாயு அக்கினி அப்பு பிரிதிவி என்னுமைந்து பூதங்களின் குணமாக அவற்றைப்பற்றி நிற்பது. தன்மாத்திரை குணிப் பொருளைப் பற்றுக்கோடாகச் சாராது குணசமூகமாய் நிற்பது. எனவே, தானே குணமாயும் குணியாயும் நிற்குமென அறிந்துகொள்க. இது, அறிவே ஆன்மாவிற்குக் குணமாயும் சொரூபமாயும் நிற்றல்போலவாம். இக்கருத்துணர்த்துதற்கு தகுமென்னும் அடையடுக்கவைத்தார். இத்தன்மாத்திரை ஐந்தும் மனம் அகங்காரம் புத்தி மூன்றும் ஆக எட்டும் புரியட்டக உடம்பாம். சூக்கும உடம்பு என்பதுமிதுவே. எட்டுங்கூறவே ஏனைய தத்துவங்களனைத்தும் அடங்கும். எவ்வாறெனின், தன்மாத்திரைகூறவே அவற்றின் காரியமாகிய பூதமைந்தும், அப்பூதங்களைப் பற்றுக்கோடாகக்கொண்டு தொழிற்படும் ஞானேந்திரியமைந்து கன்மேந்திரியமைந்தும், மனம் புத்தி யகங்காரங்கூறவே, இனமாகிய சித்தமும், இவ்வான்மதத்துவம் தொழிற்படுதற்குத் துணையாயிருக்கும் வித்தியாதத்துவமும், தொழிற்படுத்தும் சிவதத்துவமும் அடங்குமெனவறிந்துகொள்க. ஆயினும், விளங்குதற்பொருட்டு குணதத்துவ முதலியவற்றையும் உடன்கூறினர். குணதத்துவங்கூறவே, ஐந்துபூதங்களும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும், அந்தக்கரணங்களும், காலமாதி என்றதனால் நியதி முதலியவைகளும் அடங்குமாறுகாண்க. குணம் வெளிப்படாமல் அடங்கியிருத்தல் பற்றி பிரகிருதி அவ்வியத்தம் எனப்பட்டது. சிவதத்துவம் ஏனைத்தத்துவங்களைத் தொழிற்படுத்துமாதலால் அதனை விரவு என்னும் அடைகொடுத்தோதினர். (41)

**தத்துவங்கள் பிராகிருதம் என்றும் பிரக்கிரியை என்றும் இரண்டுவகைப் படுமெனவும் சுத்தமாயாப் பிரக்கிரியை இவையெனவுங் கூறுகின்றது.**

தத்துவத்தைப் பாசங்க ளென்றுமல மென்றுஞ்
சாற்றலுமாஞ் சகசமுமாய்ச் சர்வகமு மாகி

நித்தியமாய்ச் சகலவான் மாவிடத்து மிருக்கு
நிகழ்த்துமிந்தத் தத்துவங்கள் பிராகிருத மென்றும்
ஒத்தபிரக் கிரியையென்று மிரண்டுவித மாகு
முரைத்தபிரக் கிரியையே சிவதத்துவ மைந்து
மத்திமைசூக் குமைமற்றைப் பைசந்திவை கரியாம்
வாக்குமா மிவைதாமே வயிந்தவமு மாகும்.

(இ-ள்.) *தத்துவத்தைப் பாசங்களென்றும் மலமென்றும் சாற்றலுமாம்—தத்துவங்களைப் பாசங்களென்றும் மலமென்றும் சொல்லுதலுங் கூடும்,—சகசமுமாய் சர்வகமுமாகி நித்தியமாய் சகல ஆன்மாவிடத்தும் இருக்கும்—இத்தத்துவங்கள் உயிருடன் சகசமாயும் சகலஉலகங்களாயும் நித்தியமாயும் எல்லா ஆன்மாக் களிடத்தும் இருக்கும்,—நிகழ்த்துமிந்தத் தத்துவங்கள்—சொல் லப்படும் இந்தத்தத்துவங்கள்,—பிராகிருதமென்றும் ஒத்தபிரக் கிரியை என்றும இரண்டுவிதமாகும்—காரணமென்றும் காரணத் துடன்பொருந்திய காரியமென்றும் இரண்டுவிதமாகும்,—உரை த்த பிரக்கிரியை சிவதத்துவமைந்தும் மத்திமை சூக்குமை பை சந்தி வைகரியாம் வாக்கும் ஆம்—(அவற்றுள்) சொல்லிய பிரக்கிரி யை எனப்படும் காரியங்கள் சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் சிவதத்துவங்கள் ஐந்தும் சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி எனப்படும் வாக்குக்கள் நான்குமாம்,—இவை தாமே வைந்தவமுமாகும்—இத்தத்துவங்கள் சுத்தமாயையின் சம் பந்தமான பிரக்கிரியையாகும்.* (எ-று.)

(பொ-ரை) *தத்துவங்களைப் பாசங்களென்றும் மலமென்றும் சொல்லுதலும்கூடும். இத்தத்துவங்கள் உயிருடன் சகசமாயும் சகலவுலகங்களாயும் நித்தியமாயும் எல்லா ஆன்மாக்களிடத்தும் இருக்கும். சொல்லப்படுமிந்தத்தத்துவங்கள் காரணமென்றும் காரணத்துடன்பொருந்திய காரியமென்றுமிருவகைப்படும். அவற் றுள், சொல்லியபிரக்கிரியையெனப்படும் காரியங்கள், சுத்தவித் தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் சிவதத்துவங்களை ந்தும், சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி எனப்படும் வாக் குக்கள் நான்குமாம். இத்தத்துவங்கள் சுத்தமாயையின் சம்பந்த மான பிரக்கிரியையாகும்.* (எ-று.)

(க-ரை.) முப்பத்தாறுதத்துவங்களுள் சிலதத்துவமைந்தும் சுத்தமாயையின் சம்பந்தமான பிரக்கிரியையாகுமென்பதாம்.

பாசம் என்பது கட்டுப்படுத்துவது. மலமென்பது அறியாமையைச்செய்வது. இந்தத் தத்துவங்கள் சரீரரூபமாயிருந்து உடம்பேதானென்னும்படி உயிரைத்தன்வசமாக்கலானும், தானல்லாத வுடம்பைத் தானெனமயங்கி உணரச்செய்தலானும், பாசங்களென்றும் மலமென்றும், இத்தத்துவங்கள் உயிருடன் இயல்பாகவேகூடியிருக்கும் ஆணவமல நீக்கத்தின்பொருட்டு அநாதிகேவலத்தில் நின்றும் பிரிக்கும்பொழுதே முதல்வனாற்றரப்படுதலின் சகசமுமாயென்றும், சகலவுலகங்களும் தத்துவமயமாயிருத்தலின் சர்வகமுமாயென்றும், காரியரூபமாய் விரிந்தும் காரணரூபமாயொடுங்கியும் என்றும் உள்பொருளாதலின் நித்தியமாயென்றும், ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிரீறாக எல்லாவுயிர்களிடத்துமிருத்தலின் சகல ஆன்மாவிடத்துமிருக்கும் என்றுங்கூறினர், மக்கள் தேவர் அல்லாத ஏனைய உயிர்வர்க்கங்களிடத்தும் இத்தத்துவங்களிருக்குமாயின் தொழிற்படாமைக்குக் காரணமென்னையெனின், கண்ணிடத்துக் காணுந்தன்மையிருப்பினும் அது விளக்கொளிமுதலிய துணை ஒளிகளுடன் கூடினாலன்றிக் காணமாட்டாது; அவ்வொளிகளுடன்கூடிக்காணுங்காலத்தும் அவ்வொளி ஏகதேசமாயின் காணுந்தொழில் ஏகதேசமாயும், பூரணமாயின் காணுந்தொழில் பூரணமாயும் நிகழும். துணை ஒளிசிறிதுமின்றி இருளோடுகூடின் அவ்விருளைக்காணுதலையன்றிப் பொருளைக்காணுமாறில்லை. இதுபோல முப்பத்தாறு தத்துவங்கள் எனப்படும் சூக்குமசரீரம் எல்லாவுயிர்வர்க்கங்களிடத்தும் இருப்பினும் அது தொழிற்படுதற்குத்துணையாகிய தூல சரீரத்திற்கேற்றவாறே தொழிற்படுமென்றறிந்துகொள்க.

பிராகிருதம் என்பது, தொழிற்படுதற்கு யோக்கியமாயிருக்கும் முதற்காரணம்.

பிரக்கிரியை என்பது, ஆக்கப்படுவதாகிய காரியம். இந்தக் காரியமும் சுத்தமாயையினால் ஆக்கப்படுவதும், அசுத்தமாயையினால் ஆக்கப்படுவதும், பிரகிருதிமாயையினால்ஆக்கப்படுவதும் என

மூலமைகப்படும். அவற்றுள், சிவதத்துவம் ஐந்தும், தாத்துவிக ங்களுள் வைத்தெண்ணப்படுவதாகிய வாக்கு நான்கும், சுத்தமா யையின் சம்பந்தமான காரியமாதலின், இவை வைந்தவமூமாகு மென்றார். வைந்தவம் விந்துசம்பந்தம்.

மற்று, ஐ, உம், அசை. தாமே யென்பது பகுதிப்பொருள் விகுதி. (42)

அசுத்தமாயாப்பிரக்கிரியை பிரகிருதி மாயாப்பிரக்கிரியை இவை யெனவும், பிரக்கிரியையை யறிதலே தத்துவஞானம் எனவும் கூறுகின்றது.

தருகால மாதியாய் மாயையீ ருகச்
சாற்றியதோர் வித்தியா தத்துவங்க ளேழும்
அருள்பரவு மாயேயப் பிரக்கிரியை யாகும்
ஆன்மதத் துவங்களோ ரிருபத்து நான்கும்
விரவுபிரா கிருதபிரக் கிரியை யாகும்
விந்துமோ கினிமான்கள் பிராகிருத மாகும்
இருமையினிற் பிரக்கிரியை யறிகுவதே ஞான
மிந்தஞா னத்தையொத்த ஞானமொன்று மின்றே.

(இ-ள்) தருகாலமாதியாய் மாயையீருக சாற்றியதோர் வித் தியாதத்துவங்களேழும் அருள்பரவு மாயேயப்பிரக்கிரியையா கும்—போகத்தைத் தோற்றுவிப்பதாகிய காலதத்துவம் முதல் மாயை யீருகச்சொல்லப்படும் வித்தியாதத்துவம்ஏழும் சிவசத் தியின்றொழிலால் அசுத்தமாயையினிடத்துத் தோன்றிய பிரக் கிரியை எனப்படும் காரியங்களாகும்,—ஆன்மதத்துவங்கள் இரு பத்துநான்கும் விரவுபிராகிருத பிரக்கிரியை ஆகும்—ஆன்மதத்து வங்கள் இருபத்துநான்கும் கலந்துநிற்கின்ற பிரகிருதியின் பிரக்கி ரியை எனப்படுங்காரியங்களாகும்,—விந்து மோகினி மான்கள் பிராகிருதமாகும்—சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை எனப்படும் மூன்றும் பிராகிருதமெனப்படும் முதற்காரணங்களா கும்,— இருமையினில் பிரக்கிரியை அறிகுவதேஞானம்—பிராகிரு தம் பிரக்கிரியை யென்னுமிரண்டனுள் பிரக்கிரியை எனப்படும் காரியங்களினுண்மைத்தன்மையை யறிதலே தத்துவஞானமா கும்,—இந்த ஞானத்தையொத்தஞானம் ஒன்றுமின்று—இந்தத்

தத்துவஞானத்திற்கு ஒப்பானஞானம் ஒன்றுமில்லை. (ஏ-று.)

(பொ-ரை) போகத்தைத்தோற்றுவிப்பதாகிய காலதத்துவ முதல் மாயை ஈறுகச்சொல்லப்படும் வித்தியாதத்துவங்கள் ஏழும், சிவசத்தியின்றொழிலால் அசுத்தமாயையினிடத்துத் தோன்றிய பிரக்கிரியை எனப்படும் காரியங்களாகும், ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் கலந்துநிற்கின்ற பிரகிருதியின் பிரக்கிரியை யெனப்படும் காரியங்களாகும். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை எனப்படும்மூன்றும் பிராகிருதமெனப்படும் முதற்காரணங்களாகும். பிராகிருதம் பிரக்கிரியை என்னுமிரண்டனுள் பிரக்கிரியை எனப்படும் காரியங்களின் உண்மைத்தன்மையை அறிதலே தத்துவஞானமாகும். இந்தத் தத்துவஞானத்திற்கு ஒப்பான ஞானம் ஒன்று மில்லை. (எ-று.)

(க-ரை.) அசுத்தமாயையின் காரியமான வித்தியாதத்துவங்கள்ஏழும் அசுத்தமாயாபிரக்கிரியை ஆகும், பிரகிருதிமாயையின் காரியமான ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் பிரகிருதி மாயா பிரக்கிரியை ஆகும். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என்னும் மூன்றும் பிராகிருதமாகும். பிரக்கிரியை எனப்படும் தத்துவங்களின் உண்மைத்தன்மையை அறிதலே தத்துவஞானமாகும் என்பதாம்.

வித்தியாதத்துவங்கள்—காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயையென்னும் ஏழுமாம். இவற்றுள், கலை உயிருக்கு அறியாமையைச் சிறிதுநீக்கிக் கிரியாசத்தியைச் சிறிதுவிளக்குவது. வித்தை, அறிவைச்சிறிது விளக்குவது. அராகம், இச்சையைச் சிறிது எழுப்புவது. இம்மூன்றும் உயிரின் குணமாகிய கிரியாசத்தி ஞானசத்தி இச்சாசத்திகளைத் தொழிற்படுத்துதற்கண் காலமும் நியதியும் ஒருதலையான் வேண்டப்படும். படவே, இவ்வைந்துடன் கூடித் தொழிற்படும் உயிரின் எழுச்சி புருடனெனப்பெயர்பெறும். இவ்வாறும் தோற்றுதற்கு இடமான மாயையுடன் வித்தியாதத்துவம் ஏழு என்பதறிக. இத்தத்துவங்கள் உயிருக்குப் போகத்தைத் தோற்றுவித்தலால் தரு என்னும் அடைகொடுத்தும், திரோதான சத்தியால் மாயை காரியப்படுத்தப்படுதலின் அருள்பரவு மாயை என்றுங் கூறினர். அதுபின்னருஞ் சென்றியையும்.

சுத்தமாயையின் காரியம் படம் குடிலானாற்போல விருத்தியும், அசுத்தமாயையின் காரியம் நெய்யிற்புழுப்போல ஏகதேசபரிணாமமும், பிரகிருதிமாயையின் காரியம் பால் தயிர் ஆதல்போல முற்றும் பரிணாமமும் ஆதலின், பிரகிருதியின் காரியத்திற்கு விரவு என்னும் அடை கொடுத்தோதினர். பிரகிருதம் என்பது பிராகிருதம் என நீண்டது. பிரகிருதி, காரணமேனும் கலையின் காரியமாதலின் பிரகிருதமெனப்பட்டது.

பிரக்கிரியை எனப்படும் தத்துவங்களை அறிதலே ஞானம் என்றமையால் அதனை அறியாமையே அஞ்ஞானம் என்றவாறாயிற்று. தத்துவங்களை அறிதலாவது பிருதிவிமுதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயைகளின் காரியமெனவும், அம்மாயைகள் சடமாதலின் அவற்றின் காரியங்கள் சடமேயாம் எனவும், சடமாயினும் அறிவுரூபமாகிய உயிரோடுகூடி அவ்வுயிரின் அறிதற்றொழிற்குக் கருவியாய் நிற்றலால் அறிவுடையனபோலக்காணப்படும் எனவும், உண்மையில் அறிவில்லாதனவாய் தன்னின்வேறாயுள்ளன எனவும், தன்னாலறியப்படும் உலகப்பொருள்கள்போல இவையும் தன்னாலறியப்படுவனவேயாமெனவும், தன்னறிவினிடத்தில் விளங்கக் காண்டல். இதுவே தசகாரியத்துள் ஒன்றான தத்துவதரிசனமெனப்படும். இக்கருத்துப்பற்றியே "மண்முதற் சிவமதீறாய் மலஞ்சடமென்றல் காட்சி" என்றார் உமாபதி சிவாசாரியரும். (உண்மைநெறி விளக்கம் செய்யுள். (1)

அக்கினி யாதானுமொன்றைப் பற்றிநிற்பதன்றித் தனித்து நில்லாதவாறுபோல, உயிர் யாதானும் ஒன்றைப்பற்றி அதுவாய் நிற்பதன்றித் தனித்துநிற்பதில்லையாதலால், தத்துவங்களுடன்கூடி அவையே தானென நின்ற உயிர் அவற்றின் உண்மைத்தன்மையை அறிந்து நீங்கவே, தன்னோடு என்றும் பிரிப்பின்றி நிற்கும் சிவபெருமானைச்சார்ந்து சிவமேயாய் நிற்றல்கூடுமாகலின், இந்த ஞானத்தை ஒத்த ஞானம் ஒன்றுமில்லை என்று வற்புறுத்திக் கூறினர். கூறவே, சிவஞானந்தோன்றுதலினாலேயே இத் தத்துவ ஞானம் உண்டாகுமென்பது குறிப்பாலுணரக்கிடந்தவாறறிக.

ஓர் என்பது அசை. (43)

*தத்துவஞானத்தின் பெருமை கூறுகின்றது.*

நித்தனுர் வியாபகத்தை நிகர்வியா பகம்வே றில்லை
சித்தியாஞ் சிவயோகம்போற் சித்திகள் பிறிதோன் றில்லை
உத்தமப் பொறுமைக்கொப்பா யொன்றுவே றில்லை யிந்தத்
தத்துவ ஞானத்திற்குச் சரியான ஞான மின்றே.

(இ-ள்.) நித்தனுர் வியாபகத்தை நிகர்வியாபகம் வேறு இல்லை—நித்தப்பொருளாகிய சிவபெருமானுருடைய வியாபகத்தை ஒத்த வியாபகம் வேறு கிடையாது,—சித்தியாம் சிவயோகம்போல் சித்திகள் பிறிது ஒன்றுமில்லை—அச்சிவபெருமான் விளங்கித் தோன்றுதலாகிய சித்தி எனப்படும் சிவயோகம்போலச் சித்திகள் வேறொன்றுமில்லை,—உத்தமப் பொறுமைக்கு ஒப்பாய் வேறு ஒன்றும் இல்லை—அச்சிவயோகத்தை நிலைபெறுத்தும் மேலான பொறுமைக்கு ஒப்பாக வேறொன்றுமில்லை,—இந்தத் தத்துவஞானத்திற்குச் சரியான ஞானம் இன்று—(அவைபோல அச்சிவஞானத்தால் உண்டாகும்) இந்தத்தத்துவஞானத்துக்குச் சரியான ஞானமில்லை. (எ-று.)

(பொ-ரை.) நித்தப்பொருளாகிய சிவபெருமானுருடைய வியாபகத்தை ஒத்த வியாபகம் வேறு கிடையாது. அச்சிவபெருமான் விளங்கித்தோன்றுதலாகிய சித்தி எனப்படும் சிவயோகம் போலச் சித்திகள் வேறொன்றும் இல்லை. அச்சிவயோகத்தை நிலைபெறுத்தும் மேலான பொறுமைக்கு ஒப்பாக வேறொன்றுமில்லை. அவைபோல, அச்சிவஞானத்தாலுண்டாகும் இந்தத் தத்துவஞானத்துக்கு ஒப்பான ஞானம் இல்லை. (எ-று.)

(க-ரை.) இந்தத்தத்துவஞானத்துக்குச் சமமான ஞானம் இல்லையென்பதாம்.

இஃது எடுத்துக்காட்டுவமை.

ஆன்மாவிற்கும் பிரமன் விஷ்ணு முதலிய கடவுளருக்கும் வியாபகம் உண்டெனினும், ஆன்மாவின் வியாபகம் சார்ந்ததின் வண்ணமாதலானும், ஏனைக்கடவுளரும் பசுக்களே ஆதலின் அவர் வியாபகம் அவரவரால் வியாபிக்கப்படும் உலகளவிற்றாதலானும்,

எவ்விடத்துமுள்ள எல்லாப்பொருள்களோடும் வியாபிக்கும் வியாபகம் சிவபெருமான் ஒருவருக்கே உள்ளது. ஆதலின் "நித்தனுர் வியாபகத்தை நிகர்வியா பகம்வே றில்லை" எனவும், அச்சிவபெருமான் விளங்கித்தோன்றுதலே சித்திகள் பலவற்றுள்ளும் மேலான சத்தியாதலானும், அங்ஙனம் விளங்கித்தோன்றுதற்கு அவனிடத்து இடையறாது கசிந்துநிற்கவேண்டுமாதலானும், "சித்தியாம் சிவயோகம்போற் சித்திகள் பிறிதொன்றில்லை." எனவும், அச்சிவயோகம் நிலைபெறவேண்டுமாயின் உடல்சம்பந்தமான சுகதுக்கங்களின் பற்று விடல்வேண்டும்; அங்ஙனம் பற்றுவிடுதலே பொறுமையெனப்படும்; பொறுமைகள் பலவற்றுள்ளும் இப்பொறுமையே மேலானதாகும்; இப்பொறுமை உடையானுக்குச்சிவயோகந்தானே உண்டாம்; ஆதலால் உத்தமப் பொறுமைக்கொப்பாய் ஒன்றும் வேறில்லையெனவும், உவமை யெடுத்துக்காட்டி சிவஞானம் விளங்குதலினுலேயே தத்துவஞானம் உண்டாவது ஆதலின் இந்தத் தத்துவஞானத்துக்குச் சரியான ஞானம் இன்று எனக்கூறினுர்.

சிவயோகமெனினும் சிவஞானமெனினும் ஒக்கும். அஃதாவது, சிவனோடு ஆன்மா பிரிப்பின்றி நிற்றலை அனுபவமாய் உணர்தல். ஏகாரம் அசை. (44)

*தத்துவங்களுடன் கூடி ஆன்மா நிற்கும் முறை கூறுகின்றது.*

தத்துவம்யா வற்றுடனும் பிரிவறவெப் போழுதுஞ்
சஞ்சரிப்பா னேவற்றும்வியா பகனுயு மிருப்பான்
தத்துவத்துட் டனித்தனிகூ டேல்பிரித லாகத்
தான்காணப் படுவேன்வியா பகத்திலிருந் தாலுந்
தத்துவத்துக் குதயாத்த மனமுமுள வேந்தத்
தத்துவஞ்சீ விக்குமஃ துதயமா மேந்தத்
தத்துவத்தி னுதாசீனம் புரிவனத்த மனமாஞ்
சகலாவத் தையினேல்லாத் தத்துவத்து நிகழ்வான்.

(இ-ள்.) எவற்றும் வியாபகமாயும் இருப்பான்—எப்பொருளோயுஞ்சார்ந்து அவ்வப்பொருளளவில் வியாபகமாயிருத்தற்குரிய ஆன்மா,—தத்துவம் யாவற்றுடனும் பிரிவற எப்பொழுதும் சஞ்சரிப்பான்—தத்துவங்களுள் யாதானும் ஒரு தத்துவத்துடன் பிரிப்

யின்றி எப்பொழுதும் கூடிநிற்கும்,—தான் வியாபகத்தில் இருந்தாலும் தத்துவத்துள் தனித்தனி கூடுதல் பிரிதலாகக் காணப்படுவன்—ஆன்மா வியாபகப்பொருளாயிருப்பினும் யாதானும் ஒரு தத்துவத்தைக் கூடிநிற்றலும் அதனினின்றும் பிரிந்து பிறிதொரு தத்துவத்தைக் கூடிநிற்றலுமாகக் காணப்படும்,—தத்துவத்துக்கு உதய அத்தமனமும் உள—(ஆன்மா கூடிப்பிரிதலினால்) தத்துவங்களுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உளவாம்,—எந்தத்தத்துவம் சீவிக்கும் அஃது உதயமாம்—எந்தத்தத்துவத்தோடு கூடி ஆன்மா சீவிக்குமோ அப்பொழுது அந்தத்தத்துவம் தோற்றம் உடையதாகும்,—எந்தத்தத்துவத்தின் உதாசீனம் புரிவன் அத்தமனமாம்—எந்தத்தத்துவத்தினின்றும் ஆன்மா நீங்குமோ அப்பொழுது அந்தத்தத்துவம் ஒடுக்கமுடையதாகும்,—சகலாவத்தையின் எல்லாத் தத்துவத்தும் நிகழ்வான்—சகலாவத்தையின் எல்லாத்தத்துவங்களோடுனுங்கூடி ஆன்மா தொழிற்படும். (எ-று.)

(பொ-ரை.) எப்பொருளையுஞ்சார்ந்து அவ்வப்பொருளளவில் வியாபகமாயிருத்தற்குரியஆன்மா, தத்துவங்களுள் யாதானும் ஒரு தத்துவத்துடன் பிரிப்பின்றி எப்பொழுதுங்கூடிநிற்கும். ஆன்மா வியாபகப்பொருளாயிருப்பினும் யாதானும் ஒரு தத்துவத்தைக் கூடி நிற்றலும் அதனினின்றும் பிரிந்து பிறிதொருதத்துவத்தைக் கூடி நிற்றலுமாகக் காணப்படும். ஆன்மா கூடிப்பிரிதலினால் தத்துவங்களுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உளவாம். எந்தத்தத்துவத்தோடுகூடி ஆன்மா சீவிக்குமோ அப்பொழுது அந்தத் தத்துவந் தோற்றமுடையதாகும். எந்தத்தத்துவத்தினின்றும் ஆன்மா நீங்குமோ அப்பொழுது அந்தத்தத்துவம் ஒடுக்கம் உடையதாகும். சகலாவத்தையின் எல்லாத் தத்துவங்களோடுனுங்கூடி ஆன்மா தொழிற்படும். (எ-று)

(க-ரை.) ஆன்மா, சகலாவத்தையில் எல்லாத் தத்துவங்களுடன் கூடியும் கேவலாவத்தையில் சில தத்துவங்களைக்கூடியும் சில தத்துவங்களை விட்டுப் பிரிந்தும் நிற்கும் என்பதாம்.

அவத்தை எனினும் நிலை எனினும் ஒக்கும். ஆன்மாவின் நிலை கேவலம், சகலம், சுத்தமென மூவகைப்படும். அம்மூன்றும்

காரண காரியமெனத் தனித்தனி இருவகைப்படும். படவே, காரண கேவலம் காரணசகலம் காரணசுத்தமெனவும், காரியகேவலம் காரியசகலம் காரியசுத்தமெனவும், ஆன்மா நிற்கும் நிலை அறுவகைப்படும் என்க. அவற்றுள்,

காரணகேவலமாவது, அநாதியில் ஆணவமலத்துடன்கூடி நிற்கும் நிலை.

காரணசகலமாவது, மாயையின் காரியமான கருவிகளுடன் கூடிப் பிறந்திறந்துழலும் நிலை.

காரணசுத்தமாவது, கருவிகள் அனைத்தும் நீங்கச் சிவபெருமான்றிருவருளோடு பிரிப்பின்றி நிற்கும் நிலை.

காரியகேவலமாவது, சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமென ஐவகைப்படும்.

அவற்றுள், சாக்கிரமாவது எல்லாக்கருவிகளுடனும் கூடித் தொழிற்பட்ட இளைப்பு நீங்குதற்பொருட்டு நித்திரைக்குச்சென்று நித்திரை வாராமல் விழித்திருக்கும் நிலை. இந்நிலையில் இலாடத்தினிற்கும் கருவி ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, சத்தாதிவிடயம் ஐந்து, வசனாதிவிடயம் ஐந்து, மனமாதி அந்தக்கரணம் நான்கு, பிராணாதி வாயு பத்து, புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து. சொப்பனத்தானமாகிய கண்டத்தானத்தினிற்குங் கருவி, சத்தாதிவிடயம் ஐந்து, வசனாதிவிடயம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிராணாதிவாயு பத்து, புருடன் ஒன்று ஆக இருபத்தைந்து. சுழுத்தித்தானமாகிய இருதயத்தினிற்குங்கருவி, பிராணன், சித்தம், புருடன் என்னும் மூன்று. துரியத்தானமாகிய நாபியின் நிற்குங்கருவி பிராணன், புருடன் என்னும் இரண்டு. துரியாதீதத்தானமாகிய மூலாதாரத்தின் நிற்குங்கருவி புருடன் ஒன்று.

காரியசகலமாவது, உயிர் எல்லாக்கருவிகளுடனுங்கூடி இலாடத்தானத்தினின்று விடயங்களினிடமாகத் தொழிற்படும் நிலை. இதனினும் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையுண்டு. அவை வருமாறு:— சுகதுக்கங்களைக் கேட்டமாத்திரையில் திடுக்கிட்டுப் பிராணவாயு சலியாமல் மூர்ச்சித்து மயங்கிநிற்றல் துரியாதீதம்.

சுகதுக்கந்தோன்றாது பெருமூச்செறிந்துநிற்றல் துரியம். சுகதுக்கத்தின் மூழ்கிநிற்றல் சுழுத்தி. சுகதுக்கம் வந்த வரலாற்றை நாடி மனோவியாபாரஞ்செய்துநிற்றல் சொப்பனம். சுகதுக்கங்களை அனுபவித்தல் சாக்கிரம். இவற்றிற்குந் தத்துவங்கள் மேற்கூறியவாறேயாம்.

காரியசுத்தமாவது, இருதயம், கண்டம், நாக்கின் அடி, இலாடம், பிரமரந்திரம என்னும் ஐந்து தானங்களினின்று அப்பியாசம் செய்யும் யோகநிலை. இவை முறையே சாக்கிரம் முதலாக எண்ணப்படும். இவற்றிற்றொழிற்படும் கருவிகள் பிராணன், மனம், புருடன் என்னுமூன்றுமேயாம். இருதயத்தில் இம்மூன்றுந் தூலமாய்த் தொழிற்படும். கண்டத்தில் பிராணவாயு சூக்குமமாயும், ஏனைய இரண்டுந்தூலமாயுந்தொழிற்படும். நாக்கின் அடியில் மனமும் புருடனும் தொழிற்படும். இலாடத்தில் மனம் சூக்குமமாயும் புருடன் தூலமாயும் தொழிற்படும். பிரமரந்திரத்தில் புருடன் மாத்திரம் தொழிற்படும்.

இவ்வாறு காரியகேவலத்தும் சகலத்தும் சுத்தத்தும் தத்துவங்கள் கூடிப்பிரிதல் உண்டென்பது உணர்த்துதற்குத் "தத்துவங்கள் தனித் தனி கூடுதல் பிரிதல் ஆகக் காணப்படுவன்" எனவும், கூடுங் காலத்துத் தோற்றமும், பிரியுங்காலத்து ஒடுக்கமும் உள என்ப துணர்த்துதற்குத் "தத்துவத்திற்கு உதயாத்தமனமும் உள" எனவும், காரியசகல சாக்கிரத்தில் எல்லாத்தத்துவங்களுந் தொழிற்படும் என்பது உணர்த்துதற்குச் "சகலாவத்தையின் எல்லாத் தத்துவத்து நிகழ்வான்" எனவுங் கூறினார்.

சார்ந்ததின்வண்ணமாய் வியாபித்தலே ஆன்மாவின் வியாபகமாதலின், தத்துவங்களைக் கூடிப் பிரிதலால் வியாபகத்திற்கிழுக்கில்லை என்பதுணர்த்துதற்கு "வியாபகத்திலிருந்தாலும் கூடுதல் பிரிதலாகக் காணப்படுவன்" என்றார். (45)

*தத்துவங்களுள் எந்த எந்தத் தத்துவத்தை உயிர் பற்றிற்றோ அந்த அந்தத் தத்துவமயமாய் உயிர் நிற்குமெனவும், தத்துவமனைத்தும் நீங்கின் உயிர்க்குப் பிறப்பிறப்பு நீங்குமெனவும் கூறுகின்றது.*

தத்துவம்யா தொன்றுமிக்குச் சீவிக்கு மந்தத்
தத்துவத்தின் விடயவியா பாரமா யிருப்பான்

சித்தமுணர்ந் தனித்தியமாந் தத்துவத்தை நீங்கித்
தேகாதிப் பிரபஞ்ச வாதனையை யிழந்து
நித்தியமாய் நிர்க்குணமாய்ப் பரமசிவ னிடத்தே
நிகழுமே காக்கிரசித் தத்திருந்து சீவன்
முத்தனு னவன்தேகாந் தத்திலே பரம
முத்தியடை வான்சேனன மோகத்தை மருவான்.

(இ-ள்) தத்துவம் யாதொன்று மிக்குச் சீவிக்கும் அந்தத் தத்துவத்தின் விடய வியாபாரமாய் இருப்பான்—தத்துவங்களுள் எந்தத்தத்துவம் பற்றுக்கோடாக உயிர் சீவிக்குமோ அந்தத் தத்துவத்துக்குரிய விடயத்திற் றொழிற்பாடுடையதாயிருக்கும்,— சித்தம் உணர்ந்து அநித்தியமாம் தத்துவத்தை நீங்கி—தன்னறிவின் கண்ணே தத்துவத்தின் உண்மைத்தன்மையை உணர்ந்து நிலைபெறுதலில்லாத அத்தத்துவத்தினின்றும் நீங்கி,—தேகாதி பிரபஞ்ச வாதனையை இழந்து—தேகம், புவனம், போகம் எனப்படும் பிரபஞ்சத்தின் பற்றைவிட்டு,— நித்தியமாய் நிர்க்குணமாய் நிகழும் பரமசிவனிடத்தே ஏகாக்கிரசித்தத்திருந்து—நித்தியமாயும் நிர்க்குணமாயும் விளங்கும் பரமசிவனிடத்தில் ஒற்றுமைப்பட்ட சித்தமுடையவனுயிருந்து,—சீவன் முத்தனுனவன் தேகாந்தத்திலே பரமமுத்தி அடைவான் செனனமோகத்தை மருவான்—சீவன் முத்தநிலையை அடைந்தவன் பிராரத்த தேகம் நீங்கினபொழுது பரமுத்தியினை அடைவான்; திரும்பப்பிறவியாகியமயக்கத்திற்பொருந்தான். (எ-று)

(பொ-ரை.) தத்துவங்களுள் எந்தத்தத்துவம் பற்றுக்கோடாக உயிர் சீவிக்குமோ அந்தத்தத்துவத்துக்குரிய விடயத்தில் தொழிற்பாடுடையதாயிருக்கும். தன்னறிவின்கண்ணே தத்துவத்தின் உண்மைத்தன்மையை உணர்ந்து நிலைபெறுதலில்லாத அத்தத்துவத்தினின்றும் நீங்கித் தேகம் புவனம் போகம் எனப்படும் பிரபஞ்சத்தின்பற்றைவிட்டு, நித்தியமாயும் நிர்க்குணமாயும் விளங்கும் பரமசிவனிடத்தில் ஒற்றுமைப்பட்ட சித்தமுடையவனுயிருந்து சீவன்முத்தநிலையை அடைந்தவன் பிராரத்ததேகம் நீங்கினபொழுது பரமுத்தியினை அடைவான். திரும்பப் பிறவியாகிய மயக்கத்திற் பொருந்தான். (எ-று.)

(க-ரை.) தத்துவங்களினின்றும் நீங்கிச் சிவபெருமானோடு கலந்துநிற்பின் சீவன்முத்தனாகித் தேகாந்தத்திற் பரமுத்தியை அடைவன் என்பதாம்.

தத்துவங்களுள் யாதானும் ஒரு தத்துவத்தை உயிர் பற்றி நிற்குங்காலத்து, ஏனைத்தத்துவங்களைப் பற்றமுடியாது. உதாரணமாக, கண்ணிந்திரியத்தைப்பற்றி நிற்குங்காலத்துச் செவிமுதலியவற்றைப்பற்றி நிற்பதில்லை. இவ்வாறே பிறவுமாம். ஆகலின், "தத்துவம் யாதொன்று மிக்குச் சீவிக்கு" மெனவும், அங்ஙனம் கண்ணிந்திரியத்தைப்பற்றி நிற்குங்காலத்து அவ்விந்திரியத்துக்கு விடயமாகிய உருவத்தை அறிதலே அன்றிப்பிறவிடயங்களை அறிதலில்லை. ஆதலால் "அந்தத்தத்துவத்தின் விடய வியாபாரமாய் நிற்பான்" எனவும், தத்துவம் அனைத்தும் தோற்றமும் ஒடுக்கமும் உடையவாதலின் அநித்தியமென்றும், கருவியாதலின் தானல்ல என்றும் அறிந்து, அவற்றினின்றும் நீங்கவே தனுகரணபுவன போகம் என்னும் நான்கனுள் கரணமெனப்படும் இத்தத்துவங்களின் வேறான ஏனைய மூன்றனிடத்துமுள்ள வாசனை அறவே நீங்கும்; நீங்கவே, சிவபெருமானிடத்துக் கலந்துநிற்பன்; கலந்து நிற்பினும் பிராரத்ததேகமுள்ள அளவும் சீவன் முத்தன் எனப்பட்டு அத்தேகம் நீங்கினபொழுது பரமுத்தியை அடைவன்; ஆகலின் "அநித்தியமாம் தத்துவத்தை நீங்கித் தேகாதி பிரபஞ்ச வாதனையை இழந்து பரமசிவனிடத்தே ஏகாக்கிரசித்தத்து இருந்து சீவன் முத்தனானவன் தேகாந்தத்திலே பரமமுத்தியை அடைவான்" எனவும் கூறினர்.

தத்துவத்தின் அநித்தியத்தை உணர்ந்து நீங்குதலாகிய இதுவே தத்துவசுத்தி எனப்படும். இத்தத்துவசுத்தி சிவபெருமானிடத்து இடையறாது கலந்து நிற்றலினாலேயே உண்டாகும். இவ்வுண்மையை உணர்த்துதற்பொருட்டே தத்துவத்தை நீங்கி வாதனையை யிழந்து பரமசிவனிடத்து ஏகாக்கிரசித்தத்திருந்து என உடன்வைத்தோதினர். இக்கருத்துப்பற்றியே "மண்முதற் சிவமதீறாய் வகையதிற்றானிலாது—கண்ணுதலருளால் நீங்கல் சுத்தியாய்க்கருதலாமே" என்றார் உமாபதிசிவாசாரியரும். (உண்மை நெறி விளக்கம்-செய்யுள் 1.) ஏகாரம் இரண்டும் அசை. (46)

## சீவான்மப் பிரகரணம்.

*சீவான்மாவாய் நிற்கும்முறை கூறுகின்றது.*

பிருதிவியப் புத்தேயு வாயுவா காயம்
பிறங்கியசோத் திரந்தோக்குச் சட்சுநா நாசி
மருவியசத் தப்பரிச ரூபரச கந்தம்
வாக்குப்பா தம்பாணி பாயுருவோ பேத்தம்
மருள்சேறியு மனம்புத்தி யாங்காரஞ் சித்த
மாயபிர கிருதியோடுங் குணங்களோடுங் கூடிச்
சோரூபமதாய்த் தனுகரண புவனபோ கத்துட்
டுக்கசுக பலத்தையனு பவிப்பவன்சீ வான்மா.

(இ-ள்.) பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம்—மண் புனல் அனல் காற்று வெளி என்னும் ஐந்து பூதங்களோடும்,—பிறங்கிய சோத்திரம் தொக்கு சட்சு நா நாசி—விளங்குகின்ற காது உடல் கண் நாக்கு மூக்கு என்னும் ஐந்து ஞானேந்திரியங்களோடும்,—மருவிய சத்த பரிச ரூப ரச கந்தம்—பொருந்திய சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் ஐந்து தன்மாத்திரைகளோடும்,—வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் ஓடு—வாய் கால் கை குதம் குறி என்னும் ஐந்து கன்மேந்திரியங்களோடும்,—மருள்செறியும் மனம் புத்தி ஆங்காரம்—மயக்கம் நிறைந்த மனம் புத்தி அகங்காரங்களோடும்,—சித்தமாய பிரகிருதி ஓடும் குணங்களோடுங்கூடி—இத்தத்துவங்கட்கு முதற்காரணமெனச் சித்திப்பதாய பிரகிருதியுடனும் சாத்துவிதம் இராசதம் தாமதம் என்னும் குணங்களுடனும் கூடி,— சொரூபமதாய்—புருடதத்துவமாய் நின்று,—தனு கரண புவன போகத்துள் துக்க சுக பலத்தை அனுபவிப்பவன் சீவான்மா—தனு கரண புவன போகங்களிடமாக வரும் சுக துக்க பலன்களை அனுபவிக்குங்காலத்து உயிர் சீவான்மா எனப்படும் (எ-று.)

(பொ-ரை) மண் புனல் அனல் காற்று வெளி என்னும் ஐந்து பூதங்களோடும், விளங்குகின்ற காது உடல் கண் நாக்கு மூக்கு என்னும் ஐந்துஞானேந்திரியங்களோடும், பொருந்திய சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னும் ஐந்து தன்மாத்திரைகளோ

டும், வாய் கால் கை குதம் குறி என்னும் ஐந்து கன்மேந்திரியங் களோடும், மயக்கம் நிறைந்த மனம் புத்தி அகங்காரங்களோடும், இத்தத்துவங்கட்கு முதற்காரணமெனச் சித்திப்பதாய பிரகிருதி யோடும், சாத்துவித இராசத தாமதம் என்னும் குணங்களோடும் கூடிப் புருடதத்துவமாய்நின்று தனுகரணபுவனபோகங்களிடமாக வரும் சுகதுக்கபலன்களை அனுபவிக்குங்காலத்து உயிர் சீவான்மா எனப்படும். (எ-று.)

(க-ரை.) தத்துவங்களுடன்கூடிப் புருடன் என நின்று சுக துக்கங்களை அனுபவிக்குங்காலத்து உயிர் சீவான்மா எனப் படும் என்பதாம். (47.)

*சீவான்மாவின் பரியாயப் பெயரைத் தொகுத்துக் கூறுகின்றது.*

சறுவகேதன் கபாலிசூக் குமன்பழையோன் துருவன்
சாசுவதன் வியாபியவ்வி யத்தனே பெத்தன்
சறுவதத்துவங் களினும்வியா பியநித்தியசம் சாரி
சனுதனனே சுதந்தரவீ னன்கிஞ் சிக்ஞன்
அறிவின்மல தூடிதன்சம் மூடன்கேத் திரக்ஞன்
அநீஸ்வரனக் கிரியன்புற் கலிபுருட னன்மா
சேறிசேந்து புமான்சின்மாத் திரன்பேர் சீவன்
சேப்புமிவை பசுத்துவவான் மாவின்னும் பலவே.

(இ-ள்.) சீவன்பேர்–சீவான்மாவினுடைய பெயரைக் கூறு மிடத்து,—சறுவகேதன்–சரீரமுழுதும் வியாபித்திருப்பவன்,— கபாலி–சரீரத்தினுள்ளும் கபாலத்தை அத்தாணி மண்டபமாக உடையவன்—, சூக்குமன்–இந்திரியங்களாலறியப்படாதவன்,— பழையோன்– அநாதியாயுள்ளவன்,—துருவன்–நித்தியன்,— சா சுவதன்–பரம்பரையாக வருபவன்,—வியாபி–வியாபகத்தை யுடை யவன்,—அவ்வியத்தன்– யாதானுமொன்றைச்சார்ந்து விளங்குப வன்,—பெத்தன்–ஆணவத்தாற் றடையுண்டவன்,–சருவதத்துவங் களினும் வியாபி—மாயாகாரியமாகிய எல்லாத் தத்துவங்களினும் வியாபித்தலை உடையவன்,—அநித்தியசம்சாரி-முத்திவரை பாசப் பற்றுடையவன்;— சனுதனன்–அழியாதவன்,—சுதந்திரஈனன்– சுதந்திரம் குறைந்தவன்,— கிஞ்சிக்ஞன்–சிற்றறிவுடையவன்,—

அறிவில் மலதூடிதன்—அறிவின்றிக் கிடக்கும்வண்ணம் மலத்தாற் கட்டுப்படுத்தப்பட்டவன்,—சம்மூடன்—நன்றாக மூடப்பட்டவன்,—க்ஷேத்திரக்ஞன்—சரீரத்தைப்பெற்று அறியுந் தன்மையுடையவன்,—அநீஸ்வரன்—தலைமைத் தன்மை இல்லாதவன்,—அக்கிரியன்—செய்விக்கச்செய்யுந் திறமுடையவன்,—புற்கலி—தேகத்தோடு கூடி நிற்பவன்,—புருடன்—அங்ஙனம் நிற்குங்காலத்து புருடன் எனப் பெயர்பெறுபவன்,—ஆன்மா—அடையடுக்காது ஆன்மா என்று சொல்லுதற்குரியவன்,— செறிசெந்து—பொருந்தும் பிறப்பினையுடையவன்,—புமான்—ஆற்றலுடையவன்,—சின்மாத்திரன்—ஞானமே வடிவாகவுடையவன்,—செப்பும் இவை பசுத்துவ ஆன்மா இன்னும் பல—சொல்லப்பட்ட இவையேயன்றிப் பசுத் தன்மையினை உடைய ஆன்மாவின் நாமங்கள் இன்னும் பலவுள. (எ-று.)

(பொ-ரை) சீவான்மாவினுடைய பெயரைக்கூறுமிடத்து, சரீரமுழுதும் வியாபித்திருப்பவன்; சரீரத்துள்ளும் கபாலத்தை அத்தாணிமண்டபமாகஉடையவன்; இந்திரியங்களால் அறியப்படாதவன்; அநாதியாயுள்ளவன்; நித்தியன்; பரம்பரையாக வருபவன்; வியாபகத்தையுடையவன்; யாதானுமொன்றைச்சார்ந்து விளங்குபவன்; ஆணவத்தாற்றடையுண்டவன்; மாயாகாரியமாகிய எல்லாத் தத்துவங்களினும் வியாபித்தலையுடையவன்; முத்திவரை பாசப் பற்றுடையவன்; அழியாதவன்; சுதந்திரம் குறைந்தவன்; சிற்றறிவுடையவன்; அறிவின்றிக்கிடக்கும்வண்ணம் மலத்தாற் கட்டுப்படுத்தப்பட்டவன்; நன்றாக மூடப்பட்டவன்; சரீரத்தைப்பெற்று அறியுந்தன்மைஉடையவன்; தலைமைத்தன்மை இல்லாதவன்; செய்விக்கச்செய்யுந் திறமுடையவன்; தேகத்தோடுகூடி நிற்பவன்; அங்ஙனம் நிற்குங்காலத்துப் புருடனெனப் பெயர்பெறுபவன்; அடையடுக்காது ஆன்மாவென்று சொல்லுதற்குரியவன்; பொருந்தும் பிறப்பினை உடையவன்; ஆற்றலுடையவன்; ஞானமே வடிவாக உடையவன்; சொல்லப்பட்ட இவையே அன்றிப்பசுத்தன்மையினையுடைய ஆன்மாவின் நாமங்கள் இன்னும்பலவுள. (எ-று.)

(க-ரை.) சீவான்மாவிற்கு சர்வகெதன்முதலான பலநாமங்கள் உண்டு என்பதாம்.

ஆன்மா என்பது, சிவான்மா பரமான்மா இரண்டற்கும் பொதுச்சொல்லாயினும், அடையடுக்காது ஆன்மாவென்னுமிடத்துச் சிவான்மாவையே குறிக்கும் என்பதுணர்த்துதற்கு ஆன்மா என்றார். (48.)

## மந்திரான்மப் பிரகாரணம்.

*மந்திரான்மாவாய் நிற்கும்முறை கூறத்தொடங்கி மந்திரத்தின் பெருமை கூறுகின்றது.*

மந்திரவான் மாவையினிப் புகல்கேமச் சொரூப
மந்திரமா வனபலசோ கங்களையும் போக்கும்
சுந்தரதிவ் வியமாக்கும் பாவகர மாய்க்குஞ்
சுராசுரரி யக்கரி ராக்கதர்கின் னரர்கள்
கந்தருவர் திரியக்குச் சாதிபிதிர் மாதர்
கண்மனிதர் சித்தர்வித்தியா தரர்கள்பை சாசர்
தந்தபிரு திவிமுதலா நாதமீ றுய
சகலதத்து வஞ்சகலான் மாவிடத்து மிருக்கும்.

(இ-ள்.) மந்திர ஆன்மாவை இனிப்புகல்கேம்— மந்திரான்மாவாய் நிற்கும் முறைமையை இனிக்கூறுகின்றேம்,— மந்திரமாவன பலசோகங்களையும் போக்கும்—மந்திரங்களென்று சொல்லப்படுவன உயிர்களுக்குப் பல துன்பங்களையும் போக்கும்,—சுந்தரதிவ்வியமாக்கும்—அழகாகிய தெய்வத்தன்மையைப் பயக்கும்,—பாவகரம்மாய்க்கும்—பாவத்தைக் கெடுக்கும்,—சுரர் அசுரர் இயக்கர் இராக்கதர் கின்னரர்கள் கந்தருவர் திரியக்குச்சாதி பிதிர்மாதர்கள் மனிதர் சித்தர் வித்தியாதரர்கள் பைசாசர் சகல ஆன்மாவிடத்தும் தந்த பிருதிவிமுதலாம் நாதம் ஈறுய சகல தத்துவம் அச்சொரூபம் இருக்கும்—தேவர் அசுரர் இயக்கர் இராக்கதர் கின்னரர்கள் கந்தருவர் பாம்பு முதலிய உயிர்வர்க்கம் பிதிர்மாதர்கள் மனிதர் சித்தர் வித்தியாதரர்கள் பைசாசர்கள் ஆகிய சகல ஆன்மாக்களிடத்தும் மாயாகாரியமாகிய பிருதிவிமுதல் நாதமீறுகிய சகல தத்துவங்களிடத்தும் அம்மந்திரசொரூபம் இருக்கும். (எ-று.)

(பொ-ரை) மந்திரான்மாவாய் நிற்கும் முறைமையை இனிக் கூறுகின்றேம், மந்திரங்கள் என்று சொல்லப்படுவன, உயிர்களுக்

குப் பலதுன்பங்களையும் போக்கும். அழகாகிய தெய்வத்தன்மையைப் பயக்கும். பாவத்தைக் கெடுக்கும். தேவர், அசுரர், இயக்கர், இராக்கதர், கின்னரர்கள், கந்தருவர், பாம்புமுதலிய உயிர்வர்க்கம், பிதிர்மாதர்கள், மனிதர், சித்தர், வித்தியாதரர்கள், பைசாசர்கள் ஆகிய சகல ஆன்மாக்களிடத்தும், மாயாகாரியமாகிய பிருதிவிமுதல் நாதமீறாகிய சகல தத்துவங்களிடத்தும் அம்மந்திரசொரூபம் இருக்கும். (எ-று,)

(க-ரை) மந்திரங்கள் உயிர்களுக்குச் சகலதுன்பத்தையும் போக்கித் தெய்வத்தன்மையைத்தரும். எல்லா வுயிர்களிடத்தும் எல்லாத் தத்துவங்களிடத்தும் அம்மந்திரசொரூபம் இருக்கும் என்பதாம்.

மந்திரம் என்னும் சொல்லின் பொருள் நினைப்பவனைக் காப்பது என்பதாம். ஆதலால் பலசோகங்களையும் போக்கும் சுந்தரதிவ்வியமாக்கும் பாவகரம்மாய்க்கும் என்றார்.

எல்லா உயிர்களுக்கும் ஆதி பௌதீகம், ஆதிதைவீகம், ஆதி ஆன்மிகம் என மூன்று நிலைக்களங்களுண்டு. அவற்றுள், ஆதி பௌதீகமாவது, பூதகாரியமான உடல். ஆதிதைவிகமாவது உயிரையதிட்டித்து நிற்குந் தெய்வ சம்பந்தமான மந்திர சொரூபம். ஆதி ஆன்மிகமாவது அம்மந்திரத்தை அதிட்டித்து நிற்கும் சிவசத்தி. இவ்வாறு எல்லா உயிர்களிடத்தும் கண்டுகொள்க. இக்கருத்துணர்த்துதற்கு சகல ஆன்மாவிடத்தும் இருக்குமென்றும், தத்துவங்களும் மந்திரங்களையின்றியமையா என்பதுணர்த்துதற்குச் சகல தத்துவமும் என்றுங் கூறினர்.

ஆதி பௌதிகம் முதலிய மூன்றும், உயிர்கட்கு வினைப்பயனை அநுபவிக்கச்செய்யுமுறையில் வாயிலாகவிளங்கும். விளங்குங் கால், மின்னல் இடிமுதலியன பௌதிகமெனவும், நரை திரை மூப்புப்பிணி முதலியன தைவிகமெனவும், திருடர் பாம்பு முதலிய உயிர்வர்க்கங்கள் ஆன்மிகமெனவும் கூறப்படும். ஆதலின், சொல்லொற்றுமைகொண்டுமயங்கற்க.

அசுரர்—காசிபரின் புத்திரர். இராக்கதர்—பிரமனுற்சிருட்டிக்கப்பட்டவர்.

திரிபக்குச்சாதி— குறுக்காகவும் நெடிலாகவும் ஓடித்திரியும் பாம்பு பல்லிமுதலிய உயிர்வர்க்கங்கள். (49)

*மந்திரமின்றி ஒருபொருளுமிராதெனவும் வாசகமந்திரங்களின் முறையிதுவெனவுங் கூறுகின்றது.*

சகலமா மந்திரமு நித்தியமா யிருக்குந்
தாவரசங் கமங்கண்மந் திரமின்றி யிராவா
மிகவுமந்தி ரங்களா னதிட்டிக்கப் பட்ட
விக்கிரக மாயிருக்கும் யாதொருதே வதைக்கும்
அகரமுன்னே டாறுபதி னன்காமக் கரங்க
ளந்தவிந்து வுடனந்தத் தேவதைநா மங்கள்
பகர்வனமந் திரரூப மாகுமிவை தாமே
பரமமாய்த் தத்துவான் மகங்களா யிருக்கும்.

(இ-ள்.) சகலமாமந்திரமும் நித்தியம் ஆய் இருக்கும்—பெருமைவாய்ந்த எல்லா மந்திரங்களும் என்றும் அழியாதனவாயிருக்கும்,—தாவரசங்கமங்கள் மந்திரமின்றியிராவாம்—தாவரமெனப்படும் நிலையியற்பொருளும் சங்கமமெனப்படும் இயங்கியற்பொருளுமாகிய எல்லாப்பொருள்களும் மந்திரமின்றி இரா,—மந்திரங்களால் மிகவும் அதிட்டிக்கப்பட்ட விக்கிரகமாயிருக்கும் யாதொரு தேவதைக்கும்—மந்திரங்களினல் விசேஷமாய் அதிட்டிக்கப்பட்ட வடிவமாய்விளங்கும் எந்தத்தேவதைகட்கும்,—ஆறு அகரம் பதினான்கு அக்கரங்கள் முன்னேடு அந்த விந்துவுடன் ஆம்—அங்கமந்திரமாறும் அகரமுதல் பதினான்கு வரையுள்ள தீர்க்கமான விகிருதி அச்சு (உயிரெழுத்து) க்களை முன்னகவும் விந்துவை இறுதியாகவும் உடைய பீசத்தையுடையனவாம்,—பகர்வன அந்தத்தேவதை நாமங்கள் மந்திரரூபமாகும்—சொல்லப்படுவனவாகிய அந்தத்தேவதைகளினுடைய நாமங்களும் மந்திரரூபமாகும்,—இவைதாமே பரமமாய் தத்துவான்மகங்களாய் இருக்கும்—இவ்வங்கமந்திரங்களே (அத்தேவதைகளுக்கு) மேலான தத்துவ சொரூபங்களாக இருக்குமாதலால். (எ-று.)

(பொ-ரை.) பெருமைவாய்ந்த எல்லா மந்திரங்களும் என்றும் அழியாதனவாயிருக்கும். தாவரமெனப்படும் நிலையியற்பொருளும் சங்கமமெனப்படும் இயங்கியற்பொருளுமாகிய எல்லாப்பொருள்களும் மந்திரமின்றியிரா. மந்திரங்களால் விசேஷமாய் அதிட்டிக்கப்பட்டவடிவமாய் விளங்கும் எந்தத்தேவதைகட்கும் அங்கமந்திரம் ஆறும், அகாமுதல் பதினான்குவரையுள்ள தீர்க்கமான விகிருதி அச்சு (உயிரெழுத்து)க்களை முன்னாகவும் விந்துவை இறுதியாகவும் உடைய பீசத்தையுடையனவாம், சொல்லப்படுவனவாகிய அந்தத்தேவதைகளினுடைய நாமங்களும் மந்திரரூபமாகும். இவ்வங்கமந்திரங்களே அத்தேவதைகட்கு மேலான தத்துவசொரூபங்களாக இருக்குமாதலால். (எ-று.)

(க-ரை.) எல்லாப்பொருள்களும் மந்திரங்களால் அதிட்டிக்கப்பட்டு விளங்கும். தேவதைகள் விசேஷமாய் அதிட்டிக்கப்பட்டு விளங்குமாதலால் அத்தேவதைகளின் நாமங்களும் மந்திரரூபமாகும் என்பதாம்.

தெய்வங்களிடத்து மந்திரங்கள் நேரே யதிட்டித்தலால் அத்தெய்வங்கள் வாச்சிய மந்திரமும், அக்கரங்கள் வாசக மந்திரமுமாம். இவ்வாசகமந்திரங்களெல்லாம் பீசாக்கரத்தை முன்னாகக்கொண்டு உச்சரிக்கப்படும். அந்தப்பீசாக்கரம் உயிரெழுத்தை முன்னாகவும் விந்துவை இறுதியாகவும் உடையதாகும். ஆயினும், பீசாக்கரங்கள் பலவேறுவகைப்படும். அதற்குக் காரணம் உயிரெழுத்துக்களின் பேதமேயன்றி வேறில்லை. அந்தப்பேதங்களிவையென்பதுணர்த்துதற்கு அகரம் பதினான்கு அக்கரங்களென்றார். எனவே, அகாமுதல் பதினான்குவரையுள்ள தீர்க்கமான விகிருதி உயிர் எழுத்துக்கள் பீசாக்கரங்களுள் ஒவ்வொன்றில் விளங்குமென்க. பதினாறவது விகிருதி அக்கரமும் பீசமாகும். அது வருகின்ற செய்யுளில் வேறெடுத்துக் கூறுதலின், ஈண்டுங் கூறாது விட்டனர். (50.)

வாசகமந்திரங்களின் பேதங்களும் பீசங்களின் பேதங்களும் இவையெனக் கூறுகின்றது.

பதின்மூன்று பதினொன்றே டைந்துமூன் றொன்று
பகரிரண்டு நான்காமீ ராறே ழாறும்

விதிவழிசங் கிதைமுப்பான் மூன்றுமவ் வடைவே
வீசமாம் விந்துவினே டலங்கரிப்ப வாகும்
அதினிதயஞ் சிரசுசிகை கவசமிவை தீர்க்கம்
அத்திரநேத் திரமனுச சுவராச யுத்தம்
இதனினத் திரம்விசற் சனியாந்த மியாவு
மீறுநமோந் தமுமாதி பிரணவமு மாகும்.

(இ-ள்.) பதின்மூன்று பதினொன்று ஐந்து மூன்று ஒன்று பகர் இரண்டு நான்கு ஈராறு ஈரேழு ஆறும் அவ்வடைவே ஒடு ஆம்—உயிரெழுத்தில் பதின்மூன்றும் எழுத்தும் பதினொன்றும் எழுத்தும் ஐந்தாமெழுத்தும் மூன்றும் எழுத்தும் முதலாம் எழுத்தும் இரண்டாம் எழுத்தும் நான்காம் எழுத்தும் பன்னிரண்டாமெழுத்தும் பதினான்காமெழுத்தும் ஆறும் எழுத்தும் முறைப்படி மந்திரங்களுடன் பீசமாகக்கூடும்,—வீசமாம் விந்துவினேடு அலங்கரிப்பவாகும்—அப்பீசங்களெல்லாம் விந்துவை யிறுதியாகக் கொண்டு அலங்கரிக்கப்படுவனவாம்,— விதிவழிசங்கிதை முப்பான்மூன்றும்—விதிப்படிசம்ஹிதாமந்திரம் எனப்படும் பஞ்சப்பிரம மந்திரங்களும் அங்கமந்திரம் ஆறும் முப்பத்துமூன்று எழுத்துக்களையுடையனவாம்,—அதின் இதயம் சிரசு சிகை கவசம் இவை தீர்க்கம்—அந்த சம்ஹிதாமந்திரமாகிய அங்கமந்திரத்துள் இருதயம் சிரசு சிகை கவசம் என்னுமிவை தீர்க்கபீசத்தையுடையனவாம்,—அத்திரம் நேத்திரம் அனுசசுவராசயுத்தம்—அத்திரம் நேத்திரம் என்னுமிரண்டினுமுள்ள பீசம் அனுஸ்வாரத்தோடுகூடியிருக்கும்,—இதனின் அத்திரம் விசற்சனியாந்தம்—இந்த அனுஸ்வாரத்தினேடு கூடியிருப்பதனுள் அத்திரபீசம் விசற்கத்தை அந்தமாகவுடையது,—யாவும் ஈறு நமோந்தமும் ஆதிபிரணவமுமாகும்—எல்லா மந்திரங்களும் இறுதியில் நம என்னுமுடிவையும் ஆதியில் பிரணவத்தையும் உடையனவாம். (எ-று.)

(பொ-ரை,) உயிரெழுத்தில் பதின்மூன்றுமெழுத்தும் பதினொன்றும் எழுத்தும் ஐந்தாம் எழுத்தும் மூன்றும் எழுத்தும் முதலாம் எழுத்தும் இரண்டாம் எழுத்தும் நான்காம்எழுத்தும் பன்னிரண்டாமெழுத்தும் பதினான்காம் எழுத்தும் ஆறும் எழுத்

னும் முறைப்படி மந்திரங்களுடன் பீசமாகக்கூடும். அப்பீசங் களெல்லாம் விந்துவை இறுதியாகக்கொண்டு அலங்கரிக்கப்படுவ னவாம். விதிப்படி சம்ஹிதாமந்திரமெனப்படும் பஞ்சப் பிரமமந் திரங்களும் அங்கமந்திரம் ஆறும் முப்பத்துமூன்று எழுத்துக் களையுடையனவாம். அந்த சம்ஹிதாமந்திரமாகிய அங்கமந்திரத் துள், இருதயம் சிரசு சிகை கவசம் என்னும் இவை தீர்ககபீசத் தையுடையனவாம். அத்திரம் நேத்திரம் என்னுமிரண்டினு முள்ள பீசம் அனுஸ்வாரத்தோடு கூடியிருக்கும். இந்த அனுஸ் வாரத்தினோடு கூடியிருப்பதனுள் அத்திரபீசம் விசற்கத்தை அந் தமாகவுடையது. எல்லா மந்திரங்களும் இறுதியில் நம என்னும் முடியையும் ஆதியில் பிரணவத்தையும் உடையனவாம். (எ-று.)

(க-ரை.) வாசகமந்திரங்கள் பிரமமந்திரம் அங்கமந்திரம் என இருவகைப்படுமெனவும், அவற்றுள், பிரமமந்திரங்கள் பிர கிருதி பீசத்தையுடையனவெனவும், அங்கமந்திரங்கள் விகிருதி பீசத்தையுடையனவெனவும், எல்லாமந்திரங்களும் பிரணவத்தை முன்னாகவும் நமஎன்பதை இறுதியாகவுங்கொண்டு விளங்குமென வுங்கூறிற்றென்பதாம்.

ஓடு ஆம் என விரிந்து அது தனித்தனி சென்றியையும்.

ஈராறு என்ற விடத்துள்ள ஈர் என்பது எழுடனும் சென்றி யையும்.

பஞ்சப்பிரமமந்திரங்களும் சடங்கமந்திரங்களும் சம்ஹிதா மந்திரமெனப்படும். அவ்விரண்டும் தனித்தனி முப்பத்துமூன்று எழுத்துக்களையுடையன. அவைவருமாறு:—ஈசானம் ஆறு, தற் புருடம் எழு, அகோரம் ஆறு, வாமதேவம் எழு, சத்தியோசாதம் எழு, ஆக முப்பத்துமூன்று. இருதயம் ஆறு, சிரசு ஐந்து, சிகை ஐந்து. கவசம் ஆறு, நேத்திரம் எழு, அத்திரம் நான்கு, ஆக முப் பத்துமூன்று.

பஞ்சப்பிரமமந்திரங்கட்கு உயிரெழுத்தில் பிருகிருதி அக்ஷர ங்களாகிய ஓ, எ, உ, இ, அ, என்னும் ஐந்தும் பீசங்களாகும். அங்கமந்திரங்கட்கு விகிருதி அக்ஷரங்களாகிய ஆ. ஈ, ஊ, ஐ,

ஔ, அ: என்னுமாறும் பீசங்களாகும். இவற்றுள், பிரகிருதி அக்ஷரங்களை உணர்த்துதற்கு, பதின்மூன்று பதினொன்று ஐந்து மூன்று ஒன்று எனவும், விகிருதிபக்ஷரங்களை உணர்த்துதற்கு இரண்டு, நான்கு, ஈராறு ஈரேழு, ஆறு எனவுமகூறி, முன்னைய ஐந்தும் பிரமமந்திரங்கட்குப் பீசமாகுமென்பதும், பின்னைய ஐந்தும் அங்கமந்திரங்கட்குப் பீசமாகுமென்பதும் உணர்த்துதற்கு அவ்வடைவேயெனவும் கூறினர். இங்ஙனம் கூறப்பட்டவற்றுள் அ: என்னும் பதினாறுவது விகிருதி அக்ஷரம் கூறப்படாமையின் அவ்வக்ஷரம்வரும் அத்திரமந்திரத்தை எடுத்துக்காட்டி விசற்சனியாந்தமெனறுர்.

வீசமாம் என்றவிடத்து ஆம் அசை. அநுஸ்வாரம் விந்துவென்பன ஒரு பொருட்சொற்கள். (51)

எந்தக்கிரியையும் விதிப்படி மந்திரத்துடன்செய்யிற் சித்தியாகுமெனக் கூறுகின்றது.

இதரதே வதைக்குப்பஞ் சப்பிரமங் கூடா
தீசனுக்கா மாருக்கு மங்கங்கள் கூடும்
அதிபதியா வாகன தாபனர்க் கியங்க
ளாசமன நியாசந்தா ரணேதியான கன்மம்
விதமுறுமர்ச் சனைபலிவி தானசேப வோமம்
விமலனுக்கெவ் வாறுரைத்தோ மந்தவிதி வழியே
கதிதருமந் திரங்கிரியை யெல்லாத்தே வதைக்குங்
கருமம்வழு வறப்புரியக் கருமசித்தி யாமே.

(இ-ள்.) இதர தேவதைகட்கு பஞ்சப்பிரமம் கூடாது—சிவபெருமானின் வேறான தேவதைகட்குப் பஞ்சப்பிரம மந்திரம் கூடாது,—ஈசனுக்கு ஆம்—சிவபெருமானுக்கு மட்டும் (பஞ்சப்பிரமமந்திரங்கள்) ஆகும்,—ஆருக்கும் அங்கங்கள் கூடும்—எல்லாத் தேவதைகளுக்கும் அங்க மந்திரம் ஆறும் கூடும்,—அதிபதி ஆவாகன தாபன அர்க்கியங்கள் ஆசமனம் நியாசம தாரணை தியான கன்மம் விதமுறு அர்ச்சனை பலிவிதானசெப ஓமம—மந்திரங்களுக்கு அதிபதியாய் விளங்கும் தெய்வங்கட்கு ஆவாஹனம செய்தலும் தாபனம் செய்தலும் அர்க்கியங்கள் கொடுத்தலும் ஆசமனம் செய்

தலும் நியாசம் செய்தலும் தாரணை செய்தலும் தியானம் செய்தலும் கிரியை செய்தலும் பலவிதமான அர்ச்சனை செய்தலும் பலியிடுதலும் அலங்காரஞ் செய்தலும் செபம் செய்தலும் ஓமம் செய்தலும் (ஆகிய இவைகள்),—விமலனுக்கு எவ்வாறு உரைத்தோம் அந்த விதி வழியே எல்லாத் தேவதைக்கும்—சிவபெருமானுக்கெவ்வாறு கூறினோமோ அவ்வாறே எல்லாத் தேவதைகட்கும் (ஆகும்),—மந்திரங்கிரியை கருமம் வழுவறப்புரிய கருமசித்தியாம் கதிதரும்— மந்திரங்கிரியை பாவனை யென்னும் இவற்றைக் குற்றமறச்செய்யின் அச்செயல் முற்றுப்பெறும். (அதனால் போகமோக்ஷமென்னுமிரண்டனுள் விரும்பிய) பேறு உண்டாகும். (எ-று.)

(பொ-ரை.) சிவபெருமானின் வேறான தேவதைகட்குப் பஞ்சப்பிரம மந்திரங்கூடாது சிவபெருமானுக்கு மட்டும் பஞ்சப்பிரம மந்திரங்கள் ஆகும். எல்லாத்தேவதைகட்கும் அங்க மந்திரம் ஆறும் கூடும். மந்திரங்களுக்கு அதிபதியாய் விளங்கும் தெய்வங்கட்கு ஆவாஹனம் செய்தலும் தாபனம்செய்தலும் அர்க்கியங்கள் கொடுத்தலும் ஆசமனஞ் செய்தலும் நியாசம் செய்தலும் தாரணை செய்தலும் தியானம் செய்தலும் கிரியை செய்தலும் பலவிதமான அர்ச்சனை செய்தலும் பலி இடுதலும் அலங்காரஞ் செய்தலும் செபஞ் செய்தலும் ஓமஞ் செய்தலுமாகிய இவைகள் சிவபெருமானுக்கெவ்வாறு கூறினோமோ அவ்வாறே எல்லாத் தேவதைகட்கும் ஆகும். மந்திரங் கிரியை பாவனையென்னும் இவற்றைக் குற்றமறச் செய்யின் அச்செயல் முற்றுப்பெறும். அதனால் போகமோக்ஷமென்னும் இரண்டனுள் விரும்பிய பேறு உண்டாகும். (எ-று.)

(க-ரை.) மந்திரங் கிரியை பாவனை என்னும் மூன்றும் குற்றமறச் செய்யப்படின் பலனுண்டாகுமென்பதாம்.

கருமம் என்பது மனத்தின் தொழிற்பாடாகிய பாவனையைக் குறித்து நின்றது. (52)

மந்திரத்தால் தேவதையை வழிபடும் முறைமை கூறுகின்றது.

மந்திரஞ்சொல் லாதிருந்த கிரியைகட் கிதய
மந்திரத்தி னாற்புரிக மந்திரகன் மங்கள்

அந்தவந்த விதிவழுவா மந்திரத்தாற் புரிக
வாதரவான் மந்திரத்தை யநுசரிக்கு மவன்றான்
எந்தத்தே வதையையருச் சனைபுரிவ னந்த
விறைவடிவாய்த் தனைப்பரமீ கரணம்பண் ணிடுக
மந்திரமெத் தேவதைக்கெம் மந்திரமுண் டந்த
மந்திரம்வா சகமாமத் தேவதைவாச் சியமே.

(இ-ள்.) மந்திரஞ் சொல்லாதிருந்த கிரியைகளுக்கு இதய மந்திரத்தினாற் புரிக—மந்திரஞ் சொல்லப்படாத கிரியைகளுக்கு இதய மந்திரத்தால் (அக்கிரியைகளைச்) செய்க,—மந்திர கன்மங்கள் அந்த அந்த விதிவழுவா மந்திரத்தாற் புரிக—எந்த மந்திரம் எந்தக் கிரியைக்கு விதிக்கப்பட்டதோ அந்த அந்த விதியில் வழுவாதவண்ணம் மந்திரத்தாற் கிரியையைச் செய்க,—ஆதரவால் மந்திரத்தை அநுசரிக்குமவன்றான்—அன்புடன் மந்திரத்தைச் செபிப்பவன்,—எந்தத் தேவதையை அருச்சனை புரிவன் அந்த இறை வடிவாய்த்தனை பரமீகரணம் பண்ணிடுக—எத்தெய்வத்தை யருச்சனைபுரிகின்றானோ அந்தத்தெய்வத்தின் வடிவாய் தன்னைப் பாவித்திடுக,—மந்திரம எத்தேவதைக்கு எம்மந்திரம உண்டு அந்த மந்திரம் வாசகமாம் அத்தேவதை வாச்சியம்—மந்திரசொரூபமாகிய எந்தத்தேவதைக்கு எந்த மந்திரமுண்டோ அந்த மந்திரம் வாசகமும் அந்தத்தேவதை வாச்சியமுமாகும். (எ-று.)

(பொ-ரை.) மந்திரஞ்சொல்லப்படாத கிரியைகட்கு இதய மந்திரத்தால் அக்கிரியைகளைச்செய்க. எந்த மந்திரம் எந்தக்கிரியைக்கு விதிக்கப்பட்டதோ அந்தவந்தவிதியில் வழுவாதவண்ணம் மந்திரத்தால் கிரியையைச்செய்க. அன்புடன் மந்திரத்தைச் செபிப்பவன் எந்தத்தெய்வத்தை அர்ச்சனைபுரிகின்றானோ அந்தத்தெய்வத்தின் வடிவாய்த்தன்னைப்பாவித்திடுக. மந்திரசொரூபமாகிய எந்தத் தேவதைக்கு எந்த மந்திரம் உண்டோ அந்த மந்திரம் வாசகமும் அந்தத்தேவதை வாச்சியமுமாகும். (எ-று.)

(க-ரை.) மந்திரத்தால் தெய்வத்தை வழிபடுபவன் தன்னை அந்தத்தெய்வமாகவே பாவித்து வழிபடல்வேண்டும். மந்திரம் சொல்லும,தெய்வம் அச்சொல்லிற்குரியபொருளுமாகும்என்பதாம்

அவன்றான் என்றவிடத்து தான் என்பது பகுதிப்பொருள் விகுதி. அசையெனினும் ஆம். (53)

*மந்திரத்தை உச்சரிக்கும் முறையும் உச்சரித்தலால் உண்டாம் பயனுங் கூறுகின்றது.*

மந்திரங்கள் வாசகோ பாஞ்சுமா னதமாய்
வருதூல சூக்குமமாய்ப் பரமுமா யிருக்கும்
சுந்தரவாச் சியமாய சித்திதருந் தூலஞ்
சூக்குமந்தா னிகழ்யோக சித்திதரும் பரம
மந்திரந் தான்பிறப்பை மருவிடா தினிமேல்
மாண்புடைய பரமுத்தி மருவுவித் திடுமேல்
விந்துவெலாம் வீசாந்த சையுத்த மாகும்
வீசத்தோ டிரச்சுவஞ்சேர்ந் திடும்பஞ்சப் பிரமம்.

(இ-ள்.) மந்திரங்கள் வாசக உபாஞ்சு மானதமாய் வருதூல சூக்குமமாய் பரமுமாய் இருக்கும்—மந்திரங்களை உச்சரிக்கும்முறை வாசகம் உபாஞ்சு மானதம் என மூவிதமாய் அவை முறையே வருகின்ற தூலமாயும் சூக்குமமாயும் பரமாயுமிருக்கும்,— தூலம் சுந்தரவாச் சியமாய சித்திதரும்—அவற்றுள், தூலமெனப்படும் வாசகம் அழகுபொருந்திய சொற்களின்வண்ண மாகின்ற சித்தியைத்தரும்,— சூக்குமந்தான் நிகழ்யோக சித்திதரும்—சூக்குமமெனப்படும் உபாஞ்சு விளங்குகின்ற யோகசித்தியைத்தரும்,— பரமமந்திரந்தான் இனிமேல் பிறப்பை மருவிடாது மாண்புடைய பரமுத்தி மருவுவித்திடும்—பரம் எனப்படும் மானதமந்திரம், உச்சரிக்கின்ற தான் இனிமேற் பிறவியைப் பொருந்தாத வண்ணம் மாட்சிமைப்பட்ட பரமுத்தியைப் பொருந்தும்படி செய்யும்,— விந்து எலாம் வீசாந்த சையுத்தமாகும்—விந்துவெனப்படுவது எல்லாப் பீசாக்கரங்களின் இறுதியிற் கூடியிருக்கும்,—பஞ்சப்பிரமம் இரச்சுவம் வீசத்தோடு சேர்ந்திடும்—பஞ்சப்பிரம மந்திரமானது குறிலையுடைய பீசாக்கரத்தோடு சேர்ந்திருக்கும். (எ-று.)

(பொ-ரை.) மந்திரங்களை உச்சரிக்குமுறை வாசகம் உபாஞ்சு மானதமென மூவிதமாய் அவை முறையே வருகின்ற தூலமாயும் சூக்குமமாயும் பரமாயும் இருக்கும். அவற்றுள், தூலமெனப்

படும் வாசகம் அழகும்பொருந்திய சொற்களின் வண்ணம் ஆகின்ற சித்தியைத்தரும். சூக்குமமெனப்படும் உபாஞ்சு விளங்குகின்ற யோகசித்தியைத் தரும். பரமெனப்படும் மானதமந்திரம், உச்ச ரிக்கின்ற தான் இனிமேற் பிறவியைப்பொருந்தாதவண்ணம் மாட்சி மைப்பட்ட பரமுக்தியைப் பொருந்தும்படி செய்யும். விந்துவெ னப்படுவது எல்லாப் பீசாக்கரங்களின் இறுதியிற் கூடியிருக்கும். பஞ்சப்பிரமமந்திரமானது குறிலையுடைய பீசாக்கரத்தோடு சேர்ந் திருக்கும். (எ-று.)

(க-ரை.) மந்திரங்களை உச்சரிக்குமுறை வாசகம் உபாஞ்சு மானதம் என மூவகைப்பட்டு அவை முறையே தூல சூக்கும பர மாய் வாக்குச்சித்தியையும் யோகசித்தியையும் பரமுத்தியையும் தரும் என்பதாம்.

வாசகம்—தனக்கும் பிறர்க்கும் கேட்கும்படி செபித்தல். வாசகத்தை பாடியம் என்றும் கூறுவர்.

உபாஞ்சு—தன் செவிக்குமட்டுங்கேட்கும்படி செபித்தல்.

மானதம்—வாக்காற்செபிக்காது அறிவாற்கணித்தல். (54)

மந்திரங்கள் பலவாயினும் உண்மையில் ஒன்றேயெனக் கூறுகின்றது.

ஒருதீபந் தனிற்பலதீ பங்கொளுத்தி னற்போ
லுயர்சிவமந் திரத்தனந்த மந்திரங்க ளுண்டாம்
விரவுதே வதைநாலு விதவருண மாக
மேவுகினு மந்திரங்க ளெல்லாமோன் றேயா
மருவுபுனல் பலவிதமா யினுஞ்சலமேன் றென்று
வழங்குதல்போ லாகுநவில் தேவாரா தனைகள்
புரிவனத் தேவதைக்காம் நியாதங்க டனக்கும்
புரிந்தந்த விறைவடிவாய்ப் பூசைசெய்யக் கடவன்.

(இ-ள்.) ஒருதீபந்தனில் பலதீபங் கொளுத்தினற்போல்— ஒரு தீபத்திலிருந்து பல தீபங்கொளுத்தியது போல,—உயர்சிவ மந்திரத்து அனந்தமந்திரங்கள் உண்டாம்—மேலான சிவமந்திரத்தி லிருந்து அநேக மந்திரங்கள் உண்டாம்,—விரவுதேவதை நாலு

வித வருணமாக மேவுகினும்—மந்திரங்கள் அதிட்டிக்குந்தெய்வங்கள் பலவித பேதங்களாகப் பொருந்திநிற்பினும்,—மந்திரங்கள் (போல்) எல்லாம் ஒன்றேயாம்—மந்திரங்கள் பலவாயினும் ஒன்றேயாதல்போல எல்லாத்தெய்வங்களும் சிவமாகிய ஒருபொருளேயாகும் (எதுபோலுமெனின்),— மருவு புனல் பலவிதமாயினும் சலம் என்று ஒன்றுவழங்குதல்போலாகும்—பொருந்துகின்ற புனல் (ஏரி ஓடை முதலிய வேறுபாட்டால்) பல வேறுவகைப்படினும் நீரென்று ஒன்றாக வழங்குதல்போலாகும்,— நவில் தேவாராதனைகள்புரிவன்—சொல்லாநின்ற தேவாராதனைகள் செய்பவன்,— அத்தேவதைக்கு ஆம் நியாதங்கள் தனக்கும் புரிந்து—அந்தத் தேவதைக்கு ஆகின்ற நியாசங்கள் தனக்குஞ்செய்து,— அந்த இறைவடிவாய் பூசைசெய்யக்கடவன்—அந்தத்தேவதைவடிவாய்த் தானிருந்து பூசைசெய்யக்கடவன். (எ-று.)

(பொ-ரை) ஒருதீபத்திலிருந்து பலதீபம் கொளுத்திய வாறுபோல மேலான சிவமந்திரத்திலிருந்து அநேகமந்திரங்கள் உண்டாம். மந்திரங்கள் அதிட்டிக்குந்தெய்வங்கள் பலவிதபேதங்களாகப் பொருந்திநிற்பினும் மந்திரங்கள் பலவாயினும் ஒன்றேயாதல்போல எல்லாத்தெய்வங்களும் சிவமாகிய ஒருபொருளேயாம். எதுபோலுமெனின், பொருந்துகின்ற புனல், ஏரி ஓடை முதலிய வேறுபாட்டால் பல வேறுவகைப்படினும் நீர் என்று ஒன்றாக வழங்குதல்போலாகும். சொல்லாநின்ற தேவாராதனைகள் செய்பவன் அந்தத்தேவதைக்காகின்ற நியாசங்கள் தனக்குஞ் செய்து அந்தத்தேவதை வடிவாய்த் தானிருந்து பூசைசெய்யக் கடவன். (எ-று.)

(க-ரை.) மந்திரங்கள் பலவாயினும் அவை எல்லாம் சிவமந்திரத்தின் பேதங்களே. அது, ஏரி ஓடை முதலியவற்றால் ஏரி நீர் ஓடை நீர் முதலியனவாகப் பல வேறுவகைப்படினும் நீர் ஒன்றின் பேதங்களே ஆதல்போலும் என்பதாம்.

மேல், ஐம்பத்திரண்டாஞ்செய்யுளில் பாவிக்குமாறு கூறி இச்செய்யுளில் நியாசஞ்செய்யுமாறு கூறுமுறையில் பாவித்தலும் உடன்கூறினமையால் கூறியது கூறலின்மையுணர்க.

நியாசமாவது குறித்ததானங்களில் தெய்வத்தைப் பாவித்துத்தொடுதல். (55)

மந்திரங்கள் பலவாதற்குக் காரணமும், உயிர் மந்திரான்மாவாய் நிற்கும் முறையும் கூறுகின்றது.

யாதொருதே வதையெவ்வா றிருக்கு மத்தே
வதைகட்கெவ் விதங்களுப சாரஞ்சாத் திரத்தில்
ஓதுவிதிப் படிபுரியப் பலிக்குமுயர் பலங்கள்
உறுசுரோ தாக்களபிப் பிராயபே தத்தால்
பேதமா மந்திரமும் வருணபே தங்கள்
பிறங்குவன்ன குணம்காட்டும் படிகமே போல
நாதமய மாமொருமந் திரமேபல் விதமாய்
நவிலுமந்தி ரான்மாவெப் பொருளையுஞ்சா திப்பன்.

(இ-ள்.) யாதொருதேவதை எவ்வாறு இருக்கும் அத்தேவதைகட்கு எவ்விதவுபசாரங்கள் சாத்திரத்தில் ஓதும்—எந்தத் தேவதை எவ்வாறிருக்குமெனவும் அந்தத்தேவதைகளுக்கு எவ்வாறு உபசாரம் செய்யவேண்டுமெனவும் நூல்களிற் கூறப்படுமோ,—விதிப்படி புரிய உயர்பலங்கள் பலிக்கும்—அம்முறைப்படி செய்யின் மேலான பலன்கள் கைகூடும்,—சுரோதாக்கள் உறு அபிப்பிராயபேதத்தால் மந்திரமும் பேதமாய்—கேட்கிறவர்களுடைய அபிப்பிராயபேதத்தால் மந்திரங்கள் பலவாகும்,—வருணபேதங்கள் பிறங்குவன்ன குணம்காட்டும் படிகமேபோல—செம்மைமுதலிய நிறபேதங்களை விளங்குகின்ற ஒளியின்றன்மைகாட்டும் படிகமபோல,— நாதமயமாம் ஒரு மந்திரமே பல்விதமாய் நவிலும்—நாதமயமாகின்ற ஒரு மந்திரமே பலவிதமாகச் சொல்லப்படும்,—எப்பொருளையும் சாதிப்பன் மந்திரான்மா—எல்லா மந்திரங்களையும் பொருந்தியநுட்டிக்குங்காலத்து (உயிர்) மந்திரான்மாவென விளங்கும். (எ-று.)

(பொ-ரை.) எந்தத்தேவதை எவ்வாறிருக்குமெனவும் அந்தத்தேவதைகளுக்கு எவ்வாறு உபசாரங்கள் செய்யவேண்டுமெனவும் நூல்களிற்கூறப்படுமோ அம்முறைப்படிசெய்யின் மேலான பலன்கள் கைகூடும். கேட்கிறவர்களுடைய அபிப்பிராயா

பேதத்தால் மந்திரங்கள் பலவாகும். செம்மைமுதலிய நிறபேதங்களை, விளங்குகின்ற ஒளியின்றன்மைகாட்டும் படிகம்போல, நாதமயமாகின்ற ஒருமந்திரமே பலவிதமாகச்சொல்லப்படும். எல்லா மந்திரங்களையும் பொருந்தி அநுட்டிக்குங்காலத்து உயிர மந்திரான்மாவென விளங்கும். (எ-று.)

(க-ரை.) படிகத்தினொளியானது சாரப்பட்டபொருள்களின் நிறங்களின் பேதத்தால் பலவாக விளங்குமாறுபோல நாதமயமான ஒருமந்திரமே கேட்கிறவர்களுடைய அபிப்பிராய பேதங்களால் பலவாகும். அம்மந்திரங்களைப் பொருந்தி நிற்குங்காலத்து உயிர் மந்திரான்மாவாகுமென்பதாம். (56)

## பரமான்மப் பிரகரணம்.

*பரமான்மாவாய் நிற்கும்முறை கூறுகின்றது.*

பரமான்மா வினிப்புகல்கேம் பராற்பரமாய்ப் பரனாய்ப்
பகருமந்திரா தீதனாகிச் சருவக்ஞ னாகித்
தருசகல ரூபமய னாய்ச்சருவான் மாவாய்ச்
சருவகத னாய்க்குணரூ பவர்ணரகி தனுமாய்
நிருவிகற்ப னாய்நிரஞ் சனநிரா மயனாய்
நிராதார னாகியைம் பூதவியா பகனாய்த்
துருவனா யதீந்திரிய நிராக்கிரியனாய்ச் சர்வ
தோமுகனு மாயுவமை யிலனுமா யிருப்பன்.

(இ-ள்.) பரமான்மா இனிப்புகல்கேம்—பரமான்மாவாய் நிற்கும் முறையை இனிக்கூறுகின்றேம்,— பராத்பரமாய்—மேலானவற்றுள் மேலானதாய்,—பரனாய்—கடவுளாய்,— பகருமந்திராதீதனாகி—சொல்லப்பட்ட மந்திரங்கட்கு அப்பாற்பட்டவனாய்,—சர்வக்ஞனாகி—எவற்றையு மறிபவனாய்,— தருசகல ரூபமயனாய்—தோற்றுகின்ற எல்லாவடிவங்களின் சாரமாய்,—சருவான்மாவாய்—எல்லா ஆன்மாக்களுந்தானாய்,— சருவகதனாய் = எங்கும் வியாபகனாய்,— குணரூபவர்ண ரகிதனுமாய்—குணமும் வடிவும் நிறமும் இல்லாதவனாய்,— நிருவிகற்பனாய் நிரஞ்சன நிராமயனாய் நிராதாரனாகி—விகற்பமில்லாதவனாய் மலமில்லாதவனாய் துன்பமில்லாதவனாய் தனக்கோராதாரமில்லாதவனாய்,— ஐம்பூத வியாபகனாய்—ஐந்து

பூதங்களினும் வியாபித்து நிற்பவனாய்,— துருவனாய்—சலிப்பில்லாதவனாய்,—அதீந்திரிய நிராக்கிரியனாய்—இந்திரியங்கட்கு அப்பாற்பட்டவனாய் செயலில்லாதவனாய்,— சர்வதோமுகனுமாய்—எங்கும் நோக்கமுடையனுமாய்,— உவமையிலனுமாய் இருப்பன்—தனக்கோர் உவமை இல்லாதவனுமாய் விளங்குவன். (எ-று.)

(பொ-ரை) பரமான்மாவாய் நிற்கும் முறையை இனிக்கூறுகின்றேன்:—மேலானவற்றுள் மேலானதாய், கடவுளாய், சொல்லப்பட்ட மந்திரங்கட்கு அப்பாற்பட்டவனாய், எவற்றையும் அறிபவனாய், தோற்றுகின்ற எல்லாவடிவங்களின் சாரமாய், எல்லா ஆன்மாக்களுந்தானாய், எங்கும் வியாபகனாய், குணமும் வடிவமும் நிறமும் இல்லாதவனாய், விகற்பமில்லாதவனாய், மலமில்லாதவனாய், துன்பமில்லாதவனாய், தனக்கோராதாரமில்லாதவனாய், ஐந்து பூதங்களினும் வியாபித்து நிற்பவனாய், சலிப்பில்லாதவனாய், இந்திரியங்கட்கு அப்பாற்பட்டவனாய், செயலில்லாதவனாய், எங்கும் நோக்கமுடையவனுமாய், தனக்கோருவமை இல்லாதவனுமாய் விளங்குவன். (எ-று.)

(க-ரை) உயிர் பரமான்மாவைச்சார்ந்து நிற்குங்காலத்து அதன் குணமுற்றுத் தன்மாட்டுவிளங்கப் பரமான்மாவாய் நிற்கும் என்பதாம்.

பரமான்மாவைச்சார்ந்து பரமான்மாவாய் நிற்குங்காலத்து, பரமான்மாவின் குணங்கள் சார்ந்ததின் வண்ணமாந்தன்மையுடைய தன்மாட்டுவிளங்கித்தோன்றுமாதலின் அக்குணங்களை பரமான்மாவாய்நிற்கும் உயிரின்மேலேற்றிக்கூறியவாறு கண்டுகொள்க. (57.)

உபாசகன் எவ்வாறு உபாசிக்கின்றானோ அவ்வாறுஆவன் எனக்கூறுகின்றது.

உரைசெயுபா சகனுவா னுருவமா யிருக்கு
முருவத்தைப் பாவித்தா லுருவமே யாவன்
தரணிமுதற் சிவதத்து வாந்தமாய்ச் சொல்லுஞ்
சடத்துவா ரூபமெல்லாம் ரூபமெனப் படுமால்

சொரூபத்து வாதீத மானபர மான்ம
சொரூபத்தைப் பாவிப்போ னச்சொரூப மாவன்
அருளதனுற் சகலகா மியங்களையுங் கொடுப்பா
னுன்மாவே யாறுவிதப் படுந்தொகையைச் சொல்வாம்.

(இ-ள்.) உரைசெய் உபாசகன் ஆவான்—சொல்லுகின்ற உபாசகன் என்பவன்,—உருவமாய் இருக்கும் உருவத்தைப் பாவித்தால் உருவமேயாவன்—உருவமுடையதாய் விளங்கும் உருவப்பொருளைப்பாவித்து உபாசனை செய்யின் (உபாசிக்கின்றதானும்) அவ்வுருவமேயாவன்,—தரணிமுதல் சிவதத்துவ அந்தமாய்ச்சொல்லும் சடஅத்துவா ரூபம் எல்லாம் ரூபம் எனப்படும ஆல்—பிருதிவி தத்துவமுதல் சிவதத்துவமுடிவாகச் சொல்லப்படும் (தத்துவமுதலிய) ஆறத்துவாக்களின் வடிவமெல்லாம உருவமெனப்படும். ஆதலால்,—தத்துவாதீத சொரூபமான பரமான்மசொரூபத்தைப் பாவிப்போன் அச்சொரூபமாவன்—தத்துவங்களைக்கடந்து நிற்கும் ஞானசொரூபமான சிவசொரூபத்தைப்பாவித்து உபாசிப்பவன் அச்சிவசொரூபமாவன்,—அருளதனுல சகலகாமியங்களையும் கொடுப்பான்—(சிவோபாசனையால் சிவமாய் விளங்கும அவன் தன்னை வழிபடுபவர்க்குக்) கிருபையினுல் விரும்பிய எவற்றையும் கொடுப்பான். (எ-று.)

(பொ-ரை) சொல்லுகின்ற உபாசகன் என்பவன் உருவமுடையதாய் விளங்கும் உருவப்பொருளைப் பாவித்து உபாசனை செய்யின் உபாசிக்கின்றதானும் அவ்வுருவமே யாவன். பிருதிவிதத்துவமுதல் சிவதத்துவம் முடிவாகச் சொல்லப்படும் தத்துவமுதலிய ஆறத்துவாக்களின் வடிவமெல்லாம் உருவமெனப்படுமாதலால், தத்துவங்களைக்கடந்து நிற்கும்ஞானசொரூபமான சிவசொரூபத்தைப் பாவித்து உபாசிப்பவன் அச்சிவசொரூபமாவன். சிவோபாசனையால் சிவமாய் விளங்குமவன் தன்னைவழிபடுவோர்க்குக் கிருபையினுல் விரும்பிய எவற்றையும் கொடுப்பான். (எ-று.)

(க-ரை) தத்துவங்களிற் கட்டுப்பட்டிருக்குந் தெய்வங்களை உபாசனைசெய்யாது தத்துவங்களைக்கடந்து நிற்கும் சிவனைஉபாசிப்பவன் சிவமாவன் என்பதாம்.

அத்துவாக்கள் ஆறுவருமாறு:—மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை, என்பனவாம். வன்னம் என்பது எழுத்து. எழுத்தும், எழுத்தாலாகிய பதமும் பதத்தாலாகிய மந்திரமும் ஆகிய மூன்றும் சொல்வடிவினவாகலின் சொற்பிரபஞ்சமெனப்படும். தத்துவமும் புவனமும், கலையுமாகிய மூன்றும் பொருள் வடிவினவாகலின் பொருட்பிரபஞ்சமெனப்படும். கலை என்பது நிவர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என ஐவகைப்படும். சிற்சத்தியின் வியாபார பேதம்பற்றி இவ்வாறு ஐவகைப்பட்டன. இக்கலைகள் ஐந்தனையும் முறையே பிரமன், விட்டுணு, உருத்திரர், மகேசுரர், சதாசிவர், என்னும் ஐவரும் ஆதாரமாகக்கொண்டு நின்று சிருட்டிமுதலிய ஐந்தொழிலினையும் புரிவர். இக்கலைகளின் பேதங்களும் பெயரின் காரணங்களும் சிவஞானபோதச் சிற்றுரை விளக்கத்திற் கூறியிருக்கின்றுமாதலின் அவ்விடத்துக்காண்க. இந்த ஆறும் உயிர்கள் புண்ணியபாவங்களை ஈட்டுதற்கும் அவற்றை ஒழித்து வீடுபெறுதற்கும் வழியாதலின் அத்துவாவெனப்பட்டன.

இச்செய்யுளின் இறுதி அடியிலுள்ள பிற்பாகம் வருஞ்செய்யுளிற் சேர்த்துக் கூறப்படும். (58.)

ஆன்மாவின் பேதத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.

பூதபரி ணமத்தாற் பூதான்மா வாவன்
புகல்சத்தம் போருந்தலினந் தரான்மா வாவன்
மேதகு தத்துவத்தாற் றத்துவான்மா வாவன்
விளம்புபிர கிருதிகுணந் தழீஇச்சுகதுக் கங்கள்
தீதறவே புசித்தலினற் சீவான்மா வாவன்
றிகழ்தருமந் திரப்புணர்வான் மந்திரான்மா வாவன்
யாதுமற விட்டவவன் பரமான்மா வாவன்
ஏகான்மா வேயாறு திறனுமா யிருப்பன்.

(இ-ள்.) ஆன்மாவே ஆறுவிதப்படும் தொகையைச் சொல்வாம்—ஒரு ஆன்மாவே ஆறுவிதப்படுதலால் அத்தொகையைத் தொகுத்துக்கூறுவாம்,—பூதபரிணமத்தால் பூதான்மா ஆவன்—பூதபரிணமமாகிய உடம்போடுகூடி நிற்றலால் பூதான்மா எனப்படு

வன்,—புகல்சத்தம் பொருந்தலின் அந்தரான்மா ஆவன்—சொல்லுகின்ற வாக்குக்களோடுகூடி நிற்றலால அந்தரான்மா எனப்படுவன்,—மேத தத்துவத்தால் தத்துவான்மா ஆவன்—மேன்மைதங்கிய தத்துவங்களோடுகூடி நிற்றலால் 'தத்துவான்மா எனப்படுவன்,—விளம்பு பிரகிருதி குணம் தழீஇசுகதுக்கங்கள் தீதறவே புசித்தலினால் சீவான்மா ஆவன்—சொல்லுகின்ற பிரகிருதியின் குணமாகிய சாத்துவித இராசத தாமதங்களைப்பொருந்திச் சுகதுக்கபோகங்களைக்குற்றமற அனுபவிக்குமிடத்துச் சீவான்மா எனப்படுவன்,—திகழ்தருமந்திரப்புணர்வால் மந்திரான்மா ஆவன்—தெய்வத்தின் பிரகாசத்தைச் செய்கின்ற மந்திரங்களோடுகூடி நிற்குமிடத்து மந்திரான்மா எனப்படுவன்,—யாதுமறவிட்ட அவன் பரமான்மா ஆவன்—இவை அனைத்தும் அறவிட்டவிடத்து அவன் பரமான்மா எனப்படுவன்,—ஏகஆன்மாவே ஆறுதிறனுமாய் இருப்பன்—ஒரு ஆன்மாவே இவ்வாறு ஆறுபேதங்களாக விளங்கும். (எ-று)

(பொ-ரை.) ஒரு ஆன்மாவே ஆறுவிதப்படுதலால் அத்தொகையைத் தொகுத்துக்கூறுவாம். பூதபரிணாமமாகிய உடம்போடுகூடி நிற்றலால் பூதான்மா எனப்படுவன். சொல்லுகின்ற வாக்குக்களோடுகூடி நிற்றலால் அந்தரான்மா எனப்படுவன். மேன்மை தங்கிய தத்துவங்களோடுகூடி நிற்றலால் தத்துவான்மா எனப்படுவன். சொல்லுகின்ற பிரகிருதியின் குணமாகிய சாத்துவித இராசத தாமதங்களைப்பொருந்திச் சுகதுக்கமோகங்களைக் குற்றமற அனுபவித்தலால் சீவான்மா எனப்படுவன். தெய்வத்தின் பிரகாசத்தைச் செய்கின்ற மந்திரங்களோடுகூடி நிற்றலால் மந்திரான்மா எனப்படுவன். இவை அனைத்தும் அறவிட்டவிடத்து அவன் பரமான்மா எனப்படுவன். ஒரு ஆன்மாவே இவ்வாறு ஆறுபேதங்களாக விளங்கும். (எ-று.)

(க-ரை.) ஒரு ஆன்மாவே பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என ஆறுபேதமாய் விளங்கும் என்பதாம்.

மேல்பூதான்மாமுதலாக அறுவகைப் பெயர்கள்மட்டும்கூறி

இவ்விடத்து அவற்றிற்குக் காரணம் கூறுதலால் கூறியது கூறலன்மை உணர்க. (59.)

மெய்ஞ்ஞானம் உதித்தவிடத்துச் சீவான்மா பரமான்மாவாய் விளங்குமெனக் கூறுகின்றது.

பரியாய நாமமின்னு மனேகமுள வுயிர்க்குப்
பலவுலகங் களுட்பலயோ னியுட்பலதே கத்துட்
புரிகருமத் தஞ்ஞான மாவரிப்பா னாகிப்
பொருந்துசுக சோகிதனாய் ஞானம்வருங் காறும்
விரிசேனன மரணத்துட் சுழலுவன்மெய்ஞ் ஞான
மேவினாற் சாந்தமாய்ப் பரமமாய் விளங்கும்
பரகதியா மப்போது சகலவுபா தியும்போய்ப்
பகர்சீவப் பிரமமே பரப்பிரம மாகும்.

(இ-ள்.) உயிர்க்குப்பரியாய நாமம் இன்னும் அநேகமுள—ஆன்மாவிற்கு உரிமையான நாமங்கள் (மேற்கூறிய பூதான்மா முதலியவையேயன்றி) இன்னும் அநேகமுள்ளன,—பலவுலகங்களுள் பலயோனியுள் பலதேகத்துள் புரிகருமத்து—பலவுலகங்களினும் பலயோனிகளினும் பலதேகங்களினும் பொருந்திச்செய்கின்ற இருவினைகளால்,—அஞ்ஞானம் ஆவரிப்பானாகி—அஞ்ஞானத்தில் மூடப்பட்டவனாகி,—பொருந்துசுகசோகிதனாய்—பொருந்துகின்ற சுகதுக்கமுடையவனாய்,—ஞானம் வருங்காறும் விரிசெனனமரணத்துள் சுழலுவன்—ஞானம் வருமளவும் விரிகின்ற சனனமரணங்களுட்பட்டுத்திரிவன்,— மெய்ஞ்ஞானம் மேவினால் சாந்தமாய் பரமமாய் விளங்கும் பரகதியாம்—சிவஞானம் கைவரப்பெற்றால் சாந்தமாயும் மேலாயும் பிரகாசிக்கின்ற வீடு கைகூடும்,—அப்போது பகர் சீவப்பிரமமே சகலவுபாதியும்போய் பரப்பிரமமாகும்—அப்பொழுது சொல்லாநின்ற சீவப்பிரமமே எல்லாவுபாதியும நீங்கப்பெற்றமையால் பரப்பிரமமாய் விளங்கும். (எ-று.)

(பொ-ரை.) ஆன்மாவிற்குரிமையான நாமங்கள் மேற்கூறிய பூதான்மாமுதலியவையேயன்றி இன்னும் அநேகமுள்ளன. பலவுலகங்களினும் பலயோனிகளினும் பலதேகங்களினும் பொருந்திச்செய்கின்ற இருவினைகளால் அஞ்ஞானத்தின் மூடப்பட்டவ

னுமி பொருந்துகின்ற சுகதுக்கமுடையவனாய் ஞானம்வருமளவும் விரிகின்ற ஜெனனமரணங்களுட் பட்டுத்திரிவன். சிவஞானம் கைவரப்பெற்றால் சாந்தமாயும் மேலாயும் பிரகாசிக்கின்றவீடு கைகூடும். அப்பொழுது சொல்லாநின்ற சீவப்பிரமமே எல்லாவுபாதியும் நீங்கப்பெற்றமையால் பரப்பிரமமாய் விளங்கும். (எ-று.)

(க-ரை.) சிவஞானமுதித்தவிடத்து சகலவுபாதிகளும் நீங்கப்பெற்றமையால் சீவான்மாவே பரமான்மாவாய் விளங்கு மென்பதாம்.

ஆன்மாவின்பரியாயப் பெயர் பிரமமாதலால் சீவப்பிரமம் பரப்பிரமம் என்பன முறையே சீவான்மா பரமான்மா என்னும் பொருள் குறித்து நின்றன. இவ்வுண்மையறியமாட்டாது பிரமமொன்றே பரப்பிரமமெனவும் சீவப்பிரமமெனவும் வழங்கப்படுமெனக் கூறும் தமது ஏகான்மவாதமே இச்சர்வஞானோத்தரமும் கூறுமென்பர். அவர்பதியைப்போலவே பசுபாசங்களும் அநாதியென மேலே கூறியதனோடு முரணுதலை அறிந்திலர். ஆதலின் அவர் கருத்துப்பொருந்தாமை காண்க.

சீவான்மாவிற்குப் பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றலியற்கையும், ஏனையவற்றோடு கூடிநிற்றல் செயற்கையுமாகும். செயற்கைநீங்கும். இயற்கை நீங்காது. ஆபினும் செயற்கையோடு கூடிநிற்குங்காலத்து இயற்கை வெளிப்பட்டுத் தோன்றுதலில்லை. செயற்கையறவே நீங்கினவிடத்து இயற்கை வெளிப்பட்டுத்தோன்றும். தோன்றுங்கால், முன்னுள்ள செயற்கையைநோக்க இயற்கை புதிதாக ஆனதுபோற்றோன்றும். ஆகலின், சகலவுபாதியுமபோய் பகர்சீவப்பிரமமே பரப்பிரமமாகுமென்றார். (60)

ஒரு ஆன்மாவிற்கு அநேக நாமங்கள் வந்தமைக்குக்
காரணம் கூறுகின்றது.

தேரிதருமோ ரான்மாவுக் கனேகநா மங்கள்
சித்தபே தங்களினல் விவகரிக்க லாயிற்
றேருவனு யிருக்கப்பல் பேர்வரலேற் றேன்னி
லொருவனை யுபாதிபே தங்களுட்கூ டேலாற்

பேரிதுதனித் தனிநாம மாயினனு மதனுற்
பேரிலா தானுக்குப் பிராந்திஞா னத்தைக்
கருதிவிமோ கிதரானே பலபலநா மங்கள்
கற்பிக்கப் பட்டவவை கற்பனைப்பே ராமால்.

(இ-ள்.) தெரிதருமோரான்மாவுக்கு அநேக நாமங்கள் சித்தபேதங்களினுல் விவரிக்கலாயிற்று—விளங்குகின்ற ஒரு ஆன்மாவிற்கு அநேக நாமங்கள் சித்தத்தின் பேதங்களால் வழங்கலாயிற்று,—ஒருவனுயிருக்க பல்பேர்வரல் எற்று என்னின்—ஒருவனுயிருக்கப் பலபேர்கள்வருதல் எத்தன்மைத்தென்னில்'—ஒருவனே உபாதிபேதங்களுள் கூடுதலால் பெரிது தனித்தனி நாமம் ஆயினன் ஆம்—ஒரு மனிதனே இராவணன்முதலிய உபாதிபேதங்களைப் பொருந்துதலால் மிகவும் வேறு வேறு நாமத்தையுடையனுகல்போலும்,—அதனுல் பேரிலா தானுக்கு பிராந்தி ஞானத்தை கருதி விமோகிதரானே பலபல நாமங்கள் கற்பிக்கப்பட்ட—உபாதிபேதங்களாகிய அதனுல் நாமமில்லாத ஆன்மாவிற்கு மயக்க ஞானத்தைக்கருதி மயக்கமில்லாதவர்களாலே பலப்பல நாமங்கள் கற்பிக்கப்பட்டன,—அவை கற்பனைப்பேராம்—அந்நாமங்கள் கற்பனையாலிடப்பட்ட நாமங்களாகும். (எ-று.)

(பொ-ரை.) விளங்குகின்ற ஒரு ஆன்மாவிற்கு அநேக நாமங்கள் சித்தத்தின் பேதங்களால் வழங்கலாயிற்று. ஒருவனுயிருக்கப் பலபெயர்கள் வருதல் எத்தன்மைத்து என்னில், ஒரு மனிதனே இராவணன் முதலிய உபாதிபேதங்களைப் பொருந்துதலால் மிகவும் வேறு வேறு நாமத்தையுடையனுதல்போலும். உபாதிபேதங்களாகிய அதனுல் நாமம் இல்லாத ஆன்மாவிற்கு மயக்கஞானத்தைக்கருதி மயக்கமில்லாதவர்களாலே பலப்பல நாமங்கள் கற்பிக்கப்பட்டன. அந்நாமங்கள் கற்பனையால் இடப்பெற்ற நாமங்களாகும். (எ-று.)

(க-ரை.) ஒரு ஆன்மாவிற்கே உபாதிபேதங்களின் கற்பனையால் பூதான்மா முதலாகப் பலநாமங்கள் கற்பிக்கப்பட்டன என்பதாம்.

ஒரு ஆன்மாவே தூலதேகத்துடன்கூடி அதுவாய் நிற்குங்கால் பூதான்மா எனவும், நால்வகைவாக்குக்களோடுகூடி அதுவாய்

நிற்குங்கால் அந்தரான்மா எனவும், அந்தக்கரண முதலிய தத்து வங்களுடன்கூடி அதுவாய் நிற்குங்கால் தத்துவான்மா எனவும், புருடதத்துவத்துடன்கூடி அதுவாய் நிற்குங்கால் சீவான்மா என வும், மந்திரங்களோடுகூடி அதுவாய் நிற்குங்கால் மந்திரான்மா எனவும், பரமான்மா என்னும் சிவனோடுகூடி அதுவாய் நிற்குங் கால் பரமான்மா எனவும் பெயர்பெறுமென்று கூறி உபாதிபேதங் களால் இன்னுமநேக நாமங்களுண்டெனவும், அந்நாமங்களனைத் தும் கற்பனைகளே எனவும் இச்செய்யுளாற் கூறப்பட்டபொருளாம்.

இவ்வுண்மையறியாத ஏகான்மவாதிகள் இதுபோன்ற உப நிடத வாக்கியங்களுக்கு ஓர் ஆன்மா என்பதை பரமான்மாவிற்கு ஆக்கி அதுவே உபாதிபேதங்களால் பல நாமங்களை அடைந்தது எனவும், அந்நாமங்கள் கற்பனை எனவுங்கூறி இடர்ப்படுதலோ டமையாது, இச்சர்வஞானோத்தரமும் தமது ஏகான்மவாத நூல் என்றுகூறி மகிழ்வர். அவர் "பரமசிவன் சதாசிவனென் பதிக்கு மேலோன் பகர்நிரஞ்சனன் நிராமயன்" என்பனவாதியாக பரமான் மாவிற்கு இலக்கணம் மேலே கூறிஇருப்பதனையும், உபாதிகளைக் கூடும்பொருள் பரமான்மாவாயிருத்தல் கூடுமா என்பதனையும் உற்றுநோக்கிலர். அன்றியும் "பிராந்திஞானத்தைக் கருதி விமோ கிதானே பலபல நாமங்கள் கற்பிக்கப்பட்ட" என்று இச்செய்யு ளிற் கூறி இருத்தலினாலேயே மயக்கஞானத்தையுடைய ஆன்மா விற்கு அம்மயக்கங்காரணமாக உண்டாகும் நிலையின் பேதங்களைக் கருதி பலநாமங்கள் மயக்கமில்லாதவர்களாற் கற்பிக்கப்பட்டன வென்பதும், அக்கற்பனைப்பெயரைப் பொருந்தியிருக்கும் ஆன்மா விற்கு அந்நிலை உணரமுடியாதென்பதும் விளங்கக்கிடக்கவும் அவற்றையும் நோக்காது தம்மனம்போனவாறு கூறுவோரை என் னென்று சொல்வது. ஒரு பொருளுக்கு பிராந்திஞானத்தால் பல நாமங்கள் கற்பிக்கப்பட்டன என்றதனாலேயே அப்பொருள் தானே கற்பித்துக்கொண்டதில்லை என்பதும் தன்னின் வேறான பிறிதொருபொருளால் கற்பிக்கப்பட்டன என்பதும் சிறுமகாரு மறிவர். ஆதலின், பிராந்திஞானத்தை உடைய அது சீவான்மாவே அன்றிப் பரமான்மா அன்று என்பதை இனியேனுமுணர்ந்துய்வார் களாக.

"ஒருவனை யீராவணுதிபாவக மூற்றூற்போலத்—தருவனிவ் வுருவமெல்லாம" எனச் சிவஞானசித்தியாரில் ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் அருளுதலால் அது ஏகான்மவாதிகளின் கருத்தைச்சாதிக்காதோ எனின், சாதிக்காது. என்னை, இறைவனுடைய தடத்தத் திருமேனியாகிய அருவம், அருவுருவம் உருவமென்னும் மூன்று திருமேனிகளையும் அவ்விறைவன் பொருந்தி இலயம், போகம், அதிகாரம் என்னும் அவத்தைகளை உறுதலால் அவ்விறைவன் விகாரி ஆகான் என்பதற்குக் கூறினதே அன்றி, விருப்பு வெறுப்புற்றுப் பாசபந்தங்களிற் கட்டுப்பட்டுப் பிறப்பிறப்பை அடைதற்குக் கூறியதன்று ஆதலாலென்க. (61)

முத்தன் அத்துவிதபாவனையே செய்யவேண்டுமெனக் கூறுகின்றது.

அவிர்சகல பூதமய மாயிருக்கும் யாதோ
    ரைசுவரிய முளதந்த வைசுரிய மாய
சிவனிடத்து நித்தியபா வனையாவ னொருவன்
    செய்கின்ற னவனந்தச் சிவாகார மாவன்
சிவசாக்ஷாத் காரதைக்குப் பிராப்தனு யிருந்துஞ்
    சிவன்வேறு சீவன்வே றேன்றிரண்டாக் காண்பான்
அவன்சேனன மரணத்தை யடைவனு தலினு
    னத்துவித பாவனையே முத்தனு தரிப்பான்.

(இ-ள்) அவிர்சகல பூதமயமாயிருக்கும் யாதோர் ஐசுவரியம் உளது—விளங்குகின்ற பூதமுதலிய அனைத்துமாய் விளங்குமபடியான யாதொரு செல்வமுளதோ,— அந்த ஐசுவரியமாய சிவனிடத்து நித்தியபாவனையாவன் ஒருவன் செய்கின்றன் அவன் அந்தச் சிவாகாரமாவன்—அந்தச்செல்வமாகிய சிவபெருமானிடத்து விட்டு நீங்காதபாவனையை எவனொருவன் செய்கின்றனோ அவன் அந்தச்சிவனுல் விழுங்கப்பட்டவனுவன்,— சிவசாக்ஷாத் காரதைக்குப் பிராப்தனுயிருந்தும் சிவன்வேறு சீவன்வேறு என்று இரண்டாகக்காண்பான் அவன் சனனமரணத்தை அடைவன்—சிவசொரூபம் பிரத்தியக்ஷமாக விளங்குதற்கு உரியவனுயிருந்தும் சிவன் வேறு சீவன்வேறு எனப் பேதமாகக் காண்கின்றவன் எவனோ அவன் பிறப்பிறப்பிற்பட்டுழலுவன்,— ஆதலினுல் அத்துவிதபா

வனையே முத்தன் ஆதரிப்பன்—ஆதலால் சிவனோடு பிரிப்பின்றி நிற்றலாகிய அத்துவிதபாவனையே முத்தன் அனுட்டிப்பன். (எ-று)

(பொ-ரை) விளங்குகின்ற பூதம் முதலிய அனைத்துமாய் விளங்கும்படியான யாதொரு செல்வமுளதோ அந்தச்செல்வமாகிய சிவபெருமானிடத்து விட்டுநீங்காதபாவனையை எவனொருவன் செய்கின்றானோ அவன் அந்தச்சிவனால் விழுங்கப்பட்டவனாவன். சிவசொரூபம் பிரத்தியக்ஷமாக விளங்குதற்கு உரியவனாயிருந்தும் சிவன்வேறு சீவன்வேறு எனப் பேதமாகக்காண்கின்றவன் எவனோ அவன் பிறப்பிறப்பிற்பட்டுழலுவன். ஆதலால் சிவனோடு பிரிப்பின்றி நிற்றலாகிய அத்துவிதபாவனையே முத்தன் அனுட்டிப்பன் (எ-று)

(க-ரை) சிவன்வேறு சீவன்வேறாகக் காண்பவன் பிறந்திறந்துழலுவனாதலின் சிவனே நான் நானே அச்சிவம் என்னும் அநந்நியமாகிய அத்துவிதபாவனையேமுத்தன் அனுட்டிப்பன்என்பதாம்.

எல்லாப்பொருள்களும் தானாயிருத்தலின் ஐசுவரியமாகிய சிவன் என்றார் "செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே" என்றவிடத்து செல்வன்என்றதும் இக்கருத்துப்பற்றியே ஆம் (62)

அத்துவிதபாவனையாகிய ஞானம் வரும்முறை கூறுகின்றது.

அருள்சேறியு மோட்சகா ரணமாக விளங்கு
மத்துவித பாவனையா வர்க்குவரு மென்னிற்
சரியைகிரி யாயோகங் களைச்சேனனுந் தத்துத்
தக்கவநுட் டானஞ்சேய் ததனுனின் மலனுய்த்
தேரிசிவசாத் திரங்களையே கேட்டேச்சிந் தித்துத்
தேளிந்துகன்ம வோப்புமல பரிபாகம் வந்தாற்
பேரியவத்து விதஞானம் வருமிவ்வா றன்றிப்
பேத்தர்க்கு விளங்காது விளக்கினும்வா ராதே.

(இ-ள்) அருள்செறியும் மோட்சகாரணமாக விளங்கும் அத்துவிதபாவனை யாவர்க்கு வருமென்னில்—அருள்நிறைந்திருக்கின்ற மோட்சத்திற்குக் காரணமாக விளங்கும் அத்துவிதபாவனை எவர்க்குத் தோன்றுமென்னில்,—சரியைகிரியாயோகங்களை செனன

அந்தத்து தக்க அநுட்டானஞ்செய்து—சரியைகிரியையோகம் என்னும் இவைகளை முற்பிறப்பில் முறையாக அநுட்டித்து,—அதனால் நின்மலனுய்—அதனால் மனம் சுத்திசெய்தப்பெற்று,—தெரிசிவசாத்திரங்களையே கேட்டுச் சிந்தித்து தெளிந்து—விளங்குகின்ற சிவசாத்திரங்களையே குருவினிடத்துக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து,—கன்மவொப்பு மலபரிபாகம் வந்தால்—இருவினையொப்பும மலபரிபாகமும் வந்தால்,—பெரிய அத்துவிதஞானம்வரும்—பெருமைவாய்ந்த அத்துவிதஞானம் தோன்றும்,— இவ்வாறன்றி பெத்தர்க்கு விளங்காது விளக்கினும் வாராது—இந்த முறையில் விளங்குமன்றி இம்முறையில் ஒழுகாத அஞ்ஞானிகளுக்கு விளங்காது; அவர்க்கு விளக்கினும் வரமாட்டாது. (எ-று)

(பொ-ரை) அருள்நிறைந்திருக்கின்ற மோட்சத்துக்குக்காரணமாக விளங்கும் அத்துவிதபாவனை எவர்க்குத் தோற்றுமென்னில், சரியை கிரியை யோகமென்னும் இவைகளை முற்பிறப்பில் முறையாக அநுட்டித்து அதனால் மனம் சுத்திசெய்தப்பெற்று விளங்குகின்ற சிவசாத்திரங்களைக் குருவினிடத்துக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து இருவினையொப்பும் மலபரிபாகமும் வரப்பெற்றால் பெருமைவாய்ந்த அத்துவிதஞானம் தோன்றும். இந்த முறையில் விளங்குமன்றி இம்முறையிலொழுகாத அஞ்ஞானிகளுக்கு விளங்காது; அவர்க்கு விளக்கினும் வரமாட்டாது. (எ-று)

(க-ரை) சரியை கிரியை யோகங்களை அநுட்டித்து அதனால் சித்தசுத்தியும் இருவினையொப்பும் மலபரிபாகமும் வரப்பெற்றவர்க்கு அத்துவிதபாவனையாகிய சிவஞானம் விளங்கித்தோன்றுமென்பதாம்.

பதமுத்தி பரமுத்தியென முத்தி இருவகைப்படும். அவற்றுள், பதமுத்தியினும் அருள்விளங்கித்தோன்றுமெனினும் பூரணமாய் விளங்கித்தோன்றுதலில்லை. பரமுத்தியிற்றான் பூரணமாய் விளங்கித்தோன்றும். ஆதலின் அருள்செறியுமோட்சமென்றார்.

அத்துவிதபாவனை யென்பது அத்துவிதமாகப்பாவிக்கும் பாவனையாம். அது சிவனும் சீவனும் பிரிப்பின்றி நிற்றலை உணர்ந்து அவ்வாறு பாவிப்பதாகும். இது மேலுங் கூறப்பட்டது.

சரியையாவது சிவபெருமான் திருமேனிகொண்டெழுந்தருளியிருக்கும் ஆலயங்களில் திருவலகிடுதல் திருமெழுக்கிடுதல் முதலியனவும், சிவனடியாரைச் சிவமெனத்தேறி அவர்க்கு அடிமைபூண்டு ஒழுகுதல் முதலியனவுமாம்.

கிரியையாவது அகத்தும் புறத்தும் முறைப்படி சிவனையாராதித்தல்.

யோகமாவது, பிராணவாயுவை அடக்கும் உபாயத்தாலடக்கி அதனால் அகத்துவிளங்கும் சோதிமுதலியவற்றிற் கலத்தல்.

சரியை கிரியை யோகமென்னும் மூன்றனுள் சரியைக்குச் சமயதீட்சையுடையவரும் கிரியையோகமிரண்டற்கும் விசேடதீட்சையுடையவரும் உரியராவர். இக்கருத்துத்தோன்ற சரியையைத்தனித்து விலக்கியும் கிரியையோகமிரண்டினையும் சேர்த்து கிரியாயோகமெனவும் கூறினர். இச்சரியையாதிகளில் ஒழுகுதலினாலேயே மனம் சுத்தியெய்தும். அதனால் நித்த அநித்தப்பொருள்களின் உணர்வு விளங்கித்தோன்றும். தோன்றவே, அநித்தப்பொருள்களினிடத்து வெறுப்பும் நித்தப்பொருளினிடத்து விருப்பும் உண்டாகும். உண்டாகவே, நித்தப்பொருளைத் தெரிவித்தற்குரிய ஞானகுருவைத்தேடவரும். வரவே, அவர் வெளிப்பட்டுத்தோன்றி சிவ சாத்திரங்களையுபதேசிப்பார். அவர் உபதேசித்தபொருளைச் சிந்தித்துத்தெளிதலினால் இருவினையொப்பும் மலபரிபாகமும் வரும். அவ்விரண்டும் வரவே சத்திநிபாதம் உண்டாம். இம்மூன்றும் ஒருங்குடையார்க்கு அத்துவிதஞானம் விளங்கித்தோன்றும்.

இருவினையொப்பாவது, நல்வினை தீவினையனைத்தும் அநுபவித்தொழிதல் என்பர் ஒரு சாரார். அது கூடுமாறில்லை. கூடினும் அதுகொண்டு மலமறுதலில்லாமையால் விஞ்ஞானகலராவதன்றிப் பிறவியறுதலில்லை. ஆதலினது பொருந்தாது. நல்வினைப்பயனாகிய இன்பத்தினும் தீவினைப்பயனாகிய துன்பத்தினும் விருப்பும் வெறுப்பும்உடையவனாகாது இப்பயன்கள் நம்முடைய முன்வினைக்கேற்ப இறைவன்றிருவருள் கூட்டுவித்தலால் திருவருட்செயலே எனக்காணுதலே இருவினையொப்பாகும்.

மலபரிபாகமாவது, மலத்தினது சத்திதேய்தல். அதாவது யான்கருத்தாவென்றும் பொருள்கள் என்னதென்றும் உணர்கின்ற மபக்க உணர்வுகுன்றி யான்சிவனடிமையென்றும் எனதெனப்படும் பொருள்கள் சிவனுடைமை யென்றும் காண்டல்.

சத்திநிபாதமாவது, திருவருட்சத்தி பதிதலாம். பதிதல் என்பது விளங்கித்தோன்றுதல். அது, மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நான்குவகைப்பட்டு ஒன்றுக்கொன்று மேலாகும். இருளினீக்கமும் ஒளியின் விளக்கமும்போல இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் உடனிகழ்ச்சியாய் நிகழ்வன வென்றறிக.

சிவசாத்திரம் என்பது, சிவஞானத்தை விளக்குதற்குரிய சிவாகமங்களும் அவற்றின் கருத்தை விரித்துரைக்கும் சிவஞான போதம் சிவஞானசித்தியார் முதலிய நூல்களுமாம். சிவசாத்திரங்களையே என்றதன்கண்ணுள்ள ஏகாரம் ஏனைய சாத்திரங்களைக் கேட்டல் கூடாதென்று பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது. தேற்றமெனினும் ஆம்.

சரியைகிரியாயோகங்களைச் செனனுந்தத்துத் தக்க அநுட்டானம் செய்து அதனால் நின்மலனுய் தெரிசிவசாத்திரங்களைக் கேட்டு என்றதனால், சரியையாதி ஒழுக்கமின்றிச் சிவசாத்திரங்களைக்கேட்டல் கூடாதென்பதும், கேட்பினும் அவர்க்கு இருவினையொப்பு மலபரிபாகம் வருதலில்லையென்பதும், அதனால் அவர் அநுபவ அறிவைப்பெறுதலில்லை என்பதும் உணரக்கிடந்தன. இதனையே, இவ்வாறன்றிப்பெத்தர்க்கு விளங்காதுவிளக்கினும் வாராது என விதந்துகூறினர்.

நின்மலனென்றது இவ்விடத்தில் சித்தசுத்தி யெய்தப்பெற்றவரை. (63)

அத்துவிதபாவனையாகிய சிவஞானத்தால் தன்னைத்தானறியும் தருணம் இதுவெனக்கூறுகின்றது.

யாதோருக்காற் சருவதோ முகமாக வான்மா
ஞானத்தா னின்மலனுய் விளங்கிடுமப் போது

சோதிமய னாகியெக்கா லத்துமழி வில்லாச்
சுயம்பிரகா சத்திருக்குந் தன்னைத்தா னறிவன்
ஆதிபிர வஞ்சமெலாம் பின்னமே யாவு
மகித்தமே யெனப்பாவ மானசடாத் துவாவும்
ஓதியதோ ரபாவமாஞ் சூனியமும் கடவா
வுபாதியாஞ் சகலவா தனைகளையு நீங்கி.

(இ-ள்) ஆன்மா யாதொருக்கால் ஞானத்தால் சர்வதோமுக மாக நின்மலனைப் விளங்கிடும்—ஆன்மாவானது எப்பொழுது சிவ ஞானத்தினால் எல்லாமாகவும் மலமில்லாதவனாகவும் விளங்கு மோ,—அப்போது சோதிமயனாகி எக்காலத்தும் அழிவில்லா சுயம்பிரகாசத்து இருக்கும் தன்னைத்தான் அறிவன்—அப்பொ ழுது பிரகாசமயனாகி எப்பொழுதும் அழிவில்லாத சொயம்பிரகா சத்தினிடத்தில் பிரிப்பின்றியிருக்குந் தன்னைத்தானறிவன். (எ-று)

(பொ-ரை) ஆன்மாவானது எப்பொழுது சிவஞானத்தினால் எல்லாமாகவும் மலமில்லாதவனாகவும் விளங்குமோ, அப்பொழுது, பிரகாசமயனாகி எப்பொழுதும் அழிவில்லாத சொயம்பிரகாசத் தினிடத்தில் பிரிப்பின்றியிருக்கும் தன்னைத்தானறிவன். (எ-று)

(க-ரை) சிவஞானத்தால் மலம் அற்றவிடத்துத் தன்னைத் தானறிவன் என்பதாம்.

ஆன்மாவின் சொரூபம் சோதிமயமேயாயினும் அதுமலத் தடையால் விளங்கித்தோன்றுமாறில்லை. சிவஞானத்தால் தடை நீங்கியபொழுது விளங்கித்தோன்றும். அத்தடை அநாதியாத லின் விளங்கித்தோன்றுமது ஆதி எனப்படும். இவ்வாறு தடைப் பட்டு இடையே விளங்கித்தோன்றுதலின்றி என்றும் சோதிமய னாக இறைவன் விளங்குவன்' அங்ஙனம் விளங்கும் இறைவனை விட்டு மலத்தடையுற்று நிற்கும் ஆன்மா பிரிதலில்லை. பிரிப்பின்றி நிற்பினும் தன்சொரூபம் விளங்காமையின் தான் இறைவனோடு பிரிப்பின்றி நிற்கின்றோமென்பதை உணருமாறில்லை. தன் சொ ரூபம் விளங்கித்தோன்றுமபோது தன்னைச்சோதிமயனென் றும், என்றும் இறைவனோடு பிரிப்பின்றி நிற்கின்றோம் என்றும் உணரும். அங்ஙனம் உணர்தலே தன்னைத்தானறிதலாம். இக்க

ருத்துணர்த்துதற்கு "ஞானத்தால் நின்மலனாய் விளங்கிடும் அப்போது சோதிமயனாகி எக்காலத்து மழிவில்லாச் சுயம்பிரகாசத்திருக்கும் தன்னைத்தான் அறிவன்" என்றார்;

ஆதி பிரபஞ்சமெல்லாம் என்றதுமுதல் அடுத்துவருஞ் செய்யுளைத்தொடர்ந்து பொருள்தந்து நிற்றலால் அவ்வாறு கூறப்படும். (64)

அத்துவித பாவனையால் தன்னை அறிந்த முத்தன் தன்மையைத் தொகுத்துக் கூறுகின்றது.

ஆனசக காரணனும் புருட ஞனே
வக்கரவத் துவுநானே பரப்பிரம நானே
ஈனமின்றி யழிவற்ற பரசிவனு நானே
யென்றுசிவ யோகத்தாற் கருமத்தை யிழந்து
ஞானநிலை யாலைய முழுதுமறுப் பானாய்
நாடரிய சீவபர வைக்கியத்தை யடைந்து
மோனமாய் நிருவிகற்ப ஞயரன்போ னித்த
முத்தனா யான்மவுபா சனைபண்ணக் கடவன்.

(இ-ள்) ஆதி பிரபஞ்சமெலாம் பின்னமே யாவும் அநித்தமே என-(அங்ஙனம் தன்னையறிந்தவன்) தோற்றப்பட்ட பிரபஞ்சமனைத்தும் வேறுபாடுடையன ஆதலின் அவை அனைத்தும் அழியுந்தன்மையுடையன என்று,—பாவமான சடாத்துவாவும் ஒழிய தோர் அபாவமாம் சூனியமும் கடவா-(உள்ளதென்னுமுணர்வால்) உணரப்படும் ஆறத்துவாக்களும் (இல்லையென்னுமுணர்வால் உணரப்படுவதென்று) சொல்லப்படுவதொரு சூனியமும் கடந்து,— உபாதியாஞ்சகல வாதனைகளையும் நீங்கி-செயற்கையாகிய எல்லா வாதனைகளையும்விட்டு,—ஆனசக காரணனும் புருடன் நானே—தோற்றப்பட்ட உலகத்திற்கு நிமித்த காரணனாய் விளங்கும் முதல்வன் நானே,— அக்கரவத்துவும் நானே—அழியாதபொருளும் நானே,—பரப்பிரமம் நானே—மேலான பிரமம் நானே,— ஈனமின்றி அழிவற்ற பரசிவனும் நானே என்று—குற்றமின்றி என்றும் நிலைபேறுடையராய் விளங்கும் பரசிவனும் நானே என்று,—சிவயோகத்தால் கருமத்தை இழந்து—இவ்வாறு சிவ

னோடு பிரிப்பின்றி நிற்கும் சிவயோகத்தால் சரியை கிரியை யோகம் என்னும் மூன்றனையும் நழுவவிட்டு,—ஞானநிலையில் ஐயம்முழுதும் அறுப்பானாய்—ஞானத்தில் நிலைபெறுதலுடைமையால் சந்தேகம்முற்றும கெடுத்தவனாய்;— நாடரிய சீவபரஐக்கியத்தை அடைந்து—நாடுதற்கரிய சீவான்மா பரமான்மாவோடு ஐக்கியமாய் நிற்றலை உற்று,—மோனமாய் நிருவிகற்பனாய் அரன்போல் நித்தமுத்தனாய் ஆன்ம உபாசனைபண்ணக்கடவன்—மோனமாயும் நிருவிகற்பனாயும் முதல்வனைப்போல் நித்தமுத்தனாயும் தன்னைச் சிந்தித்தலைத் தனது கடமையாகக்கொள்வன். (எ-று)

(பொ-ரை) அங்ஙனம் தன்னையறிந்தவன் தோற்றப்பட்ட பிரபஞ்சமனைத்தும் வேறுபாடுடையனவாதலின் அவையனைத்தும் அழியுந்தன்மை யுடையனவென்று, உள்ளதென்னுமுணர்வால் உணரப்படும் ஆறத்துவாக்களும் இல்லையென்னும் உணர்வால் உணரப்படுவதென்று சொல்லப்படுவதொரு சூனியமுங்கடந்து, செயற்கையாகிய எல்லா வாதனைகளையும்விட்டு தோற்றப்பட்ட உலகத்திற்கு நிமித்தகாரணனாக விளங்கும் முதல்வன் நானே; அழியாதபொருளும் நானே; மேலான பிரமம் நானே; குற்றமின்றி என்றும் நிலைபேறுடையதாய் விளங்கும் பரசிவனும் நானே என்று, இவ்வாறு சிவனோடு பிரிப்பின்றி நிற்கும் சிவயோகத்தால் சரியை கிரியை யோகம் என்னு மூன்றனையும் நழுவவிட்டு ஞானத்தின் நிலைபெறுதலுடைமையால் சந்தேகமுற்றுங் கெடுத்தவனாய், நாடுதற்கரிய சீவான்மா பரமான்மாவோடு ஐக்கியமாய் நிற்றலை உற்று, மோனமாயும் நிருவிகற்பனாயும் முதல்வனைப்போல் நித்தமுத்தனாயும் தன்னைச்சிந்தித்தலே தனது கடமையாகக்கொள்வன். (எ-று)

(க-ரை) சிவஞானத்தால் தன்னை அறிந்த முத்தன் சரியை முதலிய மூன்றனையுமிழந்து சிவனோடு ஐக்கியமாய் விளங்குதலையே பழகுவன் என்பதாம்.

சடமாயும் ஒன்றாயும் உள்ளதுநித்தமாயிருக்கும். மண்போல. சடமாயும் பலவாயுமுள்ளனதோன்றி நின்றொடுங்கும். கடமுதலியனபோல. மண்ணும் மாயையிற்றோன்றி நின்றொடுங்கவில்லை

யோமெனின்? உவமைகளெல்லாம் ஏகதேசமாதலின் அது கடா வன்றென்க. காரணப்பிரபஞ்சமாகிய மாயை, ஒன்றாயும் சடமாயும் இருத்தலின் நித்தம். காரியப்பிரபஞ்சமாகிய உலகப்பொருள்கள் பலவாயும் சடமாயும் காணப்படுதலின் தோன்றி நின்று ஒடுங்குவனவாம். ஆதலின், "ஆதிபிரபஞ்சமெலாம் பின்னமேயாவுமநித்தமே" என்றார். ஆதியென்பது தோற்றத்தைக் குறித்தது.

நித்தம், என்றுமொருதன்மையாயுள்ளது. அநித்தம், என்றுமொருதன்மையாயில்லாதது. இவ்வாறன்றி நித்தம அநித்தம் என்பன உண்மையின்மையாம் எனக்கொண்டு காணப்படும் உள்பொருளை இல் பொருளெனக்கூறும் மாயாவாதிகூற்று ஒருசிறிதும் பொருந்தாது.

அத்துவாக்கள் ஆறும் உள்ளதென்னுமுணர்விற்கு விடயமாதலின் பாவமான சடாத்துவா என்றார். பாவம்—உண்மை, அபாவம்—இன்மை. அத்துவாக்களாறனையும் கடந்தவிடத்துப் பரம்பொருள் விளங்கித்தோன்றும். தோன்றினும் இதுகாறுங்கண்டறிந்தபொருள்கள் ஒன்றனோடும் உவமித்தறிதல் கூடாமையின் சூனியமேயென வெண்ணவரும். வரினும், சூனியமாயின் இன்பந் தருதலில்லை, இது இன்பந்தருதலால் சூனியமன்றெனவுணரவரும். வரவே, சிவபரம்பொருளாகிய சோதியெனத்தேறி அதுவாய் நின்று உடல்சம்பந்தமான வாதனைகளைப் பற்றறிருத்தல் கூடும். ஆதலால் "பாவமான சடாத்துவாவும் ஒதியபோதாரபாவமாஞ்சூனியமும் கடவா—உபாதியாஞ் சகல வாதனைகளையும நீங்கி" என்றார். அத்துவாக்களைக் கடந்தவிடத்துமுதல்வன் சூனியம்போற் றோன்றுவனென்பதனை "நிர்க்குணனாய்நின்மலனாய் நித்தியானந்தனாய்த்—தற்பரமாய் நின்றதனிமுதல்வன்—அற்புதம்போல்—ஆனா அறிவாயளவிறந்து தோன்றுமே—வானேமுதல்களையின் வந்து". என்னும் சிவஞானபோதத்தானுமறிக. அற்புதம் என்பது இவ்விடத்துச் சூனியத்தைக்குறித்தது.

அக்கரம்—அழியாதது.

ஈனம்—குற்றம். அது மலத்தைக்குறித்தது.

ஞானம் வந்தவிடத்தும் சரியையாதிகளை இவைவேண்டாமெனத்தானே சங்கற்பித்துவிடுதல் கூடாது. உறங்கினவன் கைப்பொருள் நழுவுமாறுபோல நழுவவேண்டுமென்பதுணர்த்துதற்கு கருமத்தை இழந்து என்றார்.

ஐயம்—சிவமும் நானும் ஒன்றோ வேறோ என்பது. இவ்வையத்தினின்றும் நீங்கி, சிவமும் நானும் பொருட்டன்மையால் வேறும் கலப்பால் ஒன்றுமெனவறிந்து, சிவனோடு ஐக்கியமாய் நிற்றலை உணரவேண்டுமென்ப துணர்த்துதற்கு, ஐயமுழுதுமறுப்பானாய் சிவபரஐக்கியத்தையடைந்து எனவும், உணர்கின்றபோதமுமிறந்து நிற்கவேண்டுமென்பதுணர்த்துதற்கு மோனமாயெனவும், அந்நிலையினும் அதீதப்படல்வேண்டுமென்பதுணர்த்துதற்கு நிருவிகற்பனாய் எனவும்; சிவமாயே நிற்கவேண்டுமென்பதுணர்த்துதற்கு அரன்போலெனவும், இவ்வாறு பழகுவது சீவன்முத்தன் கடமையென்பதுணர்த்துதற்கு உபாசனைபண்ணக்கடவன் எனவும், கூறினார். (65)

இதுவுமது.

நிர்க்குணமாய் நிர்மலமாய் நிருவிகற் பமுமாய்
நித்தநிரஞ் சனநிரா தாரநிரா மயமாய்
அற்புதமாய்ப் பிராகிருத வப்பிர மேய
வசந்தேக மாயவிபா வியமாய்ச்சூக் குமமாய்த்
தற்பரமாய் ஞானவிழி யாற்காணும் விசுத்த
சாசுவத மாய்ச்சருவ சருவகத மாகிச்
சிற்பரமாய்ச் சருவதோ முகவியா பகமாஞ்
சிவனைத்தன் னிடத்திலே பின்னமறத்தெளிந்து.

(இ-ள்) நிர்க்குணமாய்— மாயகாரியமான குணமில்லாததாயும்,—நிர்மலமாய்—மலமில்லாததாயும்,—நிருவிகற்பமுமாய்— விகற்பமில்லாததாயும்,— நித்தநிரஞ்சன நிராதார நிராமயமாய்—நித்தமாயும், நிரஞ்சனமாயும் நிராதாரமாயும் நிராமயமாயும்,—அற்புதமாய்— உலகத்துப்பொருள்களொன்றனோடும் உவமிக்கப்படாத அற்புதமாயும்,— பிராகிருத அப்பிரமேய அசந்தேகமாய்—முதன்மையாயும் பிரமாணங்களால் அளக்கப்படாததாயும் இதுமுதற்

பொருள்தானோ அல்லவோ எனச்சந்தேகிக்கப்படாததாயும்,— அபிபாவியமாய்— பாவனைக்ககப்படாததாயும்,—சூக்குமமாய்—சூக்குமமாயும்,— தற்பரமாய்—உயிர்க்கு அதீதமாயும்,— ஞானவிழியால்காணும் விசுத்த சாசுவதமாய்—சிவஞானக்கண்ணாற் காணத்தகும் விசேடமாகிய சுத்தசைதன்னியமாயும் என்றும் நிலைபேறுடையதாயும்,— சருவசருவகதமாகி— எல்லாப் பொருள்களாயும் அப்பொருள்களின் உள்ளீடாயும்,— சிற்பரமாய்—ஞானமயமாயும்,— சருவதோமுக வியாபகமாஞ் சிவனை—எங்கும் நிறைந்த வியாபகமாயும் விளங்கும் சிவபரம்பொருளை,—தன்னிடத்தில் பின்னமறத் தெளிந்து— தன்னறிவினிடத்துப் பிரிப்பின்றி விளங்கவுணர்ந்து. (எ-று)

(பொ-ரை) மாயா காரியமான குணமில்லாததாயும், மலமில்லாததாயும், விகற்பமில்லாததாயும், நித்தமாயும் நிரஞ்சனமாயும் நிராதாரமாயும், நிராமயமாயும், உலகத்துப்பொருள்களொன்றனோடும் உவமிக்கப்படாத அற்புதமாயும், முதன்மையாயும், பிரமாணங்களால் அளக்கப்படாததாயும், இதுமுதற் பொருள்தானோ அல்லவோவெனச் சந்தேகிக்கப்படாததாயும், பாவனைக்கு அகப்படாததாயும், சூக்குமமாயும், உயிர்க்கதீதமாயும், சிவஞானக் கண்ணாற் காணததகும் விசேடமாகிய சுத்தசைதன்னியமாயும், என்றும் நிலைபேறுடையதாயும், எலலாப்பொருள் களாயும், அப்பொருள்களின் உள்ளீடாயும், ஞானமயமாயும், எங்கும் நிறைந்த வியாபகமாயும் விளங்கும் சிவபரம்பொருளைத்தன்னறிவினிடத்துப் பிரிப்பின்றி விளங்கவுணர்ந்து. (எ-று)

(க-ரை) சிவனைத்தன்னிடத்து அபேதமாய் விளங்கவுணர்ந்து என்பதாம். (66)

இதுவுமது.

மந்திரம் பதவர்ணம் புவனந்தத் துவங்கண்
மருவுகலை யாதிமூர்த் தாமூர்த்த மாக
முந்துபிரக் கிரியாமார்க் கங்களா மண்ட
முழுதுந்தன் னிடத்திருப்ப தாகவே கண்டோன்

சந்ததமுஞ் சருவதரி சனசர்வக் கினனாய்ச்
சர்வபரி பூரணநின் மலவிமுத் தனுமாய்
வந்தகே வலபூத நிரதிசயா னந்த
மயனாகிச் சிவசாக்ஷாத் காரதையா யிருப்பன்.

(இ-ள்) மந்திரம் பதம் வர்ணம் புவனம் தத்துவங்கள் மரு வுகலையாதி மூர்த்த அமூர்த்தமாக மூந்து பிரக்கிரியா மார்க்கங் களாம் அண்டம்முழுதும் தன்னிடத்து இருப்பதாகவே கண் டோன்–(அங்ஙனமுணர்ந்ததனால்) மந்திரங்கள் பதங்கள் அக்கரங் கள் புவனங்கள் தத்துவங்கள் இவற்றைப்பொருந்தி நிற்கும் நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகள் முதலாக உருவமாயும் அருவமா யும் காணப்படுகின்ற காரியரூபமாகிய அண்டங்களனைத்தும் தன் னிடத்திருப்பதாகவே கண்டவன்,— சந்ததமும் சருவதரிசன சர்வக்கினனாய்—எப்பொழுதும் எல்லாப்பொருள்களையும் அறியும் முற்றுணர்வுடையனாகி,—சருவபரிபூரண நின்மலவிமுத்தனுமாய்– எங்கும் பரிபூரணமாயும் நின்மலமாயும் உள்ள பரமுத்தனுமாய்,– வந்தகேவலபூதநிரதிசய ஆனந்தமயனாகி–சுவாநுபவமாயும் ஒப் பற்ற உண்மையாயும் உள்ள நிரதிசய இன்பமயனாகி,—சிவசா க்ஷாத்காரதையாயிருப்பன்– சிவப்பிரத்தியக்ஷத்தை யுடையனாக யிருப்பன். (எ-று)

(பொ-ரை) அங்ஙனமுணர்ந்ததனால் மந்திரங்கள் பதங்கள் அக்கரங்கள் புவனங்கள் தத்துவங்கள் இவற்றைப் பொருந்தி நிற் கும் நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகள் முதலாக உருவமாயும் அருவ மாயும் காணப்படுகின்ற காரியரூபமாகிய அண்டங்களனைத்தும் தன்னிடத்திருப்பதாகவே கண்டவன், எப்பொழுதும் எல்லாப் பொருள்களையும் அறியும் முற்றுணர்வுடையனாகி, எங்கும் பரிபூர ணமாயும் நின்மலமாயும் உள்ளபரமுத்தனுமாய், சுவாநுபவமாயும் ஒப்பற்ற உண்மையாயும் உள்ள நிரதிசய இன்பமயனாகிச் சிவப்பிர த்தியக்ஷத்தை உடையனாகயிருப்பன். (எ-று)

க-ரை) மேலேகூறியவாறு சிவனைத்தன்னிடத்து விளங்க வுணர்ந்ததனால் அண்டங்களனைத்தும் தன்னிடத்திருப்பதாகக் கண்டு சிவப்பிரத்யக்ஷத்தை உடையனாக விளங்குவன் என்பதாம்.

அத்துவாக்களாறனுள், பதம் மந்திரம் வன்னம்மூன்றுக் அமூர்த்தமாகிய சொற்பிரபஞ்சம். தத்துவம் புவனம் கலை என்னும் மூன்றும் மூர்த்தமாகிய பொருட் பிரபஞ்சம். இப்பொருட்பிரபஞ் சத்துள்ளும் கலையும் சூக்குமசரீரதத்துவங்களும் அமூர்த்தம். புவனமும் தூலசரீரதத்துவங்களும் மூர்த்தம். ஆகவே, மூர்த்தமும் தூலம் சூக்குமமென இருதிறப்படுமென்றவாறாயிற்று.

மூந்துதல்—காணப்படுதல்.

பிரக்கிரியை—காரியம். மேலு முரைத்தாம்.

சர்வஞ்ஞன் என்பது சர்வக்கினன் என நின்றது.

விமுத்தன்—விசேடமுத்தன். பதமுத்தி சாமான்யமாதலின் அதனைக்கடந்த பரமுத்தன் என்பதாம்.

வருதல்—சுவாநுபவம். கேவலம்—தனி. பூதம்—உண்மை.

ஆதி பிரபஞ்சமெலாம் என்றதுமுதல் சிவசாக்ஷாத்காரதை யாயிருப்பன் என்றதுவரை முடிந்தது முடித்தல் என்னும் உத்தி யின்படி மேலே விரித்துக்கூறி முடித்த முத்தன்றன்மையைத் தொகுத்துக் கூறினமையின் கூறியது கூறலன்மையுணர்க. (67)

இந்நிலையே முடிந்தநிலையென வற்புறுத்துகின்றது.

ஒருவசன மாகவே முடிந்தபொரு ளுரைத்தோ
மொன்றுகக் காண்பதுவே காட்சியின்னுந் திரும்பப்
பெருவசன மாகநீ பலபடக்கேட் டாலும்
பின்னுகாம் நிகழ்த்துவது மிந்தவுப தேசந்
தருவசன சமுதாயம் பலபொருளும் விளக்குந்
தமோரு தேகமாய்த் தானேதா னுகி
நிருவசன மாய்ஞான மோனமொன்று மின்றி
நில்லாத நிலையின்றி நின்றநிலை நிலையே.

(இ-ள்) ஒரு வசனமாகவே முடிந்தபொருள் உரைத்தோம்—ஒரு வார்த்தையாகச் சிவாகமங்களின் முடிவானபொருளைச் சொன்னோம்,—ஒன்றுகக் காண்பதுவே காட்சி—சிவன் வேறு யான் வேறென்னும் வேற்றுமையின்றிச் சிவனே நானென ஒற்றுமை யுறக்

காண்பதுவே உண்மையான சிவாநுபவமாகும்,— இன்னுந்திரும்ப பெருவசனமாக நீ பலபடக்கேட்டாலும்—மீட்டும் மீட்டும் பலவார்த்தைகளாக நீ பலவாறு கேட்பினும்,—பின்னும் நாம் நிகழ்த்துவதும் இந்த உபதேசம்—மேலும் நாம் கூறுவதும் இந்த உபதேசமே,—தருவசனசமுதாயம் பல பொருளும் விளக்கும்—சொல்லப்படும் வாக்குக்களின் கூட்டம் விகற்பத்துக்கேதுவான பலபொருள்களையுந் தோற்றுவிக்கும்,—தடுமாறுது ஏகமாய்த்தானே தானுகி—ஆதலால் பலபட எண்ணித்தடுமாறுது வேற்றுமையின்றிச்சிவனே தானுகி,—நிருவசனமாய் ஞானம் மோனம் ஒன்றும் இன்றி—வாக்கு விகற்பங்களை ஒழித்து ஞானநிலை என்றும் மோனநிலையென்றும் சங்கற்பிக்குஞ் சங்கற்பங்கள் சிறிதுமின்றி,—நில்லாதநிலையின்றி நின்றநிலையே நிலை—வாக்குவிகற்பங்களும் சங்கற்பங்களும் இல்லாதகேவல நிலையைப்பொருந்தி அறியாமையாய்க் கிடவாது அறிவுசொரூபமாய் நின்றநிலையே முடிந்த நிலையாகும். (எ-று)

(பொ-ரை) ஒரு வார்த்தையாகச் சிவாகமங்களின் முடிவான பொருள்களைச் சொன்னோம். சிவன் வேறுயான் வேறென்னும் வேற்றுமையின்றிச் சிவனே நானென ஒற்றுமையுறக்காண்பதுவே உண்மையான சிவாநுபவமாகும். மீட்டும் மீட்டும் பலவார்த்தைகளாக நீ பலவாறு கேட்பினும் மேலும் நாம் கூறுவதும் இந்த உபதேசமே. சொல்லப்படும் வாக்குக்களின் கூட்டம் விகற்பத்திற்கு ஏதுவான பலபொருள்களையுந் தோற்றுவிக்கும். ஆதலால் பலபட எண்ணித்தடுமாறுது வேற்றுமையின்றிச் சிவனே தானுகி வாக்குவிகற்பங்களை ஒழித்து ஞானநிலையென்றும் மோனநிலையென்றும சங்கற்பிக்குஞ் சங்கற்பங்கள் சிறிதுமின்றி, வாக்குவிகற்பங்களும் சங்கற்பங்களும் இல்லாத கேவல நிலையைப் பொருந்தி அறியாமையாய்க்கிடவாது, அறிவுசொரூபமாய் நின்றநிலையே முடிந்த நிலையாகும். (எ-று)

(க-ரை) வாக்கு விகற்பங்களும் சங்கற்பங்களுமின்றிக் கேவலத்தை அடையாது அறிவுவடிவாய் சிவமாய் நிற்கும் நிலையே முடிந்தநிலை என்பதாம். (68)

இந்நிலையே திரும்பாதமுத்தி எனக்கூறி நூலைப்பூர்த்திசெய்கின்றது.

சத்தியவா சகமுரைத்தே முன்னுமின்னு முரைக்கேஞ்
சாக்ஷாத்கா ரதையாந்தா தான்மியசம் பந்தஞ்
சுத்தாத்து விதமிதுவே திரும்பாத முத்தி
துவிதாத்து விதந்துவித மதோபாக மாகும்
ஒத்தவசா தாரணசா தாரணகற் பிதங்க
ளுணர்ந்துசுயம் பிரகாச மாயெங்கு நிறைவாய்த்
தத்துவா தீதமாய்த் தனையறிதன் முத்தி
சர்வஞ்ஞா னேத்தரஞ்சம் பூரணஞ்ச மாப்தி.

(இ-ள்) சத்தியவாசகம் உரைத்தேம்—உண்மையானஉபதேச மொழியைக் கூறினேம்,—இன்னும் உரைக்கேம்—இன்னும் சொல் லுகின்றேம்,—சாக்ஷாத்காரதையாய தாதான்மிய சம்பந்தம் சுத்தாத்துவிதம்—சிவமேதானாக விளங்குகின்ற பிரிக்கமுடியாத சம் பந்தமே சுத்தாத்துவிதமாகும்,—இதுவே திரும்பாத முத்தி—இச் சுத்தாத்துவித நிலையை உணர்தலே மீட்டும் பிறவிக்கு வாராத முத்தியாகும்,—துவிதம் அத்துவிதம் துவிதம் அதோபாகமாகும்— துவிதம் அத்துவிதம் என்னுமிரண்டனுள் துவிதம் அதோபாக மாகும்,— ஒத்த அசாதாரண சாதாரண கற்பிதங்கள் உணர்ந்து— ஆதலால் பொருந்தியுள்ள சிறப்புத்தன்மை பொதுத்தன்மை என் னும் நியமங்களை உணர்ந்து,— சுயம்பிரகாசமாய் எங்கும் நிறை வாய் தத்துவாதீதமாய் தனையறிதல் முத்தி—இயல்பாகவே பிரகாச முள்ளதாயும், எங்கும நிறைவாயும, தத்துவங்களுக்கு அதீதமா யும் தன்னை அறிதலே முத்தியாம்,— சர்வஞானோத்தரம் சம்பூர ணம் சமாப்தி—சர்வஞானோத்தரமென்னுமாகமம் பூரணமாய் முற்றுப்பெற்றது. (எ-று)

(பொ-ரை) உண்மையான உபதேசமொழியைக்கூறினேம் இன்னுஞ்சொல்லுகின்றேம். சிவமே தானாகவிளங்குகின்ற பிரிக் கமுடியாத சம்பந்தமே சுத்தாத்துவிதமாகும். இச்சுத்தாத்துவித நிலையை உணாதலே மீட்டும் பிறவிக்குவாராதமுத்தியாகும். துவி தம் அத்துவிதமென்னுமிரண்டனுள் துவிதம் அதோபாகமாகும். ஆதலால் பொருந்தியுள்ள சிறப்புத்தன்மை பொதுத்தன்மை என்

னும் நியமங்களை உணர்ந்து இயல்பாகவே பிரகாசமுள்ளதாயும், எங்கும் நிறைவாயும் தத்துவங்களுக்கு அதீதமாயும் தன்னை அறிதலே முத்தியாம். சர்வஞானோத்தரமென்னும் ஆகமம் பூரணமாய் முற்றுப்பெற்றது. (எ-று)

(க-ரை) ஆன்மாவின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை உணர்ந்து பொதுவியல்பாகிய துவிதத்தை விட்டுச் சிறப்பியல்பாகிய அத்துவிதமாய் நிற்றலே முத்தி என்பதாம்.

தாதான்மியசம்பந்தம்—பிரிக்கமுடியாதசம்பந்தம். இது மேலுமுரைத்தாம்.

கேவலாத்துவித விசிட்டாத்துவிதங்களை நீக்குதற்கும், அவைபோல் அடை அடுக்காது நின்று இருபொருள்களின் கலப்பை உணர்த்துமென்பதை அறிவித்தற்கும் சுத்தாத்துவிதம் இதுவே என்றார்.

அசாதாரணம்—சிறப்பு. சாதாரணம்—பொது.

கற்பிதம்—சொல்லப்படும் நியமம்.

பொதுத்தன்மையாகிய துவித நிலை பிறப்பைத்தருமென்பதுணர்த்துதற்கு அதோபாகமென்றும், சிறப்புத்தன்மையாகிய சிவனோடுபிரிப்பின்றி நிற்றலை உணர்ந்து தன்னைச்சிவமாக உணர்தலே முத்தி என்பதுணர்த்துதற்குச் "சுயம்பிரகாசமாய் எங்கும் நிறைவாய் தத்துவாதீதமாய் தனையறிதல் முத்தி" என்றும், இம்முத்தியே சகல ஆகமங்களின் முடிபு என்பதுணர்த்துதற்குச் "சர்வஞானோத்தரம் சமாப்தி" என்றும் கூறினார். (69)

---

## சிறப்புப்பாயிரம்.

சருவஞா னோத்தரத்தைச் சந்ததமும் பார்த்தால்
வருமோ பிறவி மறித்திங்—கரிதான
பேரின்ப வெள்ளம் பெருகுமே பற்றோழித்த
தீரருக்கீ தாமேன்றே செப்பு.

(இ-ள்) சருவஞானோத்தரத்தை சந்ததமும் பார்த்தால்—(சகலாகமசித்தாந்தமாகிய) சருவஞானோத்தரமென்னும் இவ்வாகமத்

தின் உண்மைப்பொருளை எப்பொழுதும் சிவஞானங்கண்ணாகக் கொண்டுகாணில்,— இங்கு மறித்து பிறவிவருமோ—இவ்வுலகத்தில் மீண்டும் பிறவியையடைதலில்லை,— அரிதான பேரின்பவெள்ளம் பெருகும்—எளிதிலடையக்கூடாத பேரின்பவெள்ளம் பெருகும்,— ஈது பற்றொழிந்த தீரருக்கே ஆம் என்று செப்பு—இத்தகைய இந்நூலை யான் எனதென்னுந் தேகப்பற்றையும் உலகப்பற்றையும் அறவே நீக்கியொழித்த அதிதீவிரதர பக்குவர்க்கே உரிமையாகுமென்று (அறிவுறுத்தி அவர்கட்கே) உபதேசிப்பாயாக (எ-று)

(பொ-ரை) சகலாகம சித்தாந்தமாகிய சருவஞானோத்தரமென்னும் இவ்வாகமத்தின் உண்மைப்பொருளை எப்பொழுதும் சிவஞானங்கண்ணாகக்கொண்டுகாணில், இவ்வுலகத்தில் மீண்டும் பிறவியை அடைதலில்லை. எளிதிலடையக்கூடாதபேரின்பவெள்ளம் பெருகும். இத்தகைய இந்நூலை யான் எனதென்னுந்தேகப்பற்றையும் உலகப்பற்றையும் அறவே நீக்கியொழித்த அதிதீவிரதர பக்குவர்க்கே உரிமையாகுமென்று அறிவுறுத்தி அவர்கட்கே உபதேசிப்பாயாக. (எ-று)

(க-ரை) இந்நூற்பொருளை ஆராய்ந்தறிபவர்க்கு மீளப்பிறவியில்லை. பேரின்பமாகிய முத்தியுண்டாம் என்பதாம்.

ஒகாரம் எதிர்மறை. ஏகாரம் தீரருக்கென்பதனோடு சென்றியையும். தீரருக்கேயென்பது செப்பு என்பதனோடுஞ் சென்றியையும். ஏகாரம் ஏனையோர்க்குச் செப்புதல் கூடாதெனப் பிரிநிலைக்கண்வந்தது. அறிவுறுத்தியென்பது சொல்லெச்சம்.

இங்கே பிறவியையடையாது, சாலோகாதிபதங்களிலிருந்தவாறே முத்தியடைதலுங்கூடுமாதலின் அவ்வாறே இந்நூல்வழியொழுகினோரும் சாலோகாதி பதமுத்திகளையடைந்து, இங்கே பிறவியையடையாது, அங்கிருந்தவாறே முத்தியடைவரோ என்னும் ஐயத்தையறுத்தற்கு அரிதான பேரின்பவெள்ளம் பெருகும் என்பதனையும் உடன்கூறினர். கூறவே, இந்நூல்வழி ஒழுகினோர் பரமுத்தியையடைவரென்றுணர்ந்துகொள்க.

இப்பாயிரத்தில் எட்டுறுப்புக்கள் வருமாறு:—

சருவஞானோத்தரம் என்றதனால் { ஆக்கியோன்பெயர். வழி. நூற்பெயர். நுதலியபொருள்.

பற்றொழித்த தீராருக்காம் என்றதனால் { யாப்பு. அதிகாரி.

ஈது என்றதனால் —எல்லை.

பிறவிவருமோ பேரின்பவெள்ளம் பெருகுமென்றதனால் { பயன்

எவ்வாறெனில், சருவஞானோத்தரமென்பது ஆகமப்பெயராதலின், அதனால், ஆகமங்களையருளிச்செய்தவர் சிவபெருமானென ஆக்கியோன்பெயரும், சிவபெருமானருள்வழிவந்ததென வழியும், நூற்பெயரும், சகலாகமசிகதாந்தமென நுதலியபொருளும், பற்றொழித்ததீராருக்கு ஆம் என்றதனால், பற்றொழிதற்கான சரியை கிரியை யோகநூல்களையும், ஞானத்தின் பொதுவையுணர்த்தும் நூல்களையுங்கேட்டபின் இந்நூல் கேட்கற்பாற்றெனயாப்பும், அங்ஙனம் கேட்டதுணையானே இருவகைப்பற்றும விட்டவரென அதிகாரியும், ஈது என்றதனால், தமிழ்மொழியிலுள்ள இவ்வாகமம் தமிழ்வழங்குமெல்லைக்கண் வழங்குமென எல்லையும், பிறவிவருமோ பேரின்பவெள்ளம் பெருகுமென்றதனால், பிறவியறுதலும் பேரின்பவெள்ளம் பெருகுதலும் எனப் பாசநீக்கமும் சிவப்பேறுமாகிய இருவகைப்பயனுங்கூறியவாறுகாண்க.

ஆகக் காப்புள்படச்செய்யுள் 71.

---

## சருவ ஞானோத்தர ஆகமம்

ஞானபாதம் தமிழ்மூலமும், முத்திரத்நமென்னும் விருத்தியுரையும், முற்றுப் பெற்றன.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.
சிவஞானசுவாமிகள் திருவடிவாழ்க.

